## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | — | Saiva Samayam (Ōr Arimugam) |
| Author | — | **Dr. P. Arunachalam** |
| Language | — | Tamil |
| Edition | — | First |
| Date of Publication | — | August 1979 |
| Copy right holder | — | The Author |
| Paper used | — | The paper used for this book was supplied by the Govt. of India at Concessional rates. |
| Size | — | 21.5×14.00 cm |
| Printing types used | — | 10, 14, 18 points |
| Number of Pages | — | 144+IV |
| Printer | — | Novel Art Printers, Madras-14 |
| Binding | — | Par |
| Price | — | |
| Publisher | — | **Dr. P. Arunachalam** 40-A, Vellalar colony West Ramavarmapuram Nagarcoil |
| Subject | — | Religion |

# முன்னுரை

'இந்து சமயம் ஒரு கையேடு' என்ற நூலை எழுதிய பின் இந்து சமயத்தின் உட்பிரிவாக உள்ள சைவம், வைணவம் என்னும் இரு பிரிவுகளைப் பற்றியும் சிறிது விளக்கமாக எழுத வேண்டும் என்னும் எண்ணம் பிறந்தது. அதன் விளைவாகவே 'சைவ சமயம்' என்னும் இந்நூலை எழுதத் தொடங்கினேன்.

திருமுறைகளை, இளமையிலிருந்தே ஓரளவு பயின்று வந்ததாலும், சில ஆண்டுகளாகச் சித்தாந்த நூற்களைப் பயின்று கொண்டிருப்பதாலும், இவ்விருவகை நூற்களையும் அடிப்படையாகக் கொண்டே சைவத்தை விளக்க முயன்றுள்ளேன். சைவத்தை முறையாக விளக்க இவ்விருவகை நூற்களோடு சிவபூசையைப் பிற கிரியைகளைப் பேசும் நூற்களையும் நன்ருக கற்றிருக்க வேண்டும். தமிழில் வெளிவந்துள்ள இத்தகைய நூற்கள் சிலவற்றையும் ஓரளவு துணையாகக் கொண்டுள்ளேன்.

'சைவம்' சில கருத்துக்களை எதிர்க்க எழுந்த ஒன்றன்று. தெய்வீக வாழ்க்கையை ஒரு கோணத்திலிருந்து சிறப்பாக விளக்குவது. இப்பிரிவு இந்தியாவில் குமரிமுனையிலிருந்து இமயம் வரையிலும் வாழும் பல மக்களின் வாழ்க்கை நெறியாக உள்ளது. தமிழகத்தில் மட்டுமல்லாது ஸ்ரீலங்காவிலும் மலையகத்திலும் வாழும் தமிழர்களில் பெரும்பான்மையினர் சைவத்தையே தங்கள் வாழ்க்கை நெறியாகக் கொண்டவர்கள். தமிழர் சமுதாயத்தில் தோன்றிய பெரியார்கள், பாடியருளியனவே திருமுறைகள், சித்தாந்த சாத்திரங்களும் தமிழகத்துப் பெரியார்கள் படைத்தனவே. இருப்பினும் சைவம் ஒரு தெய்வீக நெறி என்ற நிலையில், இந்தியப் பண்பாட்டில், தோன்றி வைதீக நெறியாக வளர்ந்ததனை நாம் நினைவிற்கொள்ள வேண்டும். திருமுறைகளும், சித்தாந்த நூற்களும் இவ்வுண்மையினை நன்கு விளக்கும்.

வேத நெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க அவதரித்தவர் ஞானசம்பந்தர் என்பர் சேக்கிழார் சுவாமிகள். ஞானசம்பந்தரும் பிற சமயக் குரவர்களும் வளர்த்த சைவ நெறியினைச் சமயக்குரவர்கள் பொன்னுர் திருவடிகளை நெஞ்சத்திற்கொண்டு இந்நூலை எழுதினேன்.

சமய வாழ்க்கை வாழும் பெரியவர்கள் இதிலுள்ள குறைகளை எடுத்துக் காட்டினுல் திருத்திக்கொள்வேன். 'சைவசமயம்' பற்றி ஒரு தெளிந்த நூல் எழுதும் தகுதி எனக்கில்லாவிடினும் சமயத் துறையில் என்னுலான பணியினை ஓய்வு நேரத்திலேனும் செய்ய வேண்டும் என்னும் ஆசை பற்றியே ஈடுபட்டேன்.

'தெய்வநாட்டம்' என்ற நூல் வெளிவர பலவகையிலும் உதவிய நண்பர் திரு. ஆ. சோதிநாதன் அவர்களே இந்நூல் வெளிவரவும் உதவுகிருர்கள். இதனை ஒரு சமயத் தொண்டாகக் கருதி வெளியிடுதற்கு வேண்டிய முயற்சியினை மேற்கொண்ட அவர்களுக்கு என் நன்றி. வணக்கம்.

நாகர்கோயில்
27—8—'79

ப. அருணுசலம்

# பொருளடக்கம்

# 1. சைவம்

'சைவம்' என்பதை விளக்கும் திருமூலர் 'சைவம் சிவனுடன் சம்பந்தமாவது' என்பர். எல்லாப் பொருள்களையும் கடந்த நிலையிலும், எல்லாப் பொருள்களிலும் ஊடுருவியும் நிற்கும் பரம் பொருளையே 'சிவன்' எனக் கூறினாலும், அப்பரம் பொருள் நம்மோடு தொடர்புகொள்ள எடுத்துக்கொண்ட திருக்கோலமும் அத்திருக்கோலத்தைக் குறிக்கும் திருநாமமும் இங்குப் பரம் பொருளைச் 'சிவன்' எனக் குறித்தற்குக் காரணமாகும். இத் திருக்கோலத்தின் வாயிலாகவும் இத்திருநாமத்தின் வாயிலாக வும் பரம்பொருளோடு தொடர்பு கொண்டு வாழ்தலே 'சைவம்' எனல் வேண்டும். பொதுவாக இந்துக்கள் வழிபாட்டில், கண்ணுக்குப் புலனாகும் ஒளிவடிவமும் காதுக்குப் புலனாகும் ஒலி வடிவமும் இடம் பெறுதல் உண்டு.

இதனால் இறைவனுக்கு நம்போன்று ஒரு குறிப்பிட்ட வடிவமேயுண்டு, நாமமேயுண்டு என்பது பொருளன்று. தன் நிலையில் பரம்பொருளுக்கு என்று ஒரு வடிவமோ ஒரு பெயரோ இல்லாவிட்டாலும், நாம் பரம்பொருளை அடைய, தெய்வீக இன்பத்தில் திளைக்க, அப்பரம்பொருள் நமக்குக் காட்டிய வடிவமே சிவ வடிவம், இவ்வடிவமே தெய்வீக இன்பத்தைப் பெறத் துணை செய்யவல்லது என்பது ஒரு சைவனின் உறுதி. அவ்வடிவத்தை இறைவனே நமக்குக் காட்டியருளினான் என்பதை,

வண்ணம்தான் சேய தன்று வெளிதேயன்று;
அனேகன் ஏகன் அணு அணுவிலிறந்தாய் என்றங்கு
எண்ணந்தான் தடுமாறி இமையோர் கூட்டம்
எய்துமாறறியாத எந்தாய் உன்றன்

வண்ணந்தானது காட்டி வடிவுகாட்டி
மலர்க்கழல் களவை காட்டி வழியற்றேனைத்
திண்ணந்தான் பிறவாமற் காத்தாட் கொண்டாய்
எம்பெருமான் என் சொல்லிச் சிந்திக்கேனே

—திருவாசகம் 29

என மணிவாசகப்பெருமான் பாடுவர். இறைவனுக்கு ஒரு வடிவமும் இல்லை, வண்ணமுமில்லை என்னும்போது அவனோடு கலந்து நின்று இறை இன்பத்தைப் பெறுவது அரிதாகவுள்ளது. அதனால் நான் தொடர்புகொண்டு உய்வதற்கு அவனே அவன் வடிவையும், வணணத்யையும் திருவடியினையும் காட்டி என்னை ஆட்கொண்டான். அத்தரிசனமே என்னை அவனுக்கு அடிமையாக்கியது என்கிறார்.

இறைவனே தன் வடிவை நமக்குக் காட்ட அவன் வடிவை நாம் காண்பதல்லது, நாமாக அவனைக் கண்டுகொள்ள முடியாது என்பதையும் பெரியோர்கள் விளக்குவர்.

மைப்படிந்த கண்ணாளும் தானுங்கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னினல்லான்
ஒப்புடையனல்லன் ஒருவனல்லன்
ஒரூரனல்லன் ஒருவமனில்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வணமும்
அவனருளே கண்ணாகக் காணினல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே —7203

என்பது அப்பர் பாடல்.

## சிவன் திருக்கோலம்

இறைவன் தன் திருக்கோலத்தைக் காட்டினான் என்னும் போது (1) பல அடியவர்களுக்குப் பல நிலைகளில் தன் வடிவினைக் காட்டியமை. (2) பல்வேறு கோலங்களைத் தாங்கி நின்று பல அருட் செயல்களைச் செய்து நம்மை உய்யக் கொண்டுள்ளமை என்னும் இரண்டனையும் குறிப்பிடுவர்.

நானாவித உருவாய் நமையாள்வான்; நணுகாதார்
வானோர் திரிபுர மூன்று எரியுண்ணச் சிலைதொட்டான்

எனப் பாடுவர் சம்பந்தர். இப்பாடல் இரண்டு வகையான சிவன் திருக்கோலங்களை நமக்கு உணர்த்துகிறது. 1. அடியவர்களை ஆட்கொள்வதற்கு அவன் பல வடிவங்களில் தோன்றியருளியது.

2. அவன் அருட்செயலைப் புலப்படுத்தும் புராணங்கள் வழி உணரலாகும் திருக்கோலம். மணிவாசகர் வரலாற்றிலே குருமூர்த்தம் கொண்டு எழுந்தருளிவந்ததை, அடியவர்களை ஆட்கொள்ள அவன் எடுத்த கோலத்தில் ஒன்ருகக் கூறலாம். பெரிய புராணம், திருவிளையாடற்புராணம் போன்ற நூற்களில் இத்தகைய நிகழ்ச்சிகள் பலவற்றைக் காண்கிருேம். பொதுமக்கள் கோலத்தில், அடியவர்கள் கோலத்திலெல்லாம் அவன் எழுந்தருளு கின்ருன். இவற்றைத் தோன்றி மறைந்த வரலாற்றுத் திருக் கோலங்களாகக் கருதுவதால், வழிபடும் திருக்கோலங்களாகக் கொள்வதில்லை.

புராணங்கள் நிலையான உண்மையினைப் பேசுவன; ஒரு குறிப்பிட்ட காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியைப் பேசுவனவல்ல என்பர். எனவே புராண திருக்கோலங்களையே பெரிதும் வழிபாட்டுத் திருவுருவங்களாகக் கருதுவர். 'வானேர் திரிபுரம் மூன்று எரி உண்ணச் சிலைதொட்டான்' என்பதைத் திரிபுராந் தகன் என்பர். ஆகமங்கள் வழிபடுவடிவங்களில் இதனையும் ஒன்ருகக் குறிப்பிடும் என்பர்.

வழிபாடு என்ற சிந்தனை வரும்போது ஆகமம் என்ற சிந்தனையும் சைவர்களுக்கு உடன் வருதல் இயல்பு. ஆகமத்தின்படி, மூலமூர்த்தி, சிவலிங்கமே; புராண அடிப்படையில் தோன்றி, வழிபாட்டுக்கு உரியவாகக் கருதப்படும் மூர்த்தங்கள் அனைத்தும், லிங்கத்திலிருந்து தோன்றியனவே. "லிங்கத்தினின்றும் தோன்றிய வடிவங்கள் அறுபத்திநான்கு. இவை அஷ்டாஷ்ட ($8 \times 8 = 64$) விக்கிரகங்கள் என்று ஆகமத்தில் கூறப்படுகின்றன. இவ்வடிவங்களைச் சுருக்கி இருபத்தைந்து மூர்த்தமாகக் காரணம் என்ற ஆகமம் கூறிற்று, என விளக்கிக் கீழ்வரும் மூர்த்தங்களைக் குறிப்பிடுவர்.

1. சந்திர சேகரர் - சந்திரனைத் தலையில் சூடியவர்
2. உமா சகாயர் - உமாதேவிக்கு அருளியவர்
3. இடபாரூடர் - இடபவாகனத்தில் எழுந்தருளுபவர்
4. நடராசர் - தாண்டவம்புரியும் கோலம்
5. கல்யாண சுந்தரர் - உமாதேவியைத் திருமணம் செய்யும் திருக்கோலம்
6. பிக்ஷாடனர் - தாருகவனத்து முனிவர்களின் செருக் கடக்க, பிச்சை ஏற்கும் கோலத்தில் எழுந்தருளியமை

7. காமாரி - மன்மதனை எரித்த கோலம்
8. காலாரி - காலனை உதைத்து அடக்கிய கோலம்
9. திரிபுராரி - திரிபுரத்தை அழித்த கோலம்
10. ஜலந்தரர் - சலந்தரனை வென்ற கோலம்
11. கஜாரி - கயாசுரனை அழித்த கோலம்
12. வீரபத்ரர் - தக்கனை அழித்த கோலம்
13. ஹரியர்த்த மூர்த்தி - திருமாலை ஒருபாகமாக உடையவர்
14. அர்த்தநாரி-தேவியைப் பாகமாக உடையவர்
15. கிராதமூர்த்தி - அருச்சுனனுக்காக - வேடர்கோலம் கொண்டமை
16. கங்காளர் - எலும்பு மாலை அணிந்த திருக்கோலம்
17. சண்டேசானுக்ரகர் - சண்டேசனுக்கு அருள் செய்த கோலம்
18. நீலகண்டர் - நஞ்சுண்டு கறுத்த கண்டத்தை உடையவர்
19. சக்ரதாதா - திருமாலுக்குச் சக்கிராயுதத்தைக் கொடுத்த கோலம்
20. விக்னப்ரசாதர் - விக்னேஸ்வரனுக்கு அனுக்கிரகம் செய்தவர்
21. சோமாஸ்கந்தர் - உமையோடும் கந்தனோடும் கூடிய திருக்கோலம்
22. ஏகபாதமூர்த்தி – சங்காரகாலத்தில் ஆன்மாக்கள் சத்தியில் ஒடுங்க, சத்தி சிவத்தில் ஒடுங்கிய திருக்கோலம்
23. சுகாசனர் - சுகாசனத்திலிருந்து தேவிக்கு உபதேசம் செய்த திருக்கோலம்
24. தக்ஷிணாமூர்த்தி - சனகர் முதலாகிய நால்வருக்கு, ஆலின் கீழிருந்து அறமுரைத்த கோலம்
25. லிங்கோத்பவர் - லிங்கத்தில் தோன்றியருளிய திருக்கோலம்

(இவற்றை மகேஸ்வர வடிவம் என்பர்)

இவற்றுக்கு வேறாகச் 'சரபமூர்த்தி' திருக்கோலம் (நரசிம்மனின் வேகத்தை அடக்கிய கோலம்) வழிபடப் படுகிறது. திரிபுவனத்தில் இவ்வழிபாடு உள்ளது என்பர்.

இத்திருக்கோலங்கள் பலவும் புராணக் கால்வழியே வந்தனவாயினும், இவற்றுக்கெல்லாம் மூலமூர்த்தியாக உள்ள சிவலிங்

கமே பிரதிட்டிக்கப் பெற்று வழிபடத்தக்க சிறப்பான மூர்த்தமாகக் கருதப்படுகிறது. சிவலிங்கம் என்பதற்குச் சிவனைச் சுட்டி நிற்கும் அடையாளம் என்பதே பொருள். இதனைக் குறி என்று தமிழில் கூறுவர். 'சிவக்குறி'[1] என்றும் சிவலிங்கத்தைக் கூறுவதுண்டு. சிவலிங்கத்தின் இயல்புணர்ந்து வழிபடாதவர்க்கு,

குறிகளும் அடையாளமும் கோவிலும்
நெறிகளும் அவர் நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
பொறியிலீர் மனம் என்கொல் புகாததே —6117

என்னும் அப்பர் சுவாமிகள் பாடலைத்தான் நினைப்பூட்ட வேண்டும்.

சைவர்களின் பல திருக்கோவில்களிலும் சிவலிங்கமே பிரதிட்டிக்கப் பெற்றுள்ளது. இத்திருக்கோலம் பரம்பொருள் மக்களோடு தொடர்பு கொள்ள எடுத்த முதன்மையான கோலம் என்பது சைவர்கள் நம்பிக்கை. 'சிவன் பகுப்பின்றி எங்கும் வியாபித்திருப்பினும், சிவலிங்கத்தில், தயிரில் நெய்போல் விளங்கியும் மற்றை இடங்களில் பாலில் நெய்போல் விளங்காமலும் இருப்பதாகக் கூறுவர்.

சிவலிங்கத்தை அருவுருவ நிலையிலும் பிற திருக்கோலங்களை உருவ நிலையிலும் சாத்திரங்கள் விளக்குவதும்[2] 'மூல நிலையை' உணரத்துணை செய்யும்.

## நாமம்

பரம்பொருளுக்குத் தன் நிலையில் தனக்கு என்று ஒரு நாமம் இல்லை என்பதை ஏற்றுக்கொண்டாலும், அது மக்களோடு ஆன்மாக்களோடு —தொடர்பு கொள்ள எடுத்துக்கொண்ட நாமம் 'சிவன்' என்பது சைவர்களின் உறுதி. 'சிவன் என்னும் நாமம் தனக்கே உரிய செம்மேனி எம்மான்' என்னும்போது அந்நாமத்தில் அடியவர் கொண்டிருந்த உறுதி புலப்படுகிறது. உலகிலுள்ள எல்லா ஒலிகளாகவும் இறைவனே விளங்குகிறான் என்பதை ஏற்றுக்கொண்டாலும் 'சிவன்' என்னும் ஓசையே அப்பரம் பொருளை நம்மோடு நன்கு பிணைக்க வல்லது என நம்பினர்.

---

1 தகுசிவக்குறி அர்ச்சிப்பர் (சூக்சம் முத்தி 1. 18)

2 லிங்கம் என்பதற்குப் படைத்தல் காத்தல் முதலியவைகளால் உலகத்தைச் சித்திரிப்பது (லிங்க-சித்திரித்தல்) என்றும் பொருள் கூறுவர்,

ஓசை ஒலி எல்லாம் ஆனாய் நீயே
உலகுக்கொருவனாய் நின்றாய் நீயே —6628

எனப் பாடிய அப்பர் சுவாமிகளே

சிவனென்னும் ஓசையல்லது அறையோ
உலகில் திருநின்ற செம்மையுளதே —4230

என்றும் பாடினர். 'ஒரு நாமம் ஒருருவம் ஒன்று மிலான்' எனப் பாடிய மணிவாசகரே 'சிவனே, சிவனே' என ஓலமிடுகிறார். சிவநாமமே முதன்மையாகக் கொண்டு ஒலிக்கத் தக்கது; அவ்வாறு ஒலிக்காதவர்கள் நல்ல விதியற்றவர்களே என்பர் திருமூலர்.

சிவ சிவ என்கிலர் தீவினையாளர்
சிவ சிவ என்றிடத் தீவினை மாளும்
சிவ சிவ என்றிடத் தேவருமாவர்
சிவ சிவ என்னச் சிவகதி தானே —திருமந்திரம் 2716

'சிவ' என்பது 'நாமம்' என்ற அளவில் அடங்காது சைவர்களின் வழிபாட்டுக்குரிய மந்திரமாகவும் கருதப்படுவது. இந்நாமம் —சிவ—அடிப்படையாகவே 'நமச்சிவாய' என்னும் நாம மந்திரமும் 'சிவாயநம' என்னும் மந்திரமும் எழுந்தன.

சிவலிங்கத்தை மூலமூர்த்தமாகக் கொண்டாலும் புராண அடிப்படையில் எழுந்த திருக்கோலங்கள் பலவும் எவ்வாறு வழிபடத்தக்க திருக்கோலங்களாகக் கொள்ளப்பட்டு வருகின்றனவோ, அதைப்போல் 'சிவ' நாமத்தை மூலமாகக் கொண்டாலும் 'புராண இதிகாச அடிப்படையில் எழுந்த பிற நாமங்கள் பலவும் சிவன் திருநாமங்களாகக் கொள்ளப்பட்டு அவன் புகழை வெளிப்படுத்துவனவாக அடியவர்களால் கூறப்பட்டு வருகின்றன.

'பாரதம்' என்ற இதிகாசம் வழியாக,சகஸ்ரநாமங்கள் வழங்கலாயின என்பர். சிவனுக்கு அருச்சனை செய்யும்போது சிவசகஸ்ர நாமங்களைக் கூறி அருச்சனை செய்வர். 'ஆயிரம் பேருகந்தானும் ஆரூர் அமர்ந்த அம்மானே' என்றும் அடியவர்கள் பாடுவர். சிவ நாமங்களுள் நமச்சிவாயம், சம்பு, சங்கரன், உருத்திரன், முக்கண்ணன், மகாதேவன், பசுபதி, ஆதிரையான், சதாசிவன், தாணு, விசுவநாதன், வைத்தியநாதன், பரமேசுவரன் என்னும் நாமங்கள் மிகுதியாகப் பயிலப்பட்டு வருகின்றன.

இத்திருநாமங்கள் உணர்த்தும் சொற்பொருளை முதன்மையாகக் கருதாது, இறைவனின் ஒலிவடிவங்களாகவே கொண்டு ஈடுபாட்டுடன் இந்நாமங்களைப் பாடுவர். அவ்வாறு பாடிவரினும், இச்சொற்

பொருளை விரித்துக் கூறியும் தெய்வீகச் சிந்தனையை, வாழ்க்கை இலட்சியத்தைச் சுட்டிக் காட்டுதல் உண்டு.

சங்கரன், சம்பு, என்னும் பெயர்கள், நன்மையைத் தருபவன் என்னும் பொருளை உணர்த்துவன. அப்பர் சுவாமிகள்

சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கலால்
நலமிலன் நாடொறும் நல்குவானலன்
குலமிலராகிலும் குலத்துக்கேற்பதோர்
நலமிகக்கொடுப்பது நமச் சிவாயவே—4267 எனப்பாடுவர்

நலம்கொடுக்கும் நம்பியை நள்ளாற்றுளை
நானடியேன் நினைக்கப் பெற்றுய்ந்தவாறே —6449

என்னும் பாடலும் இத்தகைய சொற்களின் விளக்கமாகலாம். 'சிவம்' என்னும் சொல்லுக்கு 'நன்மை' 'மங்களம்' 'முத்தி' எனப் பொருள் கூறினும் 'சிவன்' என்னும்போது சிறப்பாக ஒலிக்கப்படுவது 'செம்மை' என்ற பொருளே.

சிவன் எனும் நாமம் தனக்கே உடைய
செம்மேனி எம்மான் —5216

எனப் பாடும்போது கண்ணொளிக்குப் புலனாகும் அவன் சிவந்த நிறமே, புறச்செம்மையே நினைக்கப்படுகிறதெனலாம். ஆயின்

செம்மையே ஆய சிவபதம் —திருவாசகம் 536

என்னும் போது 'ஞானத்தால் உணரலாகும்' அகச்செம்மையே உணர்த்தப்படுவதாகக் கொள்ள வேண்டும். இவ்வகச் செம்மையினையே, 'செம்மையுள் நிற்பராகில் சிவகதி[1] விளையுமன்றே. —தேவாரம் 4895 என்னும் பாடலும் உணர்த்துகிறது. இவ்வாறு பாடிய அப்பர் சுவாமிகளும் இச்செம்மையில் நின்றவரே என்பதை,

'திரு நின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக்கரையன்தன் அடியார்க்கும் அடியேன்'
—தேவாரம் 7620

எனச் சுந்தரரும் அறிவுறுத்துவர்.

சில வரையறைகளோடு கூடிய நிலையில் பரம்பொருளைக் குறிப்பிடுவதால் சிவனே வரையறையுடையவன் என்று கருதிவிடக்

1 சிவகதி என்ற சொல்லைப் பிறரும் எடுத்தாளுதற்கு, இவ்வகச் செம்மையினை இச்சொல் உணர்த்துவதும் காரணமாகலாம். 'சிவகதி' சைனர்கள் அடையத் தக்க பேறாகச் சிலம்பு கூறும். I-10-180

கூடாது. அவன் அளவிறந்த தன்மையினையும் சமயக் குரவர்கள் பலவாகப் பாடுவர்.

இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய்
எறியும் காற்றுமாகி
அருநிலைய திங்களாய், ஞாயிறாகி ஆகாசமாய்
அட்ட மூர்த்தியாகிப்
பெருநலமும் குற்றமும் பெண்ணும் ஆணும் பிறருருவும்
தம் முருவும் தாமேயாகி
நெருநலையாய் இன்றாகி நாளையாகி நிமிர்புன்
சடையடிகள் நின்றவாறே —7163

என்பது அப்பர் திருவாக்கு. இவ்வாறு எல்லாமாகவும் இருக்கும் பரம் பொருள் இவற்றுக்கு வேறாகவும் விளங்குவது என்றும், அருள் காரணத்தாலேயே வரையறைக்குட்பட்ட ஒரு கோலத்தைத் தாங்கியுள்ளது என்றும் கூறுவர். இதனையும் அப்பர் சுவாமிகளே,

விரிகதிர் ஞாயிறல்லர் மதியல்லர் வேதவிதியல்லர் விண்ணும் நிலனும்
திரிதரு வாயுவல்லர் செறுதீயுமல்லர் தெளிநீருமல்லர் தெரியில்
அரிதரு கண்ணியாளை ஒருபாகமாக அருள்காரணத்தில் வருவர்
எரியரவாரமார்பர் இமையாருமல்லர் இமைப்பாருமல்லர்
இவரே—4231

என விளக்குவர்.

## சிவபரத்துவம்

பரம்பொருளைப் புராணக் கால்வழியே, பிரமன், மால், (உருத் திரன்) சிவன் என மும்மூர்த்திகளாகக் கொண்டு வழிபடும்போது 'சிவனு'க்குப் பரத்துவம் கூறலே இங்கு முதன்மையாகக்கொள்ளப் படுகிறது. சிவனே மும்மூர்த்தியாகத் தோன்றி அருள்கின்றான். அவ்வாறு தோன்றினாலும் சிவன் இம்மூவர்க்கும் மேலானவன் என்ற கருத்தினையே சைவ-புராணங்களும், பிற சைவ நூற்களும் கூற முயல்கின்றன. 'படைத்து அளித்து அழிப்ப மும்மூர்த்தி களாயினை' எனப் பாடியதோடு 'மூவர்கோன்' என்றும் பாடுவர்.

பரத்துவம் கூறும்போது ஏனைய மூர்த்தங்கள் தேவர்களாகவும் சிவன் மகாதேவனாகவும் விளங்குகின்றான்.

வாதுசெய்து மயங்குமனத்தராய்
ஏது சொல்லுவீராகிலும் ஏழை காள்

யாதோர் தேவர் எனப்படுவார்க்கெல்லாம்
மாதேவன் அல்லால் தேவர் மற்றில்லையே —6287

என்பது அப்பர் வாக்கு.

மேலும் இந்துக்கள் நடுவே, வணங்கப்படும் தேவி, திருமால், விநாயகர், முருகன் அனைய தேவர்களும் மூர்த்தங்களும் வழிபடும் திருக்கோலமே சிவன் திருக்கோலம் என்பர்.

## சைவன்

இச்சிவனோடு தங்களுக்குப் பிரிக்க முடியாத தொடர்புண்டு என்ற உறுதியில் வாழ்பவர்களே சைவர்கள்.

என் தாயோடு என்னப்பன் ஏழேழ் பிறவிக்கும்
அன்றே சிவனுக்கு எழுதிய ஆவணம்
ஒன்றாய் உலகம் படைத்தான் எழுதினான்
நின்றான் முகில்வண்ணன் நேரெழுத்தாயே
—திருமந்திரம் 1876

என்பர் திருமூலர். இங்கு, சிவன், சிவநாமத்தோடும் சிவக்கோலத்தோடும் விளங்கும் பரம்பொருளே.

இப்பிணைப்பினைப் பல அடியவர்கள் வாழ்க்கையிலும் காண்கிறோம். இத்தகைய 'சிவசம்பந்தம்' பெற்று வாழ்வதோடு சிவனுடைய பண்புகளைப் பெற்று வாழ்தலாலும் ஒருவன் சைவனாகிறான். ஒருவன், பாசத்தினுடைய தொடர்பை விட்டுவிட்டுச் சிவத்தின் தொடர்பைப் பெறும்போதே உண்மையான சிவசம்பந்தம் பெறுகிறான். அதன் விளைவாக, சிவகுணங்கள் ஆன்மாவில் ஒளிவீச வாழ்கிறான் என்பது பொருள்.

சிவனை நினைக்கும்போது சில பண்புகளோடு கூட நினைப்பதாலேயே அவனைச் சிவன் என்று கூறுவதோடு, 'சைவன்' என்றும் கூறுவர். 'சைவா போற்றி, தலைவா போற்றி' என்பர் மாணிக்கவாசகர்.

சிவாகமங்கள் இறைவனை 'அநாதி சைவன்' எனக் குறிப்பிடுவதையும் பெரியோர்கள் எடுத்துக் காட்டுவர்.

சிவன் பண்புகளாக, சிறப்பாக எட்டனைக் கூறுவர். 1. தன் வயத்தனாதல், 2. தூயவுடம்பினனாதல், 3. இயற்கை உணர்வினனாதல், 4. முற்றுணர்வினனாதல், 5. இயல்பாகவே பாசங்

களின் நீங்கல், 6. அளவிலா ஆற்றலுடையனாதல், 7. வரம்பிலா இன்பம் உடையனாதல், 8. பேரருள் உடையனாதல் என்பர்.

## உட்பிரிவுகள்

இச் சைவமும் பல உட்பிரிவுகளை உடையது. இந்நாளில், காஷ்மீரி சைவம், வீரசைவம், சித்தாந்த சைவம், என்னும் பிரிவினரைப் பற்றிக் கூறக் கேட்கிறோம். திருமந்திரம் 1. சுத்த சைவம் 2. அசுத்த சைவம் 3. கடுஞ்சுத்த சைவம், 4. மார்க்க சைவம் என நான்கு பிரிவினைப் பற்றிப் பேசுகிறது. சித்தாந்த நூற்களில் அகப்புறச் சமயம், அகச் சமயம், என்னும் தலைப்புகளில் (6+6) பன்னிரண்டு உட்பிரிவுகளைக் கூறுவர். அவை 1. பாசுபதம் 2. மாவிரதம் 3. காபாலம் 4. வாமம் 5. பைரவம் 6. ஐக்கியவாத சைவம் 7. பாடாணவாத சைவம் 8. பேதவாத சைவம் 9. சிவசமவாத சைவம் 10. சிவசங்கிராந்தவாத சைவம் 11. ஈசுவரவவிகாரவாத சைவம் 12. சிவாத்துவித சைவம். இப் பன்னிரண்டற்கும் வேறான, ஒன்றே சித்தாந்த சைவம். இங்குக் காளாமுகத்தைப் பற்றிய குறிப்பில்லை. 'மாவிரதத்தை ஒத்த ஒன்று எனக் கூறுது விட்டனரா? என்பதும் தெரியவில்லை. உமாபதியாருடைய சங்கற்ப நிராகரணம் அகச் சமயங்களுள் ஒன்பது சமயங்களை மறுக்கிறது. தத்துவப் பிரகாசம் அகச்சமயம் எட்டு என்கிறது.

இங்குக் கூறப்படுவன, கோட்பாடுகள் அளவில் சில கிரியைகள் அளவில் சிறிது மாறுபடுவன என்று உரைகளிலிருந்து அறிகின்றோமே தவிர, இவை முற்றாக மாறுபட்டு நிற்கும் சமயக் கோட்பாடுகளல்ல. இவற்றைப் பற்றி விரிவாக அறிதற்கும் கருவி நூல்கள் இல்லை. அறிஞர்கள் சிலர் பாசுபதம், காளாமுகம் போன்ற சில பிரிவுகளைப் பற்றி ஓரளவு ஆராய்ந்து எழுதியுள்ளார்கள்.

சைவத்தைப் பதினாறு வகையாகப் பாகுபடுத்திக் கூறும் மரபுமுண்டு. அவை 1. ஊர்த்தசைவம் 2. அனாதிசைவம் 3. ஆதிசைவம் 4. மகாசைவம் 5.பேதசைவம் 6. அபேதசைவம் 7. அந்தரசைவம் 8. குணசைவம் 8. நிர்க்குணசைவம் 10. அத்துவாசைவம் 11. யோகசைவம் 12. ஞானசைவம் 13. அணுசைவம் 14. கிரியாசைவம் 15. நாலுபாதசைவம் 16. சுத்தசைவம்.

இவ்வாறு கூறுவதற்கும் தெளிந்த அடிப்படையிருப்பதாகத் தெரியவில்லை. சில கருத்துக்களை வற்புறுத்தும் நிலையிலேயே

'சைவம்' இவ்வாறு பாகுபடுத்தப்படுகிறது எனல் வேண்டும். சில தத்துவங்களை, சில கிரியைகளை வற்புறுத்தும் நிலையில், பல பிரிவுகளில் சைவத்தைப் பலவாகச் சிந்திக்கின்றார்கள் என்பதைத் தவிர, சிவனிடத்தில் உறுதிகொண்ட மக்கள், இவ்வடிப்படையில் தொடர்பின்றிப் பிரிந்து வாழ்ந்தார்கள் எனக் கூறமுடியாது. ஆக மங்களும் கிரியைகளை ஒன்றுபோல் கூறவில்லை என்பர். எனவே இவ்வேறுபாடு ஆழமான ஒன்று எனக் கூற வேண்டுவதில்லை.

# 2. அடிப்படை நூற்கள்

சைவம், வேதங்களையும் சிவாகமங்களையுமே தன் அடிப் படை நூற்களாகக் கொண்டுள்ளது என்பர். வேதங்களும் சிவாகமங்களும் பரமசிவனால் அருளப்பட்டவை என்னும் நம்பிக் கையே அதற்குக் காரணம். பரமசிவனால் செய்யப்பட்டமை பற்றியே வேதங்கட்குப் பிரமாண முண்மை துணியப்படும்; அம் முறையானே சிவாகமங்களும் பிரமாணமாதல் துணியப்படும் என்பர் சிவஞான முனிவர்.[1] வேதாகமங்கள் சிவபிரானால் அருளப்பட்டவை என்பதைச் சைவசமயத் தலைவர்கள் பலரும் குறிப்பிட்டுள்ளனர்.

தொகுத்தவன் அருமறை அங்கம்; ஆகமம்
வகுத்தவன் வளர் பொழிற் கூக மேவினான்
மிகுத்தவன் மிகுத்தவர் புரங்கள் வெந்தறச்
செகுத்தவன் உறைவிடம் திருவிற்கோலமே —3047

என்பது சம்பந்தர் தேவாரம்.

'வேதமோடாகமம் மெய்யாம் இறைவன் நூல்' என்பது திருமந்திரம். (2397)

வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கும் நூல் இவற்றின் விரிந்த நூல்கள்;
ஆதிநூல் அனாதி அமலன் தருநூல் இரண்டும்
ஆரண நூல் பொது; சைவம் அருஞ்சிறப்பு நூலாம்
—8. 2. 15

என்பது சித்தியார். இதனோடு வேதங்களைச் சிவபிரான் மூச்சுக் காற்றுக்களாகவும் பெரியோர் கூறுவர்.

வேதாகமங்களையடுத்து, தமிழைத் தாய் மொழியாகவுடைய சைவமரபினர், திருமுறைகளையும், சித்தாந்தக் கோட்பாட்டில்

---

1 சிவஞானபாடியம் பக் 18

பிடிப்புடையவர்கள் அவற்றேடு மெய்கண்ட நூற்களையும் பிரமாண நூற்களாகக் கொள்வர். அவ்வாறு கொள்வதும், திருமுறைகளும் மெய்கண்ட நூற்களும் வேதாகமங்களின் வழித்தோன்றியவை என நம்புவதாலேயாம். 'வேதாகமங்களையேனும் அவற்றின் வழிநூல் சார்பு நூல்களையேனும் சற்குருமூலமாகக் கற்றல் கேட்டல் செய்யாதொழியின் சிவனை வழிபட்டுய்தல் கூடாது. கற்றல் கேட்டல் செய்த வழியும் சிவனை வழிபடாதொழியின் பயனில்லை என்பர். வேதாகமங்களின் வழிநூல் சார்பு நூல்களாகவே திருமுறைகள் சித்தாந்த சாத்திரங்களைக் கொள்ள வேண்டும்.

## வேதம்

இங்கு வேதங்கள் என்று கூறப்படுவன வியாசர் தொகுத்த தாகக் கூறப்படும் இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பனவே. திருமுறைகள் இவற்றை விதந்து கூறலுமுண்டு. 'இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஓர்பால்' (திருவாசகம்) 'சாந்தோக சாமம் ஓதும் வாயானை.' (தேவாரம்—6745)

திருமுறைகள் பலவும், சிவனே வேதத்தைத் தந்தருளியவன் எனக் கூறுவதோடு அவன் எப்போதும் வேதத்தை ஓதிக் கொண்டிருப்பவனுகவும் பாடும். 'அங்கம் ஓராறும் அருமறை நான்கும் அருள் செய்த (1081) சிவனே, 'வேதம் ஓதி வெண்ணூல் பூண்டு வெள்ளை எருதேறி (722) வருபவராகவும், மந்திரவேதங்கள் ஓதும் நாவராக (62) விளங்குவதாகவும் பாடுவர் சம்பந்தர். அப்பர் சுவாமிகளும் 'பாடினர் மறைகள் நான்கும்' (4408) என்றவர் 'ஓதினர் வேதம் வாயால்' என்றும் பாடுவர். 'மறை நான்கும் விரித்துகந்தீர்' என்ற சுந்தரர் 'சுருங்கா மறை நான்கினையும் ஓதியன், உம்பர்தங்கோன்' (8209) என்றும் பாடுவர். 'மிக்க வேத மெய்ந்நூல் சொன்னவனே' என்ற மாணிக்கவாசகர், வேதமொழியர், வெண்ணீற்றர் செம்மேனியர் (அன்னைப்பத்து. 1) என்றும் பாடுவர். சிறந்த சிவயோகியாக வாழ்ந்த திருமூலரும்

> வேதத்தை விட்ட அறமில்லை வேதத்தில்
> ஓதத்தகும் அறம் எல்லாமுள, தருக்க
> வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
> வேதத்தை ஓதியே வீடுபெற்ருர்களே.—திருமந்திரம் 51

என வேதச் சிறப்பைப் பாடுவர்.

வேதம் சிவபிரானே செய்த நூல் என்பதோடு, சிவபரத்துவத்தைப் பேசுவது என்ற உறுதியும், வேதத்தைப் பிரமாண

நூலாகச் சைவம் ஏற்றுக் கொண்டதற்குக் காரணமாதல் வேண்டும். 'இருக்கின் மலிந்த இறைவர் அவர் போலாம், அருப்பின் முலையாள் பங்கத்தையரே' எனப் பாடுவர். (259) வேதங்களில் பல தேவர்களை ஒருவர் கண்டு கூறலாம். ஆயின் அப்பல தேவர்களும் மூலமாகிய ஒரு பொருளின் பல தோற்றங்கள் என இருக்கு வேதமே கூறும் என்பர். 'கடவுள் ஒருவரே' ஆயினும் அறிவாளிகள், இந்திரன், மித்திரன், வருணன், அக்நி, திவியன், சுபர்ணன். கருத்மாந், மாதரிஷ்வான், என்னும் பல பெயர்களால் அவரைச் சொல்கிறார்கள், (இருக்குவேதம்) இந்தப் பிரபஞ்சம் முழுவதும் பரமபதி ஒருவராலே வியாபிக்கப் பட்டிருக்கிறது, (எசுர்வேதம்) பிரபஞ்சம் முழுவதற்கும் பிராணனு யிருப்பவரே! உமக்கு வணக்கம். (அதர்வணம்). இவ்வாறு விளக்கப்படும் மூலப்பொருள் 'சிவனே' என்ற உறுதி சைவர் களுடையது.[1] இதனாலேயே சைவ சமயக்குரவர்களும் 'வேதத் தின் பொருளானாய்' (அப்பர்) 'மறையின் பொருளானவனே' (சுந்தரர்) எனக் குறிப்பிடலாயினர். இம்மூலப்பொருள் சிவனே என்பதற்குத் 'திருவுருத்திரம்' போன்ற எசுர்வேதப் பகுதிகள், சிவநாமத்தை விதந்து பாடுவதையும் எடுத்துக் காட்டுவர். நமச்சிவாய, சிவதராய என்னும் வழக்குகளை எசுர் வேதத்தில் காண்பதோடு, சிவாய நம, சிவலிங்காய நம என்னும் வழக்குகளை யும் தைத்திரீய ஆரண்யகத்தில் காண்கிறோம். எனவே வேத புருஷனுக்குத் திருவுருத்திரம் கண்; பஞ்சாக்கரம் கண்மணி என்பர்.[2] இவ்வடிப்படையைக் கொண்டே பின்னர் எழுந்த சைவபுராணங்களும் வேதங்கள் சிவபரத்துவத்தைப் பாடு வனவே எனப் பேசுகின்றன.[3]

வேதத்தின் ஞானபாதமாகப் பேசப்படும் உபநிடதங்களிலும் 'சுவேதாசுவதர' உபநிடதம் சிவபரத்துவத்தைப் பேசும் சைவ உபநிடதம் என்பர்.[4] பிற்காலத்தில் சைவ உபநிடதங்கள் பல தோன்றியுள்ளமையும் சைவர்கள் வேதக் கால்வழியே தங்கள் சிந்தனையை விளக்க முயன்றதைக் காட்டும்.

வேதங்கள் சிவபரத்துவத்தைப் பேசுவன எனக்கூறிய தோடமையாது, வேதமந்திரங்களைச் சிவவழிபாட்டுக்குரிய மந்திரங்களாகவும் கொண்டனர். எசுர் வேதத்திலுள்ள திரு

---

1 சிவபாதசுந்தரம் 'வேதம்' தருமபுரமடம் மலர்
2 ஆறுமுகநாவலர் 'உருத்திரபதி நாயனார் புராணம்'— சூசனம்
3 காஞ்சிப்புராணம் வயிரவேசப்படலம்
4 சிவஞானபாடியம் 86–7

உருத்திரத்தை வழிபட்டுய்யும் மந்திரப் பகுதியாகக் கொள்ளப் பட்டமையினை, இங்கு முக்கியமாகக் குறிப்பிடவேண்டும்.

ஆய வந்தணர் அருமறை உருத்திரம் கொண்டு
மாயனுரறியா மலர்ச் சேவடிவழுத்தும்
தூய வன்பொடு தொடர்பினில் இடையருச் சுருதி
நேய நெஞ்சினராகி அத்தொழில்தலை நின்ருர். —1038

என, உருத்திரப் பசுபதிநாயனுரைக் குறிப்பிடுவர் சேக்கிழார் சுவாமிகள். 'உருத்திரப்பசுபதியார்' என்னும் போதே திருவுருத் திரத்தை வழிபாட்டுக்குரிய கருவியாகக் கொண்டவர் என்பதே பொருளாதல் வேண்டும். இவ்வழிபாட்டினைச் சிவபிரான் விரும்பி ஏற்றுக் கொண்டார் என்பதையும் சேக்கிழார்,

காதலன்பர்தம் அருந்தவப்பெருமையும் கலந்த
வேத மந்திர நியதியின் மிகுதியும் விரும்பி
ஆதிநாயகர் அமர்ந்தருள் செய்ய, மற்றவர்தாம்
தீதிலா நிலைச் சிவபுரி எல்லையிற் சென்ருர் —1043

என்னும் பாட்டால் விளக்குவர். வேதமந்திரத்தால் சிவனை வழி பட்ட செய்தியினைத் திருமுறைகள் பலவற்றிலும் காண்கிருேம்.

வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாக
போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்கும் வேளூரே. —1922
மறையாயின சொல்லி ஒண்மலர் சாந்தவை கொண்டு
முறையான் மிகு முனிவர் தொழு முது
குன்றடைவோமே —123

இவ்வாறு கூறியதோடமையாது வேதங்களே சிவபிரானைத் தொழுதவாறுள்ளன என்னும் கருத்தில்,

வேதங்கள் தெரிழுதேத்தும் விளங்குதில்லைக் கண்டேனே
—திருவாசகம் 482

என்றும் பாடுவர்

பஞ்சாக்கரமும், சைவர்கள் அளவில் வேத மந்திரமே 'வேதம் நான்கினும் மெய்ப் பொருளாவது, நாதன் நாமம் நமச்சிவாயவே என்பது சம்பந்தர் தேவாரம்.

விதிவழிப்பட்ட சிவபூசையின்போதும், மிருத்தியுஞ்சய மந்தி ரத்தை ஓதுதல் உண்டு; மிருந்தியுஞ்சயன் என்பதும் எமனை வெல்லும் சிவனையே குறிக்கும்.

மேலும் திருத்தொண்டர்கள் தாங்கள் மேற்கொண்டுள்ள சிவநெறி யினை, வேதசாரமாகவே கொண்டமையினை,

> வேத உள்ளுறையாவன விரிபுனல் வேணி
> நாதர் தம்மையும் அவரடியாரையும் நயந்து
> பாத அர்ச்சனை புரிவதும் பணிவதுமென்றே
> காதலாலவையிரண்டுமே செய்கருத்துடையார்.
>
> —பெரியபுராணம்

எனத் திருநீல நக்கரைக் குறிப்பிடுவதன் வழி அறியலாம்; அருமறைச் சைவம் ஓங்க, வேதப் பயனும் சைவமும் போல், என்னும் பெரிய புராணத் தொடர்களும் இக்கருத்தை உணர்த்து வனவே. அரதத்த சிவாசாரியார் போன்ற பெரியார்கள் சதுர் வேத தாற்பரிய சங்கிரகத்தில் சைவத்தை விளக்குவதும் கருதத் தக்கது. இவ்வாறு விளக்குவதாலேயே சைவத்தை 'வைதிகம்' என்றும் கூறலாயினர். 'சைவநெறி வைதிகம் நிற்க' என்பர் சேக்கிழார்.

இவ்வாறு கொண்டாலும் வைதிகம் பொது; 'சைவம்' அதில் ஒரு தனித்துறை, என்ற கருத்தும் தெளிவாகவுள்ளது. 'வேத நெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க' என்னும் தொடர் இதனையுணர்த்தும்; சைவமும் வைதிகமும் தழைத் தோங்க, சைவநெறி வைதிகத்தின் தருமநெறியோடும் தழைப்ப என்னும் தொடர்களும் இக்கருத்தினை விளக்குவனவே.

பொது சிறப்பு என்றால் 'உயர்ந்தது, தாழ்ந்தது' என்ற கருத்தில் கூறப்படுவதன்று, இவற்றின் பொருத்தத்தைச் சூத்திர மும் அதன் பாடியமும் போல் எனப் பெரியோர்கள் விளக்குவதும் கருதத்தக்கது.

வேத நெறியை, வேத ஒழுக்கத்தை, வேத வேள்வியைத் தானும், பழிப்பவர்கள், சைவ சமயக்குரவர்கள் வழிவந்தவர் களல்லர். சமயக் குரவர்களின் பகைவர்களாக வாழ்ந்த சமண பௌத்தர்களே.

> 'வைதிகத்தின் வழி ஒழுகாத அக்கைதவமுடைக்காரமண்
> தேரரை—3957
>
> வேதவேள்வியை நிந்தனை செய்துழல் ஆதமில்லி அமணொடு
> தேரரை—3956

என்பர் திருஞானசம்பந்தர். இதனால் சிவபரத் துவத்தை ஏலாத வைதிகச் சிந்தனையும் சைவர்களுக்குடன்பாடு

என்பது பொருளன்று. சிவனைத் தலைவனாக ஏற்றுக் கொள்ளாத வேள்விகளோ, கிரியைகளோ அவர்களுக்கு உடன்பாடல்ல. சிவனே 'எஜமானன்', வேள்வித் தலைவன் என்பது அவர்கள் உறுதி. தாருகவனத்து இருடிகளை வென்ற புராணக் கதையும், தக்கன் வேள்வியை அழித்த புராணக் கதையும் இவ்வுண்மையை உணர்த்த எழுந்தனவே. இப்புராண நிகழ்ச்சிகளில் பெரிதும் ஈடுபட்டுப் பாடுவர் சமயக்குரவர்கள். எனவே சிவனே முழுமுதல் என்று தெளிந்து வேத வேள்வி செய்யினும் அது சைவ வழிபாடே. வேள்வி அல்லது ஓமத்தை, வைதிகம், மிச்ரம், சைவம் எனப் பாகுபடுத்தி முற்றுகச் சிவமந்திரத்தால் ஓமம் வளர்ப்பதையும் பேசுவர்.

எனவே, சைவர்கள் வேதத்தை ஏற்றுக்கொள்ளும்போது ஒரு குறிப்பிட்ட கண்ணோட்டத்தோடேயே ஏற்றுக்கொள்கின்றனர் என்பதைக் குறிப்பிட வேண்டும்.

வேதமகா வாக்கியங்களுக்கும்[1] அவர்கள் பொருள் கூறி விளக்குவதுண்டு. சைவ சித்தாந்திகளும் தம் தத்துவக் கோட்பாட்டை, வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தம்' என்றே கூறுவர்.

## ஆகமங்கள்

சிவாகமங்கள் சிவபிரானால் அருளப்பெற்றவை என்பர்.

'அண்டர் தமக்கு ஆகமநூல் மொழியும் எம்மாதியை'
—தேவாரம் 8083

மன்னுமாமலைமகேந்திர மதனில் சொன்னவாகமம் தோற்றுவித்தருளியும்—திருவாசகம்

உங்கள் நாயகனார் முன்னம் உரைத்த ஆகமநூல்
—பெரியபுராணம்

என்னும் திருமுறைத் தொடர்களும் இவ்வுண்மையினை உணர்த்தும். இவ்வாகமங்கள் சிவபிரான், தேவிக்குக் கூறியவை என்பதை,

இணையிலா இடை மாமருதில் எழு
பணையிலாகமம் சொல்லும் தன் பங்கிக்கே —5377

என்னும் அப்பர் தேவாரமும் உணர்த்தும். சிவபிரானே ஆகம வடிவாக விளங்குகிறான் என்ற கருத்தில் 'ஆகமம் ஆகிநின்றண்ணிப்பான் தாள் வாழ்க' என்பர் மாணிக்கவாசகர். சிவபிரானின் திருமுகங்கள் — சத்தியோஜாதம், வாமதேவம், அகோரம்,

1 தத்துவமசிவாக்கியம் என்பது திருமந்திரத்தில் ஒரு தலைப்பு.

தத்புருஷம், ஈசானம் - ஐந்திலிருந்தும் சிவாகமங்கள் இருபத்தெட்டும் தோன்றின என்பது சைவர்கள் நம்பிக்கை. சிவபிரானின் ஊர்த்துவ முகமாகிய ஈசான முகத்திலிருந்து இருபத்தெட்டு ஆகமங்களும் ஏனைய நான்கு முகங்களிலிருந்து நான்கு வேதங்களும் தோன்றின என்றும் கூறுவர்.

இவ்வாகமங்கள் சரியை, கிரியை யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களை உடையன என்பர். இவற்றுள் ஞானபாதம் முப்பொருள் உண்மையினையும், யோகம் அஷ்டாங்க சிவயோகத்தையும் கிரியாபாதம் மந்திரங்களின் உத்தாரம், சந்தியாவந்தனம், பூசை, செபம் முதலியவற்றையும், சமய, விசேஷ, நிருவாண, ஆசாரிய, அபிஷேக தீக்கைகளையும், சரியாபாதம் சமயாசாரங்களையும் உபதேசிக்கும் என்பர். நான்கு பாதங்களை உடையனவாக விளங்கினும் சிறப்பாகக் கிரியைகளையே மையமாகவுடையன ஆகமங்கள் எனல் வேண்டும். கிரியைகளிலும், சிவவழிபாட்டினை, சிவபூசையினையே விதந்து கூறுவன எனல் வேண்டும். திருமுறைகளில் ஆகமம் பற்றிவரும் பலகுறிப்புகளும் இக்கருத்தினை விளக்குகின்றன. பெரியபுராணத்தில் வரும் சில தொடர்கள் இங்குக் குறிப்பிடத் தக்கன.

'எண்ணிலாகமம் இயம்பிய இறைவனார் தாம்விரும்பும்
உண்மையாவது பூசனை என உரைத்தருள
அண்ணலார் தமை அருச்சனை புரிய வாதரித்தாள்
பெண்ணினல்லவளாயின பெருந்தவக்கொழுந்து—
—(திருக்குறிப்புத் தொண்டர்) பெரியபுராணம்

எய்திய சீராகமத்தில் இயம்பிய பூசனை —கண்ணப்பர் 784
ஆகமவிதியால் ஆமுறையில் அருச்சித்து —801
மன்னிய ஆகமப்படியால் மாமுனிவர் அருச்சித்து —804

திருக்கோவில் எடுக்கும் கிரியையும் ஆகமங்களிலேயே விளக்கமாக உள்ளது என்பர்.

சாதனத்தொடு தச்சர் தம்மையும் மனத்தால் தேடி
நாதனுக்கு ஆலயம்செய் நலம்பெற நன்றுட்கொண்டே
ஆதரித்து ஆகமத்தால் அடிநிலை பாரித்து அன்பால்
காதலிற் கங்குற்போதும் கண்படா தெழுக்கலுற்றார்.
—பெரியபுராணம்

எனச் சேக்கிழார் சுவாமிகள் பூசலார் நாயனார் புராணத்தில் பேசுவர். பூசலார் நாயனார் எடுத்த கோவில் மானதக் கோவில்;

ஆயினும் புறக்கோவிலின் அடிப்படையிலேயே அதனை எடுத்தார் என்பர்.

திருக்கோவிலுக்கு நிலத்தைத் தேர்ந்தெடுப்பதிலிருந்து (பூகர்ஷணம்) மண்டலாபிஷேகம் வரையிலுமுள்ள திருக்கோவில் கிரியைகளுக்கும் ஆகமமே பிரமாணம்; அதன்பின் நிகழும் நித்திய நைமித்திய பூசைகளுக்கும் ஆகமமே கருவிநூல் என்பர்.

தீட்சை பெற்றுச் சிவனடியாராக வாழவிரும்புகின்றவர்களும், இத்தகைய சிவவழிபாட்டில் தலைநிற்கவேண்டும் என்பதாலேயே, அச்சாதகர்களையும், சரியையாளர், கிரியையாளர், யோகி, ஞானி எனப் பாகுபடுத்துவர். ஆயின் அப்பாகுபாடு அவர்கள் அக வளர்ச்சியை ஒட்டியது. இவ்வாறு வளர்ந்து வருபவர்களுக்கு இறைவன் அருள் செய்கின்றான் என்பதையே,

'அம்மானே, ஆகமசீலர்க்கருள் நல்கும் பெம்மானே'

—தேவாரம் 8204

எனச் சுந்தரரும் பாடுவர்.

## ஆகமங்கள் இருபத்தெட்டு

1. காமிகம்
2. யோசகம்
3. சிந்தியம்
4. காரணம்
5. அசிதம்
6. தீப்தம்
7. சூக்குமம்
8. சகச்சிரம்
9. அஞ்சுமான்
10. சுப்பிரபேதம்
11. விசயம்
12. நிசுவாசம்
13. சுவாயம்புவம்
14. ஆக்கினேயம்
15. வீரம்
16. இரௌரவம்
17. மகுடம்
18. விமலம்
19. சந்திரஞானம்
20. முகவிம்பம்

21. புரோற்கீதம்
22. இலளிதம்
23. சித்தம்
24. சந்தானம்
25. சர்வோத்தம்
26. பாரமேசுவரம்
27. கிரணம்
28. வாதுளம்

மூலாகமங்களுக்கு வழித் தோன்றியனவாகிய உபாகமங்களைப் பற்றியும் கூறுவர்.

சிவபிரானை வேதத்தோடு சேர்த்தும், வழிபாட்டினை ஆகமத்தோடு சேர்த்தும், இரண்டனையும் இணைத்தும் கூறலே சைவத்தின் பொதுவான போக்கு எனக் கொள்ளவேண்டும். வேத மந்திரத்தால் வழிபாடு நிகழ்த்துவதைக் குறிப்பிட்டாலும் 'ஆகம விதி வழி' பூசையினை வற்புறுத்தலே சிறப்பான கூருக வுள்ளது.

மெய்த்த ஆகமவிதிவழி வேதகாரணரை
நித்தல் பூசனை புரிந்து

பொங்கு மாமறைப் புற்றிடம் கொண்டவர்
எங்குமாகி இருந்தவர் பூசனைக்கு
அங்கண் வேண்டும் நிபந்தம் ஆராய்ந்துளான்
துங்க ஆகமம் சொன்ன முறைமையால்

என்பன, பெரிய புராணப் பாடல்கள்.

வேதாகம நெறியே சிவநெறி என்பது, சைவர்கள் தாய்க் கோவிலாகக் கருதும் சிதம்பரத்தில் சிவ பூசை செய்யும் அந்தணர்களைப் பற்றி,

அருமறை நான்கினோடு ஆறங்கமும் பயின்றுவல்லார்
[1]ஞானமே முதலா நான்கும் நவையறத்தெரிந்து மிக்கார்

எனச் சேக்கிழார் சுவாமிகள் குறிப்பிடுவதாலும் விளங்கும்.

சைவ நெறி நின்று அதனைப் பேண விரும்பும் மக்களும் வேதாகமங்களையே கருவி நூற்களாகக் கொள்ளவேண்டும். அந்

1. ஞானமே முதலா நான்கு—ஆகமங்கள் உணர்த்தும் சரியை, கிரியை யோகம், ஞானங்களாகிய நான்கு பாதங்கள்.

நாளைய அரசர்களும் அவ்விரண்டு நூற்களையும் அடிப்படையாகக் கொண்டே சைவத்தைப் பேணி வந்தனர்.

*நாதமறைதேர் தமிநந்தியடிகளார் நற்றொண்டாகப்*
*பூதநாதர் புற்றிடம் கொள் புனிதர்க்கு அமுதுபடிமுதலாம்*
*நீதிவளவன்தான் வேண்டும் நிபந்தம் பலவும் அரியணையின்*
*மீதுதிகழ இருந்தமைத்தான் வேதகாம நூல் விதி விளங்க*
—பெரியபுராணம் 1889

என்பர் சேக்கிழார் சுவாமிகள். இவ்விரண்டன் பிணைப்புக் கருதியே சைவர்கள் வேதங்களையும் ஆகமங்கள் என்பர். 'சந்தமறைகள் உட்பட முன்தலைவர் மொழிந்த ஆகமங்கள்' என்பது பெரியபுராணம். எனவே சைவத்தைப் பேண விரும்பு வோர், வேதத்தையும் ஆகமத்தையும் முரணுடையனவாகக் காட்டல். முறையன்று 'வேதமும் சித்தாந்த சைவாகமமும் என்னும் இரண்டும் உத்தமநூல்' என்பர் சிவஞான முனிவர். நீலகண்டசிவம் என்னும் பெரியார் 'யாம் வேதத்திற்கும் சிவாக மத்திற்கும் வேற்றுமை கண்டிலம்; சிவனால் செய்யப்படுதலின் வேதமும் சிவாகமம் என வழங்கப்படும்; இவ்விரண்டும் செய்த கருத்தன் சிவன் ஒருவனேயாம்' என்பர்.

வேதத்தை ஏற்றுக்கொள்ளாத சைவமும், புறச்சமயமே என்ற அளவுக்குச் சில சைவப் பெரியார்கள் கூறக் கேட்கிறோம். இனித் தந்திரவழி ஒழுகினோர் மூடர் எனவும் நிரயத்தில் வீழ்ந் தார் எனவும் அவை சாபப் பயன் எனவும் விருத்திப் பொருட்டு எனவும் மோகநூல் எனவும் புராணங்களிற் கூறியது வேதப் பொருளோடு மாறுகொளக் கூறும் 'பாசுபதம்' பாஞ்சராத்திரம் முதலிய புறச்சமயங்களையேயாம். வேதப் பொருளையே விரித்துக் கூறப்புகுந்த வேதசாரமாகிய சித்தாந்த சைவாகமங்களை அன்று, என உணர்க என்பர் சிவஞானமுனிவர். 'இதுவும் வாயவ்விய சங்கிதை, சனற்குமாரசங்கிதை, கூர்மபுராணம், மகுடாகமம் முதலியவற்றுட் கூறியவாறு' என்பர். இங்கு வேதசாரமாகிய சித்தாந்த சைவாகமங்கள் எனத் தெளிவாகக் கூறுவர்.[1]

காமிகாகமம் போன்ற ஆகமங்களும் வேதார்த்தத்தை விளக்குவதாகக் கூறிக் கொள்வதும் இங்குக் கருதத்தக்கது. (காமிகம்—கடவுள் வாழ்த்து—தொடக்கவுரை) எல்லாவற்றுக்கும் மேலாகச் சைவர்களின் இலட்சிய உலகாகிய கயிலையைப் பாடும் சுந்தரர்,

அரவொலி ஆகமங்கள் அறிவாரறி தோத்திரங்கள்
விரவிய வேதவொலி விண்ணெலாம் வந்தெதிர்ந்திசைப்ப

1 சிவஞானப்பாடியம் 21

வரமலி வாணன் வந்து, வழிதந்து எனக்கேறுவதோர்
சிரமலியானை தந்தான் நொடித்தான்மலை உத்தமனே
—தேவாரம் 8348

எனப் பாடுவது மனங் கொள்ளத்தக்கது. கயிலையிலும் வேதாகம ஒலியே விரவி நிற்பதாகப் பாடுவர்.

## புராண இதிகாசங்கள்

வேதாகமங்களேயன்றிச் சிவபரத்துவத்தைப் பேசும் புராண இதிகாசங்களும், சைவத்துக்குப் பிரமாண நூற்களே. இந்துக்கள் பொதுவாகப் பதினெண் புராணங்கள் எனக் கூறினும், சிவபரத்துவத்தைப் பேசுவனவற்றையே சைவர்கள் தங்கள் பிரமாண நூற்களாகக் கொள்வர்.

சைவபுராணம், பவிடியபுராணம், மார்க்கண்டேயபுராணம், கலிங்கபுராணம், கந்தபுராணம், வராகபுராணம், வாமன புராணம், மச்சபுராணம், கூர்மபுராணம், பிரமாண்டபுராணம் என்னும் பத்துஞ் சிவபுராணங்கள் என்பர். சைவபுராணங்களைச் சத்துவகுணப் புலப்பாடாகக் கொண்டு இன்பத்துக்கும் ஞானத்துக்கும் இடமாக உள்ளவை என்பர்.

இப்புராணங்கள் வியாசரால் இயற்றப்பட்டனவாகக் கொள்ளப்படினும் 'சூதரே' உலகிற்குதவியதாகக் கூறுவர்.

சிவபுராணங்களைக் கேட்பதால் உயிர்கள் சிவகதி அடையும் என்ற நம்பிக்கையினையும் சைவர்கள் கொண்டுள்ளனர்.

திருத்தகு சிவபுராண சிரவண விசேடத்தாலே
உருத்தகு பாவம் நீங்கும் புண்ணியம் ஓருங்குமேவும்
மருத்தகு பத்தி வாய்க்கும் மாதேவன் அருள் உண்டாகும்
கருத்தகு தீமையெல்லாம் கழன்றுமேற்கதியுண்டாமால்

என்பது காசிரகசியம்.

வேதாகமங்களின் வழிவந்தனவாகச் சிவபுராணங்களைக் கூறினும், புராணக் கல்வியை வற்புறுத்தும்போது வேதாகமங்களினும் மேலாக வற்புறுத்துவதும் உண்டு.

மறைகள் ஆகமம் ஓர்ந்தாலும் வன்புராணங்கள் ஓராது
உறைவனேல் அவற்றாலாகும் பயனவற்குதவாதாகும்
நிறைதரு புராணம் ஓர்ந்து நிகழுமற்றவையோராத
குறையுளதெனினும் மேலாம் தன்மையிற் கூடச் செய்யும்

எனவும் காசிரகசியமே கூறும்.

சிவபரத்துவத்தை வற்புறுத்திப் பொதுமக்களிடம் சிறந்த பத்தி உணர்வை எழுப்புவதில் சிவபுராணம் பேராற்றலோடு விளங்குவதென்பர். திருமுறை ஆசிரியர்கள் பலரும் சிவபுராணங்களைக் கொண்டே சிவபரத்துவத்தை வற்புறுத்துதல் இங்குக் குறிப்பிடத்தக்கது. சூத முனிவர்பணியினை திருஞானசம்பந்தரும் குறிப்பிடுவர்.[1]

சிவபுராணங்களேயன்றி, இராமாயணம் பாரதம்[2] போன்ற இதிகாசங்களும், இராமனுடைய, சிவபத்தியினையும் (இராமாயணம்) கண்ணனுடைய, அருச்சுனனுடைய சிவபத்தியினையும் (பாரதம்) விளக்கும் என்பர். இதிகாச மாந்தர்கள் பலர் சிவன் கோவிலை வழிபட்டுய்ந்ததாகக்கொண்டு எழுந்த தலபுராணங்களும் இதிகாசங்களில் சைவர்கள் கொண்டிருந்த ஈடுபாட்டைக் காட்டும். சிவன் கோவில்களில் பாரதம் படிக்க ஏற்பாடு செய்திருந்த வரலாற்றுச் செய்திகளும் இங்குக் குறிப்பிடத்தக்கன.

## திருமுறைகள், சித்தாந்த நூற்கள்

'வேதாகமங்களையேனும் அவற்றின் வழிநூல் சார்புநூல்களையேனும் சற்குரு மூலமாகக் கற்றல் கேட்டல் செய்யாதொழியின் சிவனை வழிபட்டுய்தல் கூடாது' என்பர். வேதாகமங்களில் வழிநூல் சார்புநூல்கள் என்ற அளவிலேயே திருமுறைகளையும் சித்தாந்த நூற்களையும் குறிப்பிட வேண்டும். வேதத்தின் வழிநூல் திருமுறை; 'தேவாரம்—வேதசாரம்; திருவாசகம்-உபநிடதசாரம்' என்றவகையில் எழுந்த சிந்தனைகளும் கருதத்தக்கவை. ஆகமத்தின் வழிநூல் மெய்கண்ட சாத்திரம் என்றும் கூறலாம். சாத்திரங்கள் இதனை வெளிப்படையாகவே கூறும்.[3] திருமுறைகள் சைவர்கள் அனைவருக்கும் பொது; சித்தாந்த நூற்கள் குறிப்பிட்ட ஒரு கோட்பாட்டினருக்கே உரியது, எனலாம்.

இந்நூற்கள் அனைத்தும் சிவபிரானால் அருளப்பட்டவை எனக்கொள்ளப்படாவிட்டாலும், சிவனைக் கண்டு, சிவானுபவத்தில் திளைத்த சிவஞானியர்களால் அருளப்பெற்றவை என்பது சைவர்கள் நம்பிக்கை.

---

1 வேதமுதல்வன் முதலாக விளங்கி வையம்
ஓதப்படாமை உலகத்தவர் ஏத்தல்செய்யப்
பூத முதல்வன் முதலே முதலாக்கப் பொலிந்த
சூதன் ஒலிமாலை என்றே கலிக்கோவை சொல்லே' —தேவாரம் 3379

2 சிவரகசியம் போன்ற நூற்களையும் சிலர் இதிகாசம் என்பர்.

3 உண்மை நெறி விளக்கம்-காப்புச் செய்யுள்

இவற்றுள் திருமுறைகளைத் தோத்திரம் என்றும் சித்தாந்த நூற்களைச் சாத்திரம் என்றும் கூறுவர். தோத்திரம், சாத்திரம் என்பன, சிவானுபவத்தை இருவேறு நிலைகளில் விளக்குவன எனலாம். தோத்திரம் இறைவனைப் புகழ்ந்துபாடி, தெய்வானுபவத்தை உணர்வு நிலையில் வெளிப்படுத்த, சாத்திரம் தெளித்துக் கூறி அறிவு நிலையில் விளக்க முயல்கிறது. தேவாரஆசிரியர் காலத்துக்கு முன்பே இவ்விருவகையான விளக்கங்களும் இருந்தன.

அல்லும் பகலுமாய் நின்றார்தாமே அந்தியும் சந்தியும் ஆனார் தாமே
சொல்லும் பொருளெலாமானார்தாமே தோத்திரமும் சாத்திரமுமானார் தாமே
பல்லுரைக்கும் பாவெலாம் ஆனார்தாமே பழனைப் பதியாவுடையார் தாமே
செல்லும் நெறிகாட்ட வல்லார்தாமே திருவாலங்காடுறையும் செல்வர்தாமே—7022

என்பது அப்பர் தேவாரம்.

தேவார காலத்திலேயே திருக்கோவில்களில் தோத்திரங்கள் பாடிவந்தனர்; பல்லாண்டு பாடிவந்தனர்.

அந்தணர் வேள்வியும் அருமறைத் துழனியும்
செந்தமிழ்க் கீதமும் சீரினால் வளர்தரப்
பந்தணை மெல்விரலாளொடும் பயில்விடம்
மந்தம் வந்துலவு சீர் மாமழபாடியே —309

என்றும்

கீதத்தை மிகப்பாடும் அடியார்கள் குடியாகப்
பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி பயிலுமிடம் —1932

என்றும்

சம்பந்தரே பாடுவர். திருமுறைகள், சிறப்பாகத் தேவாரங்கள் எழுந்தபின், திருப்பதிகங்களையே பாடத் தொடங்கியிருக்க வேண்டும்.

வேத ஓசையும் வீணையின் ஓசையும்
சோதிவானவர் தோத்திர ஓசையும் —மனுநீதி 2

தெள்ளும் ஓசைத் திருப்பதிகங்கள் பைங்
கிள்ளைபாடுவ, கேட்பன பூவைகள்

எனக் குறிப்பிடும் பெரிய புராணம், தேவாரப் பதிகங்களைக் கூறியிருக்கலாம்.

பிற்காலத்தில், பதிகம் பாடுதலே, பஞ்சபுராணம் பாடுதலாக வளர்ந்தது. தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல் லாண்டு, பெரியபுராணம் இவற்றிலிருந்து ஒவ்வொரு பாடலாக, ஐந்து பாடல்கள் பாடுவதே பஞ்சபுராணம் பாடுதல். இவையும் வேத - மந்திரம் போல் சிவபூசையில் ஓதத்தக்க சிவமந்திரங் களாகக் கருதப்பட்டன.

## திருமுறை

திருமுறை என்னும் போது 'தெய்வீக நூல்' என்ற அளவி லேயே பொருள் கொள்வர். பதினொன்றும் திருமுறையில் சேர்க்கப் பெற்றுள்ள 'திருமுகப்பாசுரம்' சிவனால் அருளப்பெற்றுள்ளது என்பர். ஏனையவை சிவஞானம் கைவரப்பெற்ற ஞானியர்களால் பாடப் பெற்றமையின் சிவனால் படைக்கப்பெற்ற வேதமாகவே, தமிழ் வேதமாகவே கருதப்படுகின்றன. சம்பந்தர் பாடல்களைக் குறிப்பிடும் சேக்கிழார் சுவாமிகள்,

ஒரு பிறப்பும் எய்தாமை உடையார்தம்மை
உலகியல்பின் உபநயன முறைமையாகும்
இருபிறப்பின் நிலைமையினைச் சடங்குகாட்டி
எய்துவிக்கும் மறைமுனிவர் எதிரே நின்று
வருதிறத்தின் மறை நான்கும் தந்தோமென்று
மந்திரங்கள் மொழிந்தவர்க்கு மதுரவாக்கால்
பொருவிறப்பவோதினார் புகலிவந்த
புண்ணியனார் எண்ணிறந்த புனித வேதம்

—பெரியபுராணம்

எனப் பாடுவர்.

ஏனைய திருமுறை ஆசிரியர்களும், சிவஞானம் கைவரப்பெற்ற ஞானியர்களாகவே கொள்ளப்படுகின்றனர். சிறந்த ஞானியர் களால் பாடப்பெற்றமையினாலேயே இவற்றை வேதங்கள் போல் ஓதி வருகின்றனர். இவற்றை ஓத ஓதுவார் என்ற பிரிவினரும் சைவ—மரபில் உண்டு. இவற்றை ஓதுவதை இறைவனே உகக் கின்றான் என்பர்.

நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்கரசும் பாடிய நற்றமிழ்மாலை சொல்லியவே சொல்லி ஏத்துகப்பானை எனப் பாடுவர் சுந்தரர்.

இவ்வடியவர்களின் பாடல்கள் நமக்கு ஞானத்தைத் தந்து நம்மை இலட்சியத்தை நோக்கி வழி நடத்துவன என்பர்.

'பிறவியெனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவியெனும் தோற்றோணி கண்டீர்—நிறையுலகில்
பொன்மாலை மார்பன் புணர் காழிச் சம்பந்தன்
தன்மாலை ஞானத் தமிழ்
—ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக்கோவை

என நம்பியாண்டார் நம்பியே பாடுவர். அப்பர் பாடல்களும் பிறவியறுக்கும் மருந்து என்பர்.

உலகின் மாயப் பிறவியைத் தரும்
உணர்விலா அப்பெருமயக்கினை
ஒழியவாய்மைக் கவிதையிற்பல
உபரியாகப் பொருள் பரப்பிய
அலகில் ஞானக் கடலிடைப்படும்
அமிர்தயோகச் சிவவெளிப்புக
அடியரே முக்கருளினைச் செய்யும்
அரைய தேவத் திருவடிக்களே —திருநாவுக்கரசுதேவர்
திருவேகாதசமாலை

## சிவபரத்துவம்

திருமுறைப் பாடல்களில் சிவபரத்துவம் அளவில் ஒரு வளர்ச்சியினைக் காண்கிறோம் எனல் வேண்டும். அப்பர் போன்ற அடியவர்கள் இந்திரன், பிரம்மன், மால், விநாயகன், முருகன் எல்லோருமே சிவனை வணங்குவதாகப் பாடினார்கள். சைவ சமயக் குரவர்கள் நால்வரும் பாடிய சிவ—மூர்த்தத்துக்கு வேருக, முருகப்பிரானையும், விநாயகப் பெருமானையும், தேவியையும், அடியார்களையும் பாடிய பாடல்கள் திருமுறைகளில் இடம் பெற்றுள்ளன.

சேந்தனார்[1] பாடிய, திருவிடைக்கழி திருவிசைப்பா, முருகக் கடவுள் தோத்திரமாகவுள்ளது.

மாலுலா மனம்தந்து என்கையிற்சங்கம் வவ்வினான்
மலைமகள்மதலை
மேலுலாந் தேவர்குலமு ழுதாளும் குமரவேள், வள்ளிதன்
மணாளன்
சேலுலாங் காவித் திருவிடைக் கழியில் திருக்குரா நீழற்கீழ்
நின்ற
வேலுலாந் தடக்கை வேந்தன் என் சேந்தன் என்னும் என்
மெல்லியல் இவளே (1)

---

1 சேந்தன். முருகனுக்குரிய பெயர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

என்னும் பாடல் போன்று அகத்துறையமைந்த பாடல்கள் பதினொன்று இப்பதிகத்திலுள்ளன. திருமுருகாற்றுப்படையும் பதினொன்ரும் திருமுறையில் சேர்க்கப் பெற்றுள்ளது.

விநாயகரைப் பற்றிப் பாடிய பாடல்கள் பலவும் பதினொன்ரும் திருமுறையிலுள்ளன.

கபில தேவநாயனர் இயற்றிய மூத்தநாயனர் திருஇரட்டை மணிமாலை

அதிராவடிகள் அருளிச்செய்த மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை

நம்பியாண்டார் நம்பி அருளிச்செய்த திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை

இம்மூன்று பிரபந்தங்களும், விநாயகரைப் பாடியனவே. பலவிடங்களிலும் ஒலிக்கும்.

திருவாக்கும் செய்கருமம் கைக்கூட்டும் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்—உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தம் கை.

என்னும் பாடல் மூத்தநாயனர் திருவிரட்டை மணிமாலையின் முதற் பாடல்.

தேவி பற்றிய தனிப்பிரபந்தம் எதுவும் திருமுறையில் சேர்க்கப் படாவிடினும் பல பாடல்கள் திருமந்திரத்துள்ளன.

'அவளை அறியா அமரருமில்லை
அவளன்றிச் செய்யும் அருந்தவமில்லை
அவளன்றி ஐவரால் ஆவதொன்றில்லை
அவளன்றி ஊர்புகுமாற றியேனே' —திருமந்திரம் 1053

என்பன போன்ற பாடல்களைக் குறிப்பிடலாம்.

அடியவர்களைப் பற்றி எழுந்த பிரபந்தங்களும் திருமுறையிலுள்ளன.

நக்கீர தேவநாயனர் —திருக்கண்ணப்ப தேவர் திருமறம்
கல்லாட தேவநாயனர் —திருக்கண்ணப்ப தேவர் திருமறம்
நம்பியாண்டார் நம்பி —திருத்தொண்டர் திருவந்தாதி
ஆளுடைபிள்ளையார் திருவந்தாதி

| | | |
|---|---|---|
| நம்பியாண்டார் நம்பி | ஆளுடைய பிள்ளையார் | திருச்சண்பை விருத்தம் |
| ,, | ,, | திருமும்மணிக்கோவை |
| ,, | ,, | திருவுலாமாலை |
| ,, | ,, | திருக்கலம்பகம் |
| ,, | ,, | திருத்தொகை |
| திருநாவுக்கரசு தேவர் | திருவேகாதசமாலை | |

என்பனவற்றைக் குறிப்பிடலாம்.

பெறுவது நிச்சயம் அஞ்சல் நெஞ்சே பிரமாபுரத்து
மறுவறு பொற்கழல் ஞானசம்பந்தனை வாழ்த்துதலால்
வெறியுறுகொன்றை மறியுறுசெய்கை விடைஎடுத்த
பொறியுறு பொற்கொடி எம்பெருமான் அமர்பொன்னுலகே

—ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி 42

என்னும் பாடல் அடியார் வணக்கத்தால் சிவனருளை அடையலாம்; அடியவர்களும் சிவசொரூபமாக விளங்குகின்றவர்களே; அவர்கள் 'நடமாடும் தெய்வம்' என்ற சிந்தனை வளர்ச்சியினை எதிரொலிக்கிறது. பன்னிரண்டாம் திருமுறையாகிய பெரியபுராணமும் அடியவர்கள் வரலாற்றையே பாடுகிறது. அடியவர் வணக்கம் தேவார ஆசிரியர்களால் பாடப்பட்டனவே. ஆயினும், விநாயகர், முருகன், தேவி பற்றிய பாடல்கள் சிவபரத்துவத்தை விளக்குவதில் ஏற்பட்ட ஒரு வளர்ச்சியினையே காட்டுகின்றன எனல் வேண்டும்.

## திருமுறைகள் பன்னிரண்டு

சைவப் பெரியார்கள் திருமுறையினைப் பன்னிரண்டாகப் பாகுபடுத்தியுள்ளனர்.

| ஆசிரியர் | திருமுறை எண் | நூற்பெயர் | |
|---|---|---|---|
| 1. சம்பந்தர் | 1, 2, 3 | தேவாரம் என வழங்குவர் | |
| 2. அப்பர் | 4, 5, 6 | ,, | |
| 3. சுந்தரர் | 7 | ,, | |
| 4. மாணிக்கவாசகர் | 8 | திருவாசகம் திருக்கோவையார் | |
| 5. திருமாளிகைத்தேவர் | 9 | திருவிசைப்பா | |
| 6. சேந்தனர் | | ,, | திருப்பல்லாண்டு |
| 7. கருவூர்த்தேவர் | | ,, | |
| 8. பூந்துருத்திநம்பிகாட நம்பி | | ,, | |
| 9. கண்டராதித்தர் | | ,, | |

| | | | |
|---|---|---|---|
| 10. | வேணாட்டடிகள் | | திருவிசைப்பா |
| 11. | திருவாளிய முதனார் | | ,, |
| 12. | புருடோத்தம நம்பி | | ,, |
| 13. | சேதிராயர் | | ,, |
| 14. | திருமூலர் | 10 | திருமந்திரம் |
| 15. | திருவாலவாயுடையார் | 11 | திருமுகப்பாசுரம் |
| 16. | காரைக்காலம்மையார் | | திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் |
| | ,, | | திருவிரட்டை மணிமாலை |
| | ,, | | அற்புதத் திருவந்தாதி |
| 17. | ஐயடிகள் காடவர்கோன் | | க்ஷேத்திரத் திருவெண்பா |
| 18. | சேரமான் பெருமாள் | | பொன்வண்ணத் தந்தாதி |
| | ,, | | திருவாரூர் மும்மணிக்கோவை |
| | ,, | | திருக்கயிலாய ஞானவுலா |
| 19. | நக்கீர தேவநாயனார் | | கைலைபாதி காளத்திபாதி யந்தாதி |
| | ,, | | திருவீங்கோய்மலை எழுபது |
| | ,, | | திருவலஞ்சுழி மும்மணிக் கோவை |
| | ,, | | திருவெழு கூற்றிருக்கை |
| | ,, | | பெருந்தேவ பாணி |
| | ,, | | கோபப் பிரசாதம் |
| | ,, | | காரெட்டு |
| | ,, | | போற்றித் திருக்கலி வெண்பா |
| | ,, | | திருமுருகாற்றுப்படை |
| | ,, | | திருக்கண்ணப்பதேவர் திருமறம் |
| 20. | கல்லாட தேவநாயனார் | | திருக்கண்ணப்பதேவர் திருமறம் |
| 21. | கபில தேவநாயனார் | | மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை |
| | ,, | | சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை |
| | ,, | | சிவபெருமான் திருவந்தாதி |
| 22. | பரண தேவ நாயனார் | | சிவபெருமான் திருவந்தாதி |
| 23. | இளம்பெருமானடிகள் | | சிவபெருமான் திருமும்மணிக்கோவை |
| 24. | அதிராவடிகள் | | மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை |

| | | |
|---|---|---|
| 25. திருவெண்காட்டடிகள் | | கோயில் நான் மணிமாலை |
| ,, | | திருக்கழுமல மும்மணிக்கோவை |
| ,, | | திருவிடை மருதூர் மும்மணிக்கோவை |
| ,, | | திருவேகம்பமுடையார் திருவந்தாதி |
| ,, | | திருவொற்றியூர் ஒருபாவொரு பஃது |
| 26. நம்பியாண்டார் நம்பி | | திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை |
| ,, | | கோயிற்றிருப்பபண்ணியர் விருத்தம் |
| ,, | | திருத்தொண்டர் திருவந்தாதி |
| ,, | | ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி |
| ,, | | " திருச்சண்பை விருத்தம் |
| ,, | | " திருமும்மணிக் கோவை |
| ,, | | " திருவுலாமாலை |
| ,, | | " திருக்கலம்பகம் |
| | | " திருத்தொகை |
| ,, | | திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை |
| 27. சேக்கிழார் | 12 | திருத்தொண்டர் புராணம் |

திருமுறை ஆசிரியர்கள் புராண நிகழ்ச்சிகளைத் துணையாகக் கொண்டு இறைவன் புகழைப் பாடினர். சிவபரத்துவத்தை வற்புறுத்தினர். அவனை அடைந்துய்ய அறிவுரை கூறினர்.

## சித்தாந்த சாத்திரங்கள்

வேத சிவாகமங்களின் வழிவந்தனவாகவே மெய்கண்ட நூற்களைக் கூறுவர். பொதுவாக ஆகமங்களின் ஞான பாதத்தை விளக்குவனவாகக் கூறப்படினும், 'அத்துவிதமாகும்சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்கலுற்றும்' எனச் சிவப்பிரகாசம் கூறுவது வேத—சிவாகமங்கள் வழி வந்தவை சித்தாந்தக் கோட்பாடு என்பதை நன்கு விளக்கும். மேலும், மறைகள், புராணங்கள், ஆகமங்களே, சித்தாந்தக் கோட்பாட்டிற்கு, சித்தாந்த நூற்களுக்கு, முதல் நூற்கள் என்பதனை,

ஞானத்தால் வீடென்ற நான்மறைகள் புராணம்
நல்ல ஆகமம் சொல்ல, அல்லவாம் என்னும்
ஊனத்தார் என் கடவர் —8. 2. 27

என்னும் சிவஞான சித்தியார் வாக்காலும் உணரலாம்.

மெய்கண்ட சாத்திரங்கள் கூறுவனவெல்லாம், சிவபரத்துவம், சிவபூசை, சிவனுக்கும் உயிர்களுக்குமுள்ள சம்பந்தத்தை அத்துவிதமாக விளக்குதல் என்பனவே; இக்கருத்துக்களை வேதங்கள், புராணங்கள் ஆகமங்களைக் கொண்டு விளக்குவதோடு, திருமுறைகளையும் ஆங்காங்கே எடுத்துக்காட்டி விளக்குதலும் குறிப்பிடத்தக்கது.

இருநிலம் தீ நிர் இயமானன் கால் எனும்,
பெருநிலைத் தாண்டவம் பெரு மாற்கு இல்
காண்பார் யார் கொல் காட்டாக்கால் எனும்
மாண்புரை உணர்ந்திலை மன்ற
ஆட் பாலவர்க்கருள்' என்பதை அறிதியே.

என்னும் அருணந்தி சிவத்தின் இருபாவிருபஃதில், அப்பர் சுவாமிகளின் தேவாரம் துணையாக, சிவபரத்துவம் வற்புறுத்தப்படுவதைக் காண்கிறோம்.

வேதங்கள் சிவாகமங்கள், புராணங்கள், திருமுறைகள், இக்கால் வழியே வந்தனவாகக் கொண்டு சித்தாந்த நூற்களையும் பிரமாண நூற்களாக ஏற்றுக் கூறினும், மெய்கண்டார் வழியாக உருவாகிய சித்தாந்தக் கோட்பாடு ஒன்றே சைவக் கோட்பாடு எனக் கூறிவிட முடியாது. சித்தாந்த ஆசிரியர்களும் கோட்பாடு அளவில் மாறுபட்ட சைவப் பிரிவினரைக் குறிப்பிடுவர். சித்தாந்தக் கோட்பாட்டைச் சைவக் கோட்பாடாக ஏற்றுக் கொண்டுள்ள சைவர்கள், கீழ்வரும் பதினான்கு நூற்களையும் சித்தாந்த சாத்திரங்களாகக் கூறுவர்.

| | | |
|---|---|---|
| 1. | திருவியலூர் உய்யவந்த தேவநாயனார் | திருவுந்தியார் |
| 2. | திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் | திருக்களிற்றுப்படியார் |
| 3. | மெய்கண்ட தேவநாயனார் | சிவஞான போதம் |
| 4. | அருணந்தி தேவநாயனார் | சிவஞான சித்தியார்<br>இருபா இருபஃது |

5. திருவதிகை மனவாசகம் கடந்தார் — உண்மைவிளக்கம்

6. கொற்றவன்குடி உமாபதி தேவநாயனுர் — சிவப்பிரகாசம்
திருவருட்பயன்
வினவெண்பா
போற்றிப்பஃறெடை
உண்மைநெறிவிளக்கம்
கொடிப்பாட்டு
நெஞ்சுவிடு தூது
சங்கற்ப நிராகரணம்

மெய்கண்ட நூல்கள் ஆகமத்தில் ஞானபாதத்தை வெளிப் படுப்பன என்பர். இவ்வகையில் ஆகமத்தின் வழி நூல் எனலாம்.

மேலும் பலநூற்கள்[1] சித்தாந்தக் கோட்பாட்டை விளக்குவன என்பர். சிவஞான முனிவரின் சிவஞான மாபாடியம் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

1. சாத்திரங்களின் வழிவந்தவை பண்டார சாத்திரம் என்பர். அவை திருவாவடுதுறையாதீனத் துறவிகள் இயற்றியனவாகிய மூன்று தச காரியம். சன்மார்க்க சித்தியார்; சிவாச்சிரமத் தெளிவு; சித்தாந்தப் பஃறெடை. சித்தாந்த சிகாமணி: உபாயநிட்டை வெண்பா; உபதேச வெண்பா; நிட்டை விளக்கம். அதிசயமாலை, நமச்சிவாயமாலை, உபதேசப் பஃறெடை, பஞ்சாக்காப் பஃறெடை, என்ற 14 சைவசாத்திரங்கள்

சிற்றம்பல நாடிகள் சாத்திரக்கொத்து 1: முத்திநிச்சயம் 2. சிவநெறிப் பிரகாசம் 2. தத்துவப் பிரகாசம் 4. சிவயோக காலம்.

# 3. சிவதன்மம்

## சிவதன்மம்

செய்யப்பட வேண்டுவது தருமம், தவிர்க்கப்பட வேண்டுவது பாவம் என்ற கருத்துப் பொதுவாக எல்லாச் சமயத்தவரும் வற்புறுத்தும் ஒன்றே. 'நாம் தருமத்தைப் பேணினால் தருமம் நம்மைப் பேணும்' என்பது இந்துக்களின் பொதுவான நம்பிக்கை. ஆயின் தருமத்தை விளக்கும் போது இந்துக்கள் பலரும் வழங்கும் பொதுப்பொருளிலும் சைவத்துறைக்குரிய வரையறையான பொருளிலும் சைவ அறிஞர்கள் குறிப்பிடுவர். 'தருமம்' என்ற சொல்லைப் புண்ணியம் என்றும் கூறுவர். சிவ பூசையினைத் தருமம், புண்ணியம் எனக் கூறுதலை இங்குக் குறிப்பிட வேண்டும்.

நல்லசிவதன் மத்தால் நல்ல சிவயோகத்தால்
நல்ல சிவஞானத்தால் நானழிய - வல்லதனால்
ஆரேனும் அன்புசெயின் அங்கே தலைப்படுங்காண்
ஆரேனும் காணா அரன்

என்னும் திருக்களிற்றுப்படியார் சரியை கிரியைகளையே 'சிவ தருமம்' என்கிறது. சரியை கிரியைகள், சிவபூஜையினைக் குறிப்பிடுவனவே. திருமூலர் சிவபூஜையினையே 'புண்ணியம்' என்பர்.

புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண்டு அருள்செய்யா நிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை ஈசனை
நண்ணல் செல்லாது நழுவுகின் றார்களே.

என்பது திருமந்திரம்.

சைவ நெறியினை விளக்கும் அறிஞர்கள், புண்ணியத்தை இரண்டு வகையாகப் பயன்படுத்திக் கூறுவர். 1. பசுபுண்ணியம் 2. பதிபுண்ணியம். சுவர்க்கப் பேற்றுக்குக் காரணமானது 'வருணாசிரம தருமம்' என்று கூறி அதனைப் பசுபுண்ணியம் எனக் குறிப்பிடுவர். சிவப்பேற்றுக்குரியனவாகச் சரியை, கிரியை, யோக, ஞானங்களைக் கூறி அவற்றைப் 'பதிபுண்ணியம்' என்பர். வருணாசிரம தருமத்தை வேதத்தாலும் அதன் வழிநூலாகிய ஸ்மிருதி முதலியவற்றாலும் உணர்த்தப்படும் 'வைதிக தருமம் என்றும், சரியை, கிரியை, யோக ஞானங்களைச் சைவாகமத்தால் உணர்த்தப்படும் சிவதருமம் என்றும் கூறுவதுண்டு. 'நான்கு வருணத்திற்கும் நான்கு ஆசிரமத்துக்கும் விதித்த பசுபுண்ணியங் களைச் செய்து சுவர்க்கத்திற் சென்று போகம் துய்த்து மீண்டும் பூமியிலே பிறப்பார்கள். அவர்கள் முன்செய்த வைதிக புண்ணிய மிகுதியினாலே சைவாகமத்தால் உணர்த்தப்படும் சைவத்தில் பிரவேசிப்பர், என்னும் போதே, சைவம் வருணாசிரம தருமத்தை ஏற்றுக்கொண்டாலும், வருணாசிரம தருமத்தினும் உயர்ந்தது; வருணாசிரம தருமத்தை வென்றே சைவத்திற் புகமுடியும் என்ற கருத்தையும் பெறுகிறோம். இதற்கேற்ப, வேதம் மூன்று வருணத்தாருக்கும், ஆகமங்கள் நான்கு வருணத்தாருக்கும் உரியன என்னும் கருத்தும் இதனை வற்புறுத்தவே எழுந்திருக்க வேண்டும். இந்நிலையில் சைவ சாத்திரங்கள் சில சாதீய உணர்ச்சியில் நின்று சிலவிதிகளைக் கூறுதல், பொதுவான உணர்ச்சிக்கு ஏற்றதாகத் தெரியவில்லை.

பல நிலைகளிலுள்ள சமுதாயச் சூழலில் வாழ்பவர்களும் சைவர்களாக வாழலாம்; சிவனருள் பெற்றுய்யலாம் என்பதே சிவன் அடியார்களின் வாழ்க்கை வரலாறு நமக்கு உணர்த்துவது. சிவனடியார்கள் பல சாதிகளில் பிறந்திருக்கலாம். அவர்கள் பிறந்த சாதி அடிப்படையில் அவர்களை மதிப்பிடுவது சைவமன்று. வருண தருமம் தானும் ஓர் இலட்சியச் சிந்தனையே. சிலரை இழிந்த குலத்தில் பிறந்தவர்கள் என ஒதுக்குவது அதன் நோக்க மன்று. இந்நிலையில் வைதிகத்திலும் சைவம் உயர்ந்ததெனக் கூறிக் கொள்ளும் சைவர்கள் சிலர் மக்களைச் சண்டாளர் என்றும் புலையர்கள் என்றும் ஒதுக்குவது முறையன்று; இவ்வாறு ஒதுக்கு வது சிவநெறியன்று எனச் சைவ சமயத் தலைவர்கள்—குரவர்கள் நமக்குப் பலகாலும் எடுத்துக் கூறியுள்ளனர்.

ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில்
அவர் கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே —அப்பர்

சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்!
கோத்திரமும் குலமும் கொண்டென் செய்வீர் —அப்பர்

சாதி குலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை அல்லலறுத்தாட் கொண்டு
பேதைகுணம் பிறர் உருவம் யான் எனது என்னுரை மாய்த்துக்
கோதில் அமுதானானைக் குலாவு தில்லை கண்டேனே
—மாணிக்கவாசகர்.

சைவம் சாதீய நெறியன்று; தெய்வீக நெறி; பசுபுண்ணியம், பசு போதத்திலிருந்து செய்யப்படுவது; பதிபுண்ணியம் பதிபோதத்திலிருந்து செய்யப்படுவது. பசுபோதத்திலிருந்து செய்யும் போதுதான் நல்வினை தீவினை என்ற இரண்டாட்டம் உண்டு. தீவினையை விடுத்து நல்வினையைச் செய்ய வேண்டும் என்பதே பசுபுண்ணியத்தில் வற்புறுத்தப்படுகிறது. வருணாசிரம தருமம் பசுபோதத்திலிருந்து செய்யப்படுவதாகக் கொள்வதாலேயே பசுபுண்ணியம் என்றனர். சிவபூஜை தானும் பசுபோதத்திலிருந்து செய்யப்படின் அதுவும் பசு புண்ணியமே; எனவே அப்புண்ணியமும் விலக்கத்தக்க பொன் விலங்கே. இதனை விளக்கும் சிவஞான முனிவர் இருவினைகள், பசுநல்வினை—தீவினை என்றும் சிவநல்வினை—தீவினை, என்றும் இருவேறு வகைப்படும்; எனவே இருவினை ஒப்பும் அவ்வாறு பசு நல்வினை தீவினைகள் தம்முள் ஒத்தலாகிய இருவினை ஒப்பென்றும், சிவநல்வினை தீவினைகள் தம்முள் ஒத்தலாகிய இருவினை ஒப்பென்றும் இருவேறு வகைப்படும் என்பதும் பெற்றும். சிவநல்வினை தீவினைகள் தம்முள் ஒத்தலாவது, சிவநல்வினையும் தீவினை போலத் தமது முதலுபகாரத்தை மறந்து பிறவிக்கேதுவாய்ப் பசுபோதம் முனைத்துச் செய்யப்படுவதொன்றெனத் தெளிந்துஉவர்த்துவிடுவோனது அறிவின்கண் அவ்வாற்றான் ஒப்ப நிகழ்தல்' என எழுதுவர். (பாடியம். பக். 41.) இதைப் போன்று வேத வேள்வியும் சிவனே முழுமுதல் எனத் தெளிந்த ஞானத்தோடு பதி— உணர்வில் நின்று செய்யப்படின் பதிபுண்ணியமே என்றும் குறிப்பிடுவர்.

பசு புண்ணியம் பசு—போதத்திலிருந்து செய்யப்படும்போது அது இடம், காலங்களுக்கேற்பவே அமையும்; அதன் பயனும் அவ்வாறே அமையும். பதி—புண்ணியம் பதி போதத்திலிருந்து செய்யப்படுவதாதலின் காலம்—இடம் கடந்த நோக்கு அதில் அமைந்திருத்தலின், காலம் இடம் கடந்த ஞானானுபவமே அதன் பயனாகிறது. சிவானுபவமும் அதுவே. ஒரு குறிப்பிட்ட வகையான செயலைப் பசு—புண்ணியம் என்பதும், ஒரு குறிப்பிட்ட

செயலைப் பதி—புண்ணியம் என்பதும் சைவத்தின் அடிப்படையான செய்தியன்று என்பதே மனங்கொள்ளத்தக்கது.

தருமத்தைப் பொதுவென்றும் சிறப்பென்றும் பாகுபடுத்தும் போது முன்னர்க் கூறியது போல், சிவப்பேற்றுக்குத் துணையாக விருந்து ஒருவனை உய்விக்கும் சிவபூசையே, சிவவழிபாடே, சிறப்பான அறம்; அதற்கு ஒருவனைப் பக்குவப் படுத்துவதே பொதுவான அறம் எனல் வேண்டும். இப்பொதுவறங்களை யோக நூலார் இயம நியமங்கள் என்பர்.

ஒழுக்கம் அன்பு அருள் ஆசாரம் உபசாரம் உறவு சீலம்
வழுக்கிலாத் தவம் தானங்கள், வந்தித்தல், வணங்கல் வாய்மை
அழுக்கிலாத் துறவு, அடக்கம் அறிவொடு அர்ச்சித்தல் ஆதி
இழுக்கிலா வறங்களானால் இரங்குவான் பணியறங்கள்
—சித்தியார். சூ. 2. 113

இதனை விளக்கும் அறிஞர்கள் ஒழுக்கம் முதலியன அறஞ்செய்வார் யாவர்க்கும் வேண்டப்படும் பொது நன்மைகள் என்பர். இவற்றை மேற்கொண்டொழுகும் போது, இறைவன் அவற்றைத் தன் பணியாக ஏற்று அருள் செய்வான் என்பது இதன் பொருள். இப்பொது நன்மைகளை மேற்கொண்டொழுகுவதோடு சினம் முதலியவற்றை அகற்றி வாழ்தலே சிவபூசைக்கு ஏற்ற அடிப்படையை அமைத்துத் தரவல்லது என்றும் சித்தியார் கூறும்.

மனமது நினைய, வாக்கு வழுத்த, மந்திரங்கள் சொல்ல,
இனமலர் கையிற்கொண்டு அங்கு இச்சித்த தெய்வம் போற்றிச்
சின முதலகற்றி வாழும் செயலறமானால் யார்க்கும்
முனம் ஒரு தெய்வம் எங்கும் செயற்கு முன்னிலையாமன்றே
—சித்தியார். சூ.2. 114

சினம் முதலிய தீமைகள், காமம், கோபம், கொலை, களவுகள், முதலியவை, சிவ வழிபாட்டுக்குப் பகை உணர்வுகள் என்பதைத் திருமுறைகளும் கூறும். ‘ஆர்வச் செற்ற குரோதம் நீக்கி உன் திறத்தனாய் ஒழிந்தேன்’ என்பர்.

## பதிபுண்ணியம்

முன்னர்க் கூறியது போல் பதிபோதத்திலிருந்து செய்யப் படுவதே பதிபுண்ணியம். பதிபுண்ணியச் செயலை, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு நிலைகளில் சமய நூற்கள் விளக்கும்.. இச்செயல்களே தம்மளவில் பதிபுண்ணியம்

ஆகிவிடுவதில்லை; பசுபோதத்திலிருந்து விடுபட்டுப் பதிபோதத்தோடு தன் முனைப்பு அடங்கி,[1] சிவ—உணர்வு மேலெழுந்து நிற்கச் செய்யப்படும்போதே பதிபுண்ணியம் ஆகின்றன.

உயிர்கள் பசுபோதத்திலிருந்து விடுபட்டதற்கு அடையாளமாக, இருவினையொப்பு மலபரிபாகம் என்னும் இரண்டு அனுபவ நிலைகளையும், பதிபோதத்தை அடைந்து விட்டதற்கு அடையாளமாகச் சத்திநிபாதம் என்னும் அனுபவ நிலையினையும்'சாத்திரங்கள் கூறும். சத்திநிபாதம் எய்தப் பெற்ற உயிர்கள், தீக்கை பெற்று மேற்கொள்ளத்தக்க பதிபுண்ணியச் செயல்கள் என்ற அளவிலேயே சரியை, கிரியை, யோக, ஞானங்களை விளக்குவர்.

சரியையினைத் தாசமார்க்கம் என்றும் கிரியையினைச் சற்புத்திர மார்க்கம் என்றும், யோகத்தைச் சகமார்க்கம் என்றும் ஞானத்தைச் சன்மார்க்கம் என்றும் கூறுவர். இவ்வாறு கூறுவது இந்நான்கும் படிப்படியாக இறைவனிடத்தில் நெருங்கிச் சென்று செய்யும் புண்ணியச் செயல்கள் என்பதை நன்கு புலப்படுத்தும். 'நெருங்கிய உறவு' என்பது ஒருவர் அகவளர்ச்சியின் புலப்பாடே. அகவளர்ச்சிக்கு ஏற்ற தீக்கை பெற்றே, சிவபுண்ணியச் செயல்களை மேற்கொள்ள வேண்டும் என்பர். சரியையாளர் சமய தீக்கையும் கிரியையாளரும் யோக நெறியினரும் 'விசேட தீக்கையும்' ஞான நெறியினர் நிருவாண தீக்கையும் பெற வேண்டும் என்பர்.

## சரியை

ஆண்டான்—அடிமை உறவிலிருந்து செய்யப்படுதலின், இதனைச் 'தாசமார்க்கம்' என்பர். இத்தொண்டினை, 1. திருக்கோவில் அலகிடுதல், மெழுகுதல் 2. கோவிலை ஒட்டி நந்தவனம் அமைத்தல், மலர்பறித்துத் தார், மாலை, கண்ணி தொடுத்து இறைவற்குச் சாத்தல், 3. திருவிளக்கிடுதல். 4. இறைவனைப் புகழ்ந்து பாடுதல், 5. அடியவர்களைக் கண்டால் பணிந்து, அவர்க்குத் தொண்டு செய்தல் என விளக்குவர்.

சிவன் திருக்கோவிலுக்குச் செய்யும் புறத்தொண்டினையும் சிவனடியார்க்குச் செய்யும் தொண்டினையும் இங்குக் குறிப்பிட்டாலும், அகவளர்ச்சி பெற்றவர்கள் தீக்கை பெற்று மேற்கொள்ளத் தக்க பதிபுண்ணியத்தின் முதற்படியாகவே சரியையினைக் கூறுவர். எனவே இதனால் அடையும் பேற்றினையும் 'சிவ

1 தெய்வ—உணர்வு தாழ்ந்து நிற்கத்தன்முனைப்பு மிகுந்து நிற்பது பசுபோதம் தன்முனைப்பு அடங்கி நிற்கச் சிவ—உணர்வு மிகுந்து நிற்பது. பதிபோதம்

லோகம்' சார்தல் என்றே கூறுவர். சரியைத் தொண்டுகள் சிறிது வேறுபாட்டுடன் விளக்கப்படுதலும் உண்டு. சரியை பூஜைக் குரிய உபகரணங்களையும் முறைகளையும் கூறும் என ஆகமத்தைக் கொண்டு விளக்க, சிவபுராணங்கள் திருக்கோவில் எடுத்தலையும் ஆகமம் போல் கிரியையில் கூருமல் சரியையில் கூறும்.

## கிரியை-சற்புத்திர மார்க்கம்

தந்தை—மகன் உறவில் நின்று செய்யும் திருத்தொண்டு என்பதால் இதனைச் சற்புத்திரமார்க்கம் என்பர். மூர்த்தியின் முன் நின்று செய்யும் சிவபூசையினையே கிரியை என்பர். சமயதீக்கை பெற்றுச் சரியையினை மேற்கொள்வது போல், விசேடத்தீக்கை பெற்றுக் கிரியையினை மேற்கொள்ள வேண்டும் என்பர். சரியை யாளரினும் அகவளர்ச்சி பெற்றவர் கிரியையாளர் என்பதையே இவ்வாறு தீக்கையில் வைத்து விளக்குவர். இத்தொண்டினை விளக்கும் போது மணமலர், தூபம், தீபம், மஞ்சனம், அமுது என்னும் பூசைக்குரிய பொருள்களைக் கைக்கொண்டு பஞ்சசுத்தி செய்து ஆசனமிட்டு மூர்த்தியை எழுந்தருளச் செய்து, மூர்த்தி மானுகிய பரஞ்சோதியைப் பாவனை செய்து ஆவாகித்து. உண்மையன்போடு அருச்சனை செய்து, துதித்து அக்கினி காரியம் செய்து முடிக்க வேண்டும் என்பர்.

இப்புண்ணியத்தினைச் செய்வோர் 'சிவசாமீப்பியம்' பெறுவர். புறத்தொழிலால் திருக்கோவில்—தொண்டு செய்வதற்கு வேருகச் சரியைக்கு வேருக, அகத்தொழில், புறத்தொழில் இரண்டாலும் அரு உருவத் திருமேனியாகிய சிவனை வழிபடுதல் எனக் கிரியை யினை விளக்குவதும் கிரியையாளரின் வளர்ச்சியைக் காட்டுவதே. கிரியையைப் பற்றிய விளக்கத்தைச் சிவபூசையை விளக்கும்போது அறியலாம்.

## யோகம்-சகமார்கம்

தோழமை உறவில் நின்று இறைவற்குத் தொண்டு செய்தல் என்பதால் இதனைச் சகமார்க்கம் என்பர். பொதுவாக 'அட்டாங்க யோகத்தைக் கூறினுலும்' விளக்கும்போது சிறிது வேறுபட்டு நின்றே விளக்குவதாகத் தோன்றுகிறது. குண்டலி சக்தியை ஆறு ஆதாரங்களின் வழி மதி மண்டலத்தின் மேலேற்றி, சோதி தியானத்தில் இன்ப—அனுபவத்தில் திளைத்திருத்தல்' என்பர்.

யோகம் பற்றி விளக்கும் போது, இலயயோகம் இராசயோகம் அடயோகம், சந்திரயோகம், பரியுங்கயோகம், அட்டாங்க

யோகம் எனப் பலவற்றைக் கூறினாலும், அட்டாங்க யோகத்தையே சிறப்பாக எடுத்துக் கூறுவர். சைவர்கள் அளவில் அதுவே சிவ—ராசயோகம் எனல்வேண்டும்.

யோகத்தைக் கிரியாபாதத்தின் வளர்ச்சியாகவே கூறுவர் இது ஓர் அக வழிபாடு. சரியையினைப் புறவழிபாடு என்றால் கிரியையினை, அகப்புற வழிபாடு என்றும், யோகத்தை அக—வழி பாடு என்றும் அவை வளர்ச்சிபெற்று வருவதாகக் கூறலாம்.

சகமலாத டிமையில்லை தானலால் துணையுமில்லை
நகமெலாம் தேயக்கையால் நாண்மலர் தொழுது தூவி
முகமெலாம் கண்ணீர் மல்க முன்பணிந்தேத்தும் தொண்டர்
அகமலாற் கோவில்இல்லை ஐயன் ஐயாறனார்க்கே

என்பது அப்பர் சுவாமிகள் பாடல். இப்பாடல் புறவழிபாட்டின் விளைவாக இறைவன் அகத்தே கோவில் கொள்வதைத் தெளிவாக உணர்த்துகிறது.

அட்டாங்கயோகத்தை, இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம் பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் எட்டு உறுப்புக்களைக் கொண்டு விளக்குவர். இவற்றை, 1. புலனொடுக்கம், 2. வளியிரண்டும் முறைப்படுத்தப் படுதல், 3. சோதி நினைந்திருத்தல் என்றும் கூறுவர். உடலைக் கட்டுப்படுத்தல் (ஆசனம்) மூச்சைக் கட்டுப்படுத்தல் (பிராணாயாமம்) மனத்தைக் கட்டுப் படுத்தல் (தியானம்) என்றும் கூறலாம்.[1] மேலும் திருஞான சம்பந்தர்,

ஊனிலுயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர்
ஞான விளக்கினை ஏற்றி, நன்புலத்
தேனை வழி திறந் தேத்துவார்க் கிடர்
ஆன கெடுப்பன அஞ்செ ழுத்துமே.

எனப்படும்போது, உயிர்ப்பை ஒடுக்குவது ஞான அனுபவத்துக்கு இட்டுச் செல்வதற்கன்றி உடல் நலத்துக்கு மேற்கொள்ளும் பயிற்சி யன்று என்றும் பஞ்சாக்கரத்தியானமே மேற்கொள்ளப்பட வேண்டுவது என்றும் கூறக் கேட்கிறோம்.

இவ்விளக்கம், சிவபூசை (கிரியை) தானும், யோகானுபவத்துக்கு இட்டுச் செல்வதாகவிருக்க வேண்டும், யோகமே இறுதி இலட்சியத்துக்கு இட்டுச் செல்லும் ஞானத்தைத் தரவல்லது என்ற எண்ணத்தையும் தருகிறது.

---

1 சினமலி யறுபகை மிகுபொறி சிதைதருவகை வளிநிறுவிய மனன உணர்வொடு எழுதருபொருள் நியதமும் உணர்பவர் என்னும் சம்பந்தர் பாடலில் இம்மூன்று நிலைகளும் தெளிவாகக் கூறப்படுகின்றன,

## ஞானம் - சன்மார்க்கம்

நாயகி நாயகன் உறவில் நின்று இறைவனுக்குத் தொண்டு செய்தல் என்பர். இதனைச் சன்மார்க்கம் என்றும்கூறுவர். சரியை, கிரியை, யோகங்களால் பெறுவது ஞானம், ஞானத்தால் அடைவது சிவப்பேறு என்று விளக்குவதோடு சரியை, கிரியை யோகங்கள் போல், ஞானத்தை நெறியாகவும் விளக்குவர். சிவபிரானை வழிபடும்போது யோகநெறியில் நின்று தியானம் மேற்கொண்டு சமாதிகூடுதலைப் பேசுவர். இங்கும் நிட்டை கூடலையே ஞானத்தின் முதிர்ச்சியாகக் கூறுவர். ஞான நூற்களை ஓதல், ஓதுவித்தல், கேட்டல், கேட்பித்தல், சிந்தித்தல் என்பவற்றை 'ஞானபூசை' எனக் கூறிய சித்தியார், கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல் என்பவற்றை ஞான—அனுபவப் படிகளாகக் கூறும். நிட்டை கைகூடப்பெற்றவரே பரமுத்தி அடைவர் என்பது சைவர்கள் உறுதி.

சைவத்தின் எய்தப் பெற்றோர், ஆசிரியன் காட்டும் சைவாகம நெறியில் சமயதீக்கைபெற்றுச் சரியை நெறியைத் தலைப்பட்டு, அது முற்றிய பின்னர் விசேட தீக்கைபெற்றுக் கிரியை நெறியைத் தலைப்பட்டு, அது முற்றிய பின்னர் யோகநூல் கேட்டு, யோகநெறியைத் தலைப்பட்டு, இம்மூன்றும் முறையான் முற்றிய பின்னர் நிருவாணதீக்கை பெற்று ஞான நெறியைத் தலைப்பட்டு வீடு பேறடைவர் என எழுதுவர்.

| | மார்க்கம் உறவு | இறைவன் | தொண்டு | சத்தி நிபாதம் | உவமை | பேறு |
|---|---|---|---|---|---|---|
| சரியை | தாசமார்க்கம் (ஆண்டான் அடிமை உறவு) | சகள வடிவம் | புறத் தொண்டு உடல் | மந்த தரம் | அரும்பு | சாலோகம் |
| கிரியை | சற்புத்திர மார்க்கம் தந்தை-மகன்உறவு | சகள நிஷ்களம் | உடல் உள்ளம் | மந்தம் | மலர் | சாமீபம் |
| யோகம் | சகமார்க்கம் தோழமை உறவு | நிஷ்களம் | உள்ளம் | தீவிரம் | காய் | சாரூபம் |
| ஞானம் | சன்மார்க்கம் நாயக-நாயகி உறவு | சச்சிதானந்தப் பிழம்பு | அறிவு | தீவிர தரம் | கனி | சாயுச்சியம் |

சாத்திரங்கள், படிப்படியாக வளர்ச்சியடைந்து ஆன்மாக்கள் முத்தி அடைவதை இவ்வாறு விளக்கினாலும், கருவிலே திருவுடையாராகத் தோன்றிய ஞானிகள் சிலர், சிவபுண்ணிய மிகுதியால் நேராகவே இறையருள் பெற்றுய்ந்துள்ளார்கள்; உய்ய முடியும் என்பதும் சாத்திரத்திற்குடன்பாடே.

சித்தாந்தத்தே சிவன்தன் திருக்கடைக்கண் சேர்த்திச்
செனனம் ஒன்றிலே சீவன் முத்தராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞானவாரி
மடுத்தானந்தம் பொழிந்து வரும்பிறப்பை யறுத்து
முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்பன் என்று
மொழிந்திடவும் உலகரெலாம் மூர்க்கராகப்
பித்தாந்தப் பெரும் பிதற்றுப் பிதற்றிப் பாவப்
பெருங்குழியில் வீழ்ந்திடுவர் இதுவென்ன பிராந்தி

என்பது சித்தியார்; 'பக்குவ—ஆன்மாக்களுக்கு இறைவன் ஒரு பிறவியிலேயே முத்தியளிப்பான்' என்பது இதன் கருத்து.

இங்குக் கூறப்படும் சரியை கிரியை யோகங்கள், சத்திநிபாத நிலை அடைந்தவர்கள் குருவிடம் தீக்கை பெற்றுச் சிவபோதத்தோடு செய்யப்படும்போது சிவபுண்ணியமாகக் கருதப்படுவன. சத்திநிபாதத்தை அடையாதவர்களும் இங்குக் கூறப்படும் தொண்டுகளை உண்மை அன்போடு செய்து வந்தால் அவை நம்மை இறைவன்பால் கொண்டு சேர்க்க வல்லன என்றும் நம் சமயப் பெரியோர்கள் கூறுவர். அப்பர் சுவாமிகள் அனைய சமயப் பெரியோர்களும், ஒவ்வொரு சைவனும் மேற்கொள்ளத்தக்க தொண்டுகளாக இவற்றைக் கூறுவர்.

நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தமும் எம்பிரானுடைய கோயில்புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச்
சங்கரா செய போற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடை யெம்மாநீ என்றும்
ஆரூரா என்றென்றே அலறுநில்லே.

என்னும் போது, தம் நெஞ்சை விளித்துக் கூறுவதாகவமைந் திருப்பினும் ஒவ்வொருவருக்கும் வற்புறுத்தும் பணிகளாகவே தொண்டுகள் சிலவற்றைக் குறிப்பிடுகிறார். இதனை மேலும் தெளிவாக,

விளக்கினார் பெற்ற இன்பம் மெழுக்கினாற் பதிற்றியாகும்
துளக்கின் நன்மலர் தொடுத்தால்-தூய விண்ணேறலாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்
அளப்பில கீதம் சொன்னார்க்கு அடிகள் தாமருளுமாறே
—4906

என அப்பர் சுவாமிகளே பாடுவர். இவ்வுணர்வினை மணிவாசகப் பெருமானும் பாடுவர்.

ஆமாறுன் திருவடிக்கே அகங்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமான் நின் திருக்கோவில் தூகேன்மெழுகேன்
கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே
—திருச்சதகம் 18

இத்திருவாசகம் தன்மை வாசகத்தில் பாடிச்சென்றாலும் நம்மனை வரையும் எண்ணிக் கூறுவதே.

இத்தகு புறத்தொண்டினையே, சரியையாளர் மேற்கொள்ளத் தக்க தொண்டினையே, எல்லோருக்கும் வற்புறுத்தினார்கள் எனக் கூற முடியாது. கிரியையாளர் மேற்கொள்ளும் அகப்புறத் தொண்டினையும், சிவபூசையினையும், வற்புறுத்தவே செய் கின்றனர்.

வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்தவா வினையேன் நெடுங்காலமே. — 6118

என்னும் அப்பர் பாடல் இதனைக் கூறும். அப்பர் சுவாமிகள் பாடலில் ஆங்காங்கே இக்கருத்து வற்புறுத்தப்படுகிறது.

பூக்கைக் கொண்டு அரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டு அரன்நாமம் நவில்கிலா
ஆக்கைக்கே இரைதேடி அலமந்து
காக்கைக்கே இரையாகிக் கழிவரே — 6116

கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம்
எற்றுக்கோ நமனால் முனிவுண் பதே — 6127

மேலும் இச்சிவபூசை அன்போடு செய்யப்படும்போது, அது திருத்தொண்டாகி இறைவனருளைப் பெற்றுத் தருகிறது எனவும், அன்பில்லாது செய்யப்படும் பூசையால் எந்தப் பயனுமில்லை என்றும் கூறுவர்.

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்பன் பொன்னார் சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவும் நீரும் கண்டு
நக்கு நிற்பன் அவர்தமை நாணியே

என்பது அப்பர் தேவாரம்.

புறத்தொண்டினையும் (சரியை) சிவ பூசையினையும் (கிரியை) பலருக்கும் வற்புறுத்தும் சமயத்தலைவர்கள் யோகநெறி நின்று உய்யவும் அறிவுரை கூறுவர்.

புலங்களைப் போக நீக்கிப் புந்தியை ஒருங்க வைத்து
இனங்களைப் போக நின்று இரண்டையும் நீக்கி ஒன்றாய்
மலங்களை மாற்றவல்லார் மனத்தினுட் போகமாகிச்
சினங்களைக் களைவர் போலும் திருப்பயற்றூரனாரே

என்பது தேவாரம்.

இவ்வாறு புந்தியை ஒருங்கவைத்துப் பெறும் அனுபவம்—யோக அனுபவம் 'புந்தி வட்டத்துள் புகுந்து நின்றானைப் பொய்யென்பனோ என்னும் அப்பர் பாடலும் இங்குக் கருதத்தக்கது. மேலும் யோக நெறியாகிய 'அகப்பூசையினைப் பலவிடங்களிலும் கூறுவர்.

உள்ளம் பெருங்கோவில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்க் கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலன்ஐந்தும் காளாமணிவிளக்கே.

இவ்வகப் பூசையினை ஒன்றியிருந்து 'நினைமின்கள், உம்தமக்கு ஊனமில்லை' என எல்லோரையும் அழைத்துக் கூறுவதும் கருதத்தக்கது.

ஞான நூற்களை ஓதல், ஓதுவித்தல், கேட்டல், கேட்பித்தல், சிந்தித்தல் என்பவற்றை 'ஞானபூசை' என்பர். இறைவன் திருநாமத்தை ஓதல், கேட்டல், சிந்தித்தலையும் கூறுவர். சமயக் குரவர்கள் இதனைப் பலருக்கும் வற்புறுத்துவர்.

*நீ நாளும் நன்னெஞ்சே நினை கண்டாய் யாரறிவார்*
*சாநாளும் வாணாளும் சாய்க்காட்டெம்பெருமாற்கே*
*பூநாளும் தலைசுமப்பப் புகழ் நாமம் செவி கேட்ப*
*நாநாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே*

எனப் பாடுவர் சம்பந்தர்.

குருவையடைந்து தீக்கை பெற்று மேற்கொள்ளும் தொண்டினையும், அகவளர்ச்சி அடிப்படையில், இருவகையாக விளக்குவதுண்டு. சத்திநிபாதம் அடைந்த நிலையில் தீக்கை பெற்றுச் செய்வன உண்மைச் சரியை, கிரியை, யோக ஞானங்கள் என்றும் அவ்வாறடையாத நிலையில் செய்யப்படுவன உபாயச்சரியை, கிரியை, யோக ஞானங்கள் என்றும் கூறலாம். இரண்டும் சாத்திர—அடிப்படையில் அமைந்த வழிபாடே; ஆயின் சமயக்குரவர்கள் மக்கள் அனைவரும் மேற்கொண்டுஒழுகவேண்டும் என வற்புறுத்துவன, தீக்கை பெற்றுச் செய்யத்தக்க விதி-வழிபாடுகளே என்று உறுதியாகக் கூறமுடியாது. விதிவழிபாட்டை ஓரோவிடத்துக் குறிப்பிட்டாலும் அன்பு—வழிபாட்டினையே பெரிதும் வற்புறுத்துகின்றனர் எனலாம்.

இங்கு நாயன்மார்கள் திருத்தொண்டும் கருதத்தக்கது. நாயன்மார்கள் தற்போதம் ஒழிந்து சிவபோதத்தில் வாழ்ந்தவர்களே எனக் கூறமுடிந்தாலும் அவர்கள் செய்த திருத்தொண்டுகள் முற்றுகச் சாத்திர அடிப்படையில் அமைந்தவை எனக் கூற முடியாது. சாத்திரங்கள் கூறும் புண்ணியச் செயல்களைச் செய்தவர்களும் சாத்திர அடிப்படையில் தீக்கை பெற்றே அவ்வாறு செய்தார்கள் எனக் கூற முடியவில்லை.

சாத்திரங்கள், நாயன்மார்களின் பக்குவ மேம்பாட்டை உணர்ந்து அவர் திருத்தொண்டினையும் உடன்பட்டுப் பாராட்டுவது, உண்மைச் சமய—உணர்வுக்குச் சாத்திர அறிஞர்கள் தரும் மதிப்பையே காட்டுகிறது.

*நல்ல சிவதன்மத்தால் நல்ல சிவயோகத்தால்*
*நல்ல சிவஞானத்தால் நானழிய—வல்லதனால்*
*ஆரேனும் அன்புசெயின் அங்கே தலைப்படுங்காண்*
*ஆரேனும் காணா அரன்.*

என்னும் திருக்களிற்றுப்படியார், சரியை, கிரியை, யோக, ஞானங்களால் தற்போதம் அழிந்த நிலையில் வழிபட்டால், சிவதரிசனம்

கிடைக்கும் என்கிறது. இவ்வாறு கூறுவதோடு, பெரிய புராணம் கூறும் சிவனடியார்கள் செய்த திருத்தொண்டினை நினைந்து அச்சிவதன்மத்தை வல்வினை மெல்வினை எனப் பாகுபடுத்துகிறது. இப்பாகுபாடு சாத்திர அடிப்படைக்கு ஏற்றதன்று. ஒருசில நாயன்மார்கள் செய்த திருத்தொண்டினை ஏற்றுப் பாராட்டவே இவ்வாறு பாகுபடுத்துகிறார்.

தூய அன்பை அடியவர்கள் வாழ்க்கையில் காண்கிறோம் என்பதுண்மை. நம் வாழ்க்கையிலும் தூய அன்பு வளர வாழ்க்கையை அமைத்துக்கொள்ள வேண்டும் என்பதும் சமய வளர்ச்சிக்கு வேண்டுவதே. தூய அன்பு, மெய்யுணர்வு வளர மேற்கொள்ள வேண்டிய கடப்பாடுகளாகவே சமயப் பெரியார்கள் சில கிரியைகளை, சில ஆசாரங்களை விதித்தனர். இவை காலத்துக்குக் காலம், இடத்துக்கு இடம் சிறிது மாறுபடலாம். ஆயின் இக்கிரியைகள், ஆசாரங்கள் இல்லாத நிலையில் 'ஒரு சமயம்' என்ற வடிவை நாம் உணர்ந்து பின்பற்ற இயலாமற் போய் விடுவதற்கு இடமுண்டு.

# 4. சிவ வழிபாடு

## சிவபூசை

சைவர்கள் சிவதன்மம், சிவபுண்ணியம் எனச் சிறப்பித்துக் கூறுவது பதிபோதத்திலிருந்து செய்யப்படும் சிவத்தொண்டினையே. அச் சிவத்தொண்டின் முதற்கூறே சிவபூசை. ஆயின் முன்னர்க் கூறியதுபோல் சிவபூசை அனைத்தும் சிவபுண்ணியமாதல் இல்லை, சிவபோதத்தோடு செய்யப்படும் போதே சிவபுண்ணியமாகும். உண்மைச்சரியை, கிரியை, யோகங்களுக்குத் தகுதி உடைய ஒருவன் — பக்குவான்மா, தீக்கை பெற்று நிகழ்த்தும் பூசை சிவ—புண்ணியமாகிறது. உபாயச்சரியை, கிரியைகளுக்குத் தகுதியுடைய ஒருவன் பசு-போதத்தில் வாழ்வோன், செய்யும் சிவ பூசை பசு — புண்ணியமே. சாத்திரங்களைக் கொண்டு இத்தகைய வேறுபாட்டை ஒருவர் கண்டு விளக்க முடிந்தாலும், உபாயச் சரியை கிரியைகளைச் செய்வோரும், 'சிவ பாவனையில்' நின்று பூசை நிகழ்த்துதலின், சிறந்த புண்ணியச் செயல் என்ற அளவில் பாராட்டப்படுகிறது.

சிவபோதம்—பசுபோதம் என்னும் பாகுபாடு அகவளர்ச்சியை ஒட்டி அமைவது. ஆயின் சைவ நூற்கள் சிவ பூசையினைச் சில புற நிகழ்ச்சிகளாகவும் விளக்குதலின் அதனைச் சிந்திப்பதே இங்கு நோக்கம்.

சிவலிங்கமும் திருவேடமும் (சிவனடியார்கள்) நம்மால் பூசிக்கத்தக்க சிவன் திருக்கோலங்கள் என்பது சைவர்கள் நம்பிக்கை.

> தாபர சங்கமங்கள் என்றிரண்டுருவில் நின்று
> மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருளைவைப்பன்

என்பது சித்தியார். இவ்வாறு கூறினும் விதி வழிப்பட்ட பூசையில் சிவலிங்கமே பூசித்தற்குரிய பொருள். 'காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய் நீள் நாக மணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்' எனக் கூறுவதால், பல திருக்கோலங்களுக்கும் அதனையே காரணமாக, மூலமாகக் கூறிவிடலாம். இதனாலேயே சிவலிங்கத்தை முதன்மையாகக்கொண்டு சிவபூசை நிகழ்த்தப் பெறினும் பிற சிவன் கோலங்களும் சிவ பூசையில் இடம் பெறுகின்றன.

## சிவபூசை செய்வோர்

ஒவ்வொருவரும் சிவனுக்குப் பூசைசெய்யக் கடமைப்பட்டவர்கள் என்பர். மானிடப் பிறவி எடுத்ததே சிவபூசை செய்வதற்குத்தான் என்றும் கூறுவர்.

மானிடப்பிறவிதானும் வகுத்தது மனம் வாக்(கு) காயம்
ஆனிடத்தைந்துமாடும் அரன்பணிக்காக வன்றோ
வானிடத்தவரும் மண்மேல் வந்துஅரன் தனை அர்ச்சிப்பர்
ஊனெடுத்துழலும் ஊமர் ஒன்றையும் உணரார் அந்தோ
—11. 4. 93

என்பது சித்தியார்.

வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்தவா வினையேன் நெடுங்காலமே —6118

என்பது அப்பர் பாடல். இறைவன் ஆன்மாக்களுக்கு அளித்துள்ள கருவி கரணங்களைக்கொண்டு அப்பெருமானோடு தொடர்பு கொண்டு விளக்கம்பெறுதலே சிவபூசை என்பதும் இப்பாடலால் அறியப்படுகிறது. இதனாலேயே, மனிதர்களேயன்றிப் பிற உயிர்களும் சிவ பூசைசெய்து உய்ந்ததாகப் பெரியவர்கள் அறிவுறுத்துவர்.

இயக்கர் கின்னரர் யமனொடுவருணர் இயங்கு தீவளி
ஞாயிறுதிங்கள்
மயக்கமில்புலி வானர நாகம் வசுக்கள் வானவர்தானவ
ரெல்லாம்
அயர்ப்பொன்றின்றி நின்திருவடியதனை அர்ச்சித்தார்பெறும்
ஆரருள்கண்டு
திகைப்பொன்றின்றி நின்திருவடியடைந்தேன் செழும்
பொழில் திருப்புன்கூருளானே—7789

என்பது சுந்தரர் தேவாரம். பெரியவர்கள் கூறும் இக் கருத்துக்களைக்கொண்டு நோக்கினுல் மக்களாகப் பிறந்தவர்கள் அனைவருமே சிவபூசை செய்வதற்குத் தகுதியுடையவர்கள் என்ற கருத்துத் தெளிவாகப் புலப்படும். 'யாவர்க்குமாம் இறைவற் கொருபச்சிலை' எனக்கூறும் திருமந்திரமும் அனைவர்க்கும் சிவபூசையினை உரித்தாக்குவதையே காண்கிறோம்.

இதனுல் எல்லாவகையான பூசைகளுக்கும் எல்லாரும் உரிய வர்களே எனக் கூறிவிட முடியாது. சிவபூசையில் எளிமையும் அன்பும் ஒருபக்கம் பேசப்படினும், பிறிதொருபக்கம் சில கிரியா விதிகள் வற்புறுத்தப்பட்டன. இவ்விதிகள் பலவாகவும் வளர்ந் தன. இதன்விளைவாகச் சமயநூற்கல்வியும் ஒழுக்கமும் பூசை செய்வோருக்கு வேண்டும் என்ற எண்ணமும் ஏற்பட்டது.

செந்தமிழர் தெய்வமறைநாவர் செழுநற்கலை தெரிந்தவரொடு
அந்தமில் குணத்தவர்கள் அர்ச்சனைகள் செய்ய
அமர்கின்றஅரனுர் 3680

என்பது சம்பந்தர் தேவாரம்.

பூசை செய்வோருக்குச் 'சமயநூற்கல்வி' என்னும்போது 'ஆகமப்பயிற்சியினையே' சைவர்கள் கூறுவர். சிவாகமங்களைக் கற்றுத் தேறியவர்களாகவிருப்பதோடு ஆசாரங்களையும் மேற் கொண்டு ஒழுகுபவர்களாக இருக்கவேண்டும், என்பர். 'அம் மானே! ஆகமசீலர்க்கருளும் பெம்மானே' என்று பெரியோர் கள் பாடுவதும் குறிப்பிடத்தக்கது. விதி வழிபாட்டினை ஆகம பூசை எனவும் கூறுவர். ஆகமங்கள் பலவாகவும் விரிவாகவும் சிவ வழிபாட்டினைப் பேசுவதால் ஆகம அடிப்படையில் எழுந்த சில பத்ததிகளையும் வேறுசில நூற்களையுமே சிவபூசைக்குரிய கருவி நூல்களாகக் கொள்கின்றனர். மேலும் ஆகமங்கள் பல அச்சேறி வெளிவரவில்லை; அச்சேறி வெளிவந்துள்ள சில ஆகமங் களையும் இவை 'பண்டைய ஆகமங்களல்ல' எனக்கூறுவோரும் இல்லாமலில்லை. இன்று கருவி நூல்களாகக் கொள்ளப்படுவன.

1. அகோர சிவாசாரியார்...சைவபத்ததி (பதினெண் பத்ததிகளைக் கூறுவர்)
2. காஞ்சிபுரம் ஸ்ரீ பஞ்சாக்கரயோகிகள்...சைவபூஷணம்.
3. சிவாக்கிர யோகிகள்...பூசாக்கிரமம். பஞ்சாட்சர ஜபவிதி
4. சீகாழி தத்துவப் பிரகாச சுவாமிகள்...தத்துவப்பிரகாசம்.
5. மறைஞான சம்பந்தர்...சைவசமயநெறி

இவற்றோடு சிவார்ச்சனா சந்திரிகை, அட்டப்பிரகரணம் போன்ற நூற்களையும் திருமுறைகள் சித்தாந்த சத்திரங்களையும் துணையாகக் கொள்வதுண்டு.

ஆகமம் முதல் நூலென்றும் உபாகமம் வழி நூலென்றும் அட்டப்பிரகரணம் சார்பு நூல் என்றும் கூறுவர்.

1. தத்துவப்பிரகாசிகை
2. தத்துவசங்கிரகம்
3. தத்துவ நிர்ணயம்
4. போக காரிகை
5. மோக்ஷ காரிகை
6. நாத காரிகை
7. பரமோக்ஷ நிராச காரிகை
8. இரத்தினத் திரையம்

என்பனவே அட்டப்பிரகரணங்கள்.

## தீக்கை

இந்நூற்களைக் கருவி நூற்களாகக் கொண்டு பூசை செய்கின்றவர்கள் முதலில் தீக்கை பெற்றவர்களாக இருக்கவேண்டும். எவ்வாறு வேதப் பயிற்சிக்கு உபநயனம் வேண்டப்படுகின்றதோ அவ்வாறே ஆகம நூற்பயிற்சிக்கும் பூசை அல்லது பிற சைவக் கிரியைகள் செய்யவும் தீக்கை பெற்றிருக்கவேண்டும் என்பர்.

மலமகலப் பலவகை சுத்திகள் செய்து, ஞானசக்தி விளக்கம் பெறத் தூண்டிச் சிவச் சார்பில் தலைப்படச்செய்தலே தீக்கையின் நோக்கம். தீக்கை என்னும் சொல்லுக்கும் மலத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுப்பதையே ஆகமங்கள் பொருளாகக் கூறும் என்பர். ஒருவர் அகவளர்ச்சிக்கேற்ப அவர் பெறும் தீக்கையும் வேறுபடும். அதிதீவிர பக்குவம் உடைய ஆன்மாக்களுக்கு இறைவன் உள்நின்று உணர்த்தி வீடருளுவதுண்டு. உள் நின்று ணர்த்தும் பக்குவமடையாதவர்களுக்கு, ஆசாரியகோலத்தில் நின்று உணர்த்துவான். இவ்வாறு உணர்த்துவதனையே தீக்கை எனல் வேண்டும். குருவால் உணர்த்தப்படும்போதுதான் ஒருவன் சைவ வாழ்க்கைக்கு, சிவசம்பந்தத்தோடு வாழும் வாழ்க்கைக்குத் தகுதி அடைகிறான் என்பர்.

செய்யப்படும் தீக்கை, செய்யப்படுவோரின் அக வளர்ச்சி அடிப்படையில் நான்காகப் பாகுபடுத்தப்படும்.

1. சமயதீக்கை, 2. விசேடதீக்கை. 3. நிருவாணதீக்கை 4. ஆசாரிய அபிடேகம். ஒருவனைச் சைவசமயத்துக்கு உரிய வனாக்குவது,சமயதீக்கை என்றும், அதை விடவும் சிறப்பானது, விசேடமானது விசேட தீக்கை என்றும் முத்திப்பேற்றுக்குக் காரணமாவது நிருவாணதீக்கை என்றும் ஆசாரிய அபிடேகம் பெற்றவரே குருவாகும் தகுதியையும் பெறுகிறார் என்றும் கூறுவர்.

செய்துவைக்கும் முறையினால் தீக்கையினை ஏழாகப்பாகு படுத்துவதுண்டு.

1. நயனதீக்கை : பார்வையால் தீக்கை செய்தல். மீன் தனது சினையைப் பார்த்தல்போல் குரு, மாணாக்கனைத் தம் அருள் நோக்கால் பார்த்தல்.
2. பரிசதீக்கை : பரிசத்தால் தீக்கை செய்தல். பறவை முட்டையைச் சிறகினால் பரிசித்தல் போல் குரு, மாணாக்கனைத் தம் கைகளாலும் திருவடியாலும் பரிசித்தல்.
3. வாசகதீக்கை : வாசகத்தால் தீக்கை செய்தல். மந்திரத்தை உபதேசித்தல் என்பர்.
4. மானசதீக்கை : மனத்தால் பாவித்துத் தீக்கை செய்தல். ஆமை கரையிலுள்ள முட்டையைத் தனது மனத்தால் பாவித்தல்போல, குரு மாணாக்கனைத் தம் அருளுருவாய்ப் பாவித்தல் என்பர்.
5. சாத்திரதீக்கை : ஆகமப்பொருளை உபதேசித்துத் தீக்கை செய்தல். முப்பொருள் உண்மையினை நூல் வாயிலாகப் போதித்தல் என்பர்.
6. யோகதீக்கை : சிவயோகத்தைப் பயில உபதேசித்தல் என்பர். சீடனுட்சென்று துவாதசாந்த நிலையில் சிவனோடு கலக்கச் செய்தல் என்றும் கூறுவர்.
7. ஔத்திரிதீக்கை : ஓமத்தோடு கூடிய நிலையில் செய்யப்படும் தீக்கை என்பர். குண்டமண்டலமிட்டு அக்கினி காரியமும் செய்து பாசத்தை நீக்குதல் என்பர். இதனை ஞானவதி, கிரியாவதி என இரண்டாகப் பிரிப்பர். ஞானவதி குண்டமண்டலங்களை மனத்தாற் கற்பித்துக்கொண்டு ஆகுதி முதலியவற்றை அகத்தே செய்வது; கிரியாவதி புறத்தே செய்வது என்பர்.

சிவ பூசை செய்வதற்கு ஒருவன் குறைந்தது விசேட தீக்கை யாவது பெற்றிருக்க வேண்டும் என்பர். சமயதீக்கையால் சைவாசாரத்திற்குத் தகுதிபெறுகின்றான் என்றும் விசேட தீக்கையால் சிவ புத்திரனாகி, சிவபூசை செய்தல், சிவாகமம் பயிலுதல் போன்றவற்றுக்குத் தகுதி பெறுகிறான் என்றும் கூறுவர்.

பெறுகின்ற தீக்கை ஒவ்வொன்றனையும் தீக்கை பெறுகின்றோன் வாழ்வியல் அடிப்படையில் இரண்டாகப் பாகுபடுத்துவதுண்டு. 1. உண்மைத் தொண்டுக்காகச் செய்து வைக்கப் படுவது. 2. உபாயத் தொண்டுக்காகச் செய்து வைக்கப்படுவது. உண்மைத்தொண்டு இருவினை ஒப்பு, மலபரிபாகங்களால்

சத்திநிபாதம் அடைந்த அருளாளர்க்கு உரியது. உபாயம் மலத்தை நெகிழச் செய்யவும் அருளைப் பெறவும் விரும்பும் சாதகர்களுக்குரியது எனலாம்.

இப்பாகுபாடு பிறிதொன்றையும் நமக்கு உணர்த்தும். விதிவழி பூசை செய்வோரனைவரும் சத்திநிபாதம் அடைந்தவர்களாகவே இருக்கவேண்டும் என்பதில்லை. சிவனருளில் உறுதியும் அடிப்படை ஒழுக்கமும் சாத்திர ஞானமும் உடையவர்களாக இருந்தால் போதும். இத்தகையோர்களுக்கும் தீக்கை செய்து வைப்பதுண்டு. எனவே, தீக்கையும் சத்திநிபாதம் அடைந்தவர்களுக்கே செய்து வைக்கப் பெறுவது எனபதன்று. உபாயச் சாதனைகளில் ஈடுபடுவோர்க்கும் செய்துவைக்கப் பெறுவதே என்பதையும் கருத வேண்டும்.

## சிவபூசையின் நோக்கம்

வேதத்தில் அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கும் கூறப்பட்டன. சிவாகமத்தில் வீடு ஒன்றே கூறப்பட்டது. எனவே ஆகமம் சத்திநிபாதர்க்கு உரியது என்னும் குறிப்புச் சாத்திரங்களில் காணப்படுகிறது. ஆகமம் அடிப்படைப் பயனாகச் சிவானுபவத்தை, வீடுபேற்றைக் கூறுகின்றதென்பதைத் தவிர ஆகம பூசைகள் அனைத்தும் வீடுபேற்றையே நோக்கமாகக் கொண்டுள்ளன எனக் கூறமுடியாது. விதிவழிப்பட்ட பூசையில் உலகியல் நலன் மிகுதியாகவே காணப்படுகிறது.

காமிக ஆகமத் தொடக்கத்திலேயே இந்நூல் யாதுகூறிற்றோவெனின் அநாதிமல சித்துருவாகிய சிவபெருமான், அநாதிமல பந்தராகிய ஆன்மாக்கள் இடர்க்கடல் நீந்தி இன்பத்துறை எய்தி இளைப்பாறுதற்கின்றியமையா மரக்கலமாகச் சைவாகமங்கள் உண்ர்த்துவான் தொடங்கி முதற்கண் இஷ்டசித்திகளைத் தருவார் ஒருவர் உளர் எனவும், அவரை வழிபடுதல் இத்தகையதெனவும், அதனால் இவ்வித பயன்களை அடைவிப்பர் எனவும் தெரிவிப்பதாகிய காமிகம் என்னும் ஆகமத்தை உபதேசித்தல் கூறிற்று; காமிகம் இட்டசித்தி என்னும் குறிப்புக் காணப்படுகிறது. மேலும் சிவபூசையால் அடையும் பேற்றினை,

> திருவமிக் கடையவேண்டின் செம்மகப் பேறுவேண்டின்
> மருவலர்ச் செகுக்கவேண்டின் மாண்பொருட் கல்விவேண்டின்
> வருபெரும் புகழ்ச்சிவேண்டின் வான்முதல் எவ்விடத்தும்
> பொருவலி பூசையன்றி மற்றெவற்றாலும் பூவா

எனப் பாடுகிறது சூதசங்கிதை.

பதிபுண்ணியமாகச் செய்யப்படும் பூசையினும் வேறாக, உலகியல் நலன்கருதி, பசுபோதத்திலிருந்து செய்யும் பூஜை

யினையே இங்குக் காண்கிறோம். ஆகமங்கள் உறுதிப் பொருள்களில் அறம், பொருள், இன்பங்களைப் பரக்கப் பேசிச் செல்லாவிடினும் சிவபூசையின் பயன்களாக அவற்றைக் கூறவே செய்கின்றன.

செல்வம் ஆண்மை ஏர்சீர்த்தி வாழ்வருள்
கல்வி கட்டெழின் மகளிர் காழிலாச்
சொல்வலித் திறம் சூழ்ச்சி ஏனவும்
அல்வெரூஉங் களன் அருச்சனைப்பயன்

என்கிறது காஞ்சிப்புராணம்.

இந்துக்கள் இவ்வுலக வாழ்க்கையில் நம்பிக்கையற்றவர்கள் என்ற கருத்துப் பொதுவாக நிலவிவருகிறது; தெய்வீக இன்பத்தின் முன் இவ்வுலக இன்பம் சிறியது எனக் கூறுவதைத் தவிர இவ்வுலக வாழ்க்கையே பொருளற்றது என இந்துக்கள் கருதுவதில்லை. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களையும் சிவனைச் சார்ந்து நின்று சிவ வழிபாட்டால் பெறலாம் என்பதே சைவர்கள் கருத்து. இறை நம்பிக்கையோடு இறைவனை முன்வைத்து வாழும்போது இவ்வுலக வாழ்க்கை சிறப்பாக அமையும் எனக்கருதினர். இவ்வுலக இன்பத்துக்கும்இறைவன் துணைசெய்வான் என்ற நம்பிக்கை, சைவர்களுக்கு உண்டு. சைவ சமயக் குரவராகிய சுந்தரரும்,

பொன்னும் மெய்ப்பொருளும் தருவானைப் போகமும் திருவும் புணர்ப்பானை
பின்னை என் பிழையைப் பொறுப்பானைப் பிழையெலாம் தவிரப் பணிப்பானை
இன்ன தன்மையன் என்றறியொண்ணா எம்மானை எளிவந்த பிரானை
அன்னம் வைகும் வயற் பழனத்தணி யாரூரானை மறக்கலுமாமே.

எனப் பாடுவார்.

எனவே விதிவழிப்பட்ட பூசையில் உலகியல் நலனும் நோக்கமாக அமைந்திருத்தல் பொதுவான சமய உணர்ச்சிக்குப் பொருந்துவதே.

இவ்வாறு உலகியல் நலன் நோக்கமாகவிருந்தாலும் உண்மையில், சிவானுபவமே சிவபூசையின் இறுதி இலட்சியம். இறுதி இலட்சியத்தில் உறுதியோடிருந்து பதிபோதத்தோடு செய்யப்படும்போதே அச்செயல் பதிபுண்ணியமாகும். 'கிரியையென

மருவுமவை யாவும் ஞானம் கிடைத்தற்கு நிமித்தம்' என்பர். உலகியலிலே வாழ்வது வரையிலும் உலகியல் நலன் கருதியும் பூசை செய்யலாம் எனக்கூறினும் அப்பூசையும் படிப்படியாக உள்ளத்தைத் தூய்மைசெய்து ஞான நாட்டத்தைத் தாராது போமாயின் சிவபூசை பதிபுண்ணியமாக வளரும் வாய்ப்பை இழந்துவிடும் என்பதே இங்கு வற்புறுத்த வேண்டுவது.

முத்தனே முதல்வா முக்கணுமுனிவா மொட்டறு மலர்பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார்தமக்குப் பரகதி கொடுத்து அருள்செய்யும்
சித்தமே புகுந்து எம்மையாட்கொண்டு தீவினை கெடுத் துய்யலாம்
பத்திதந்து தன்பொற்கழற்கணேபன் மலர்கொய்து சேர்த்தலு
முத்திதந்து இந்த மூவுலகுக்குமப் புறத்தெமை வைத்திடும்
அத்தன் மாமலர்ச் சேவடிக்கண் நம்சென்னி மன்னி மலருமே.

என்னும் திருவாசகமும் இங்குச் சிந்திக்கத்தக்கது.

## ஆன்மார்த்த-பரார்த்த பூசைகள்

இந்துக்கள் பூசையினை ஆன்மார்த்தம், பரார்த்தம் எனப் பாகு படுத்துவர். இந்துக்களின் பொதுவான இப்பாகுபாடு சைவத்துறை யினருக்கும் உண்டு. சைவர்கள் ஆன்மார்த்த பூசையினை இட்ட லிங்க பூசை என்று கூறுவர். குருவிடமிருந்து பெற்ற லிங்கத் தையே இங்கு ஒருவன் பூசிக்கிறன். நீ இறக்கும் வரையிலும் கைவிடாது இப்பெருமானைப் பூசித்து வருக, எனக் குரு கொடுக்க, உயிரோடிருக்கும் வரையிலும் சிவார்ச்சனை செய்தன்றி உண் ணேன் என உறுதி கூறிப் பெற்றுக்கொண்டு பூசை செய்கிறன்.

இட்டலிங்க பூசையாயினும், சிவலிங்கம் ஒன்றையே அருச் சித்தல் என்பதில்லை. இட்டலிங்கப் பூசையினை, சுத்தம்,கேவலம் மிச்ரம் என மூன்றுகப் பாகுபடுத்துவர்.சிவலிங்கத்தைத் தவிர பிற திருக்கோலங்களைப் பூசியாமை 'சுத்தம்'; சிவம், தேவி, விநாயகர், முருகன், இடபதேவர் முதலியவர்களோடும் பூசித்தல் 'கேவலம்'; சூரியன் முதல் சண்டேசுரர்வரை விரிவாகப் பூசித்தல் 'மிச்ரம்' என்பர். துறவிகள் சுத்த பூசையினைச் செய்வர்; இல்லறத் தார் கேவல பூசை செய்வர்; ஆசாரிய அபிஷேகம் பெற்ற சிவாசாரி யர்கள் மூவகை பூசைக்கும் உரிமையுடையவர்கள் என்பர்.

## பரார்த்த பூசை

அனைத்துயிருக்கும் அருள்புரிய வேண்டிச் சிவனைத் திருக் கோவில்களில் பிரதிட்டை செய்து பூசித்தல் பரார்த்த பூசை,

இதனைப் பரார்த்த—லிங்க பூசை என்றும் கூறுவர். சிவாசாரியர்களே, ஆசாரிய அபிஷேகம் செய்யப்பெற்றவர்களே, இப்பூசை செய்வதற்குத் தகுதி உடையவர்கள். இவர்களே பிறருக்குத் தீக்கை செய்துவைக்கவும் உரிமையுடையவர்கள் என்பது கருதத் தக்கது.

கோவிலில் பூசைசெய்யும் தகுதியுடையவர்களே, ஆசாரிய-அபிஷேகம் பெற்றவர்களே ஆன்மார்த்த பூசையும் பரார்த்த பூசையும் செய்யத் தகுதி பெற்றவர்கள். அஃதில்லாதோர்-விசேட-நிருவாண தீக்கை பெற்றவர்கள், ஆன்மார்த்த பூசை ஒன்றற்கே உரியர். கோவிலில் பூசை செய்வோரும் முதலில் ஆன்மார்த்த பூசைசெய்து, அதன் பிறகே பரார்த்த பூசையினைத் தொடங்க வேண்டும் என்பது விதி-

## பூசை நிகழ்ச்சி

பூசையின் உயிர்நாடி பாவனை எனல் வேண்டும். பூசை செய்வோர் தம்மைச் சிவமாகப் பாவித்துச் சிவபாவனையில் நின்றே பூசிக்கின்றனர். தம் முன் உள்ள சிவலிங்கத்தையும் சிவபிரான் எழுந்தருளியிருப்பதாகவே பாவிக்கின்றனர்.

முற்றமுடிய பாவனை உலகிலிருந்து நிகழ்த்தப்பெறும் பூசையினையும் சைவர்கள் கூறுவதுண்டு. இதனை மானத பூசை என்பர். மானத பூசை செய்து உய்ந்தவரே பூசலார் நாயனர். அவர் திருத்தொண்டினைப் பாடும் சேக்கிழார் சுவாமிகள்,

> சாதனத்தொடு தச்சர் தம்மையும் மனத்தால்தேடி
> நாதனுக்கு ஆலயம் செய்நலம்பெறு நன்னுட்கொண்டே
> ஆதரித்தாகமத்தால் அடிநிலை பாரித்து அன்பால்
> காதலிற் கங்குற்போதும் கண்படா தெடுக்கலுற்ருர். —6
>
> அன்பரும் அமைத்த சிந்தை ஆலயத்தரனுர் தம்மை
> நன்பெரும் பொழுதுசாரத் தாபித்து நலத்திறேடும்
> பின்புபூசனைகளெல்லாம் பெருமையிற் பலநாட் பேணிப்
> பொன்புனை மன்றுளாடும் பொற்கழல் நீழல் புக்கார். —17

எனவிளக்குவர். எடுத்த கோவிலும் மானதக் கோவில்; செய்த பூசையும் மானத பூசை. முற்ருகப் பாவனை உலகிலிருந்து நிகழ்த்திய வழிபாடு. ஆயின் இதனை யாருக்கும் வற்புறுத்துவதில்லை.

## புறவழிபாடு

புறவழிபாட்டிலும் பாவனையே சிறந்து நிற்கக் காண்கிறேம். புறவழிபாட்டில் பல உபகரணங்களையும் முதலில் தேடிவைத்துக்

கொள்வர். சிவலிங்கத் திருக்கோலம், அபிடேகப் பொருள்கள், மலர்கள், ஆடை, தூபதீபங்கள், இருக்கை, பூசா பாத்திரங்கள் போன்றவற்றை எடுத்துக்கொள்வர். இவற்றை ஒன்று சேர்க்கும் பணி முக்கியமானதாயினும் இவற்றுட் சில, முதன்மை இல்லாதன, குறைந்து விடினும் அப்பொருள் இருப்பதாகப் பாவித்துப் பூசை செய்துவிட முடியும் என்பர்.

## பஞ்சசுத்தி

ஐந்துவகையான சுத்தி என்பது இதன் பொருள். பூசை செய்வோர், நீராடித் தூய உடை உடுத்துத் தக்க ஓர் ஆசனத்தி லிருந்துகொண்டு மூன்று முறை ஆசமனம் செய்வர்; வலது குடங் கையால் மந்திர பூர்வமாக நீரை மூன்று முறை உட்கொள் வதையே ஆசமனம் என்பர். ஆசமனம் செய்து, விபூதி அணிந்து கொள்வர்; உருத்திராக்கம் அணிதலும் முக்கியமானது

## 1. ஆன்மசுத்தி

மூன்று முறை ஆசமனம் செய்வது தத்துவசுத்தி செய்து கொள்ளும் பாவனையை வெளிப்படுப்பது என்பர். சைவர்கள் தத்துவங்களை மூன்று படிநிலைகளில் குறிப்பிடுவர். 1. ஆன்ம தத்துவம், 2. வித்தியா தத்துவம், 3. சிவதத்துவம். தத்துவ சுத்தியின் விளைவாக, ஆன்மபோதம் நீங்கி, சிவபோதம் தலைக் கூடுவதாகப் பாவனை; தத்துவத் தொடர்பு நீங்கி அருள் தொடர்பு ஏற்படுவதாக பாவனை. இதனையே பஞ்ச சுத்திகளுள் ஒன்றாகிய ஆன்ம சுத்தி என்பர்.

## 2. தானசுத்தி

பூசைசெய்யும் இடத்தை மந்திரத்தால் சுத்தம் செய்தல் தான சுத்தி.

## 3. திரவியசுத்தி

பூசைக்குரிய பொருள்களை மந்திரநீரால் சுத்திசெய்தல் திரவிய சுத்தி.

## 4. மந்திரசுத்தி

மூலமந்திரம், பஞ்சப்பிரம மந்திரங்கள் சடங்க மந்திரங்களை முறையோடு உச்சரித்தலை மந்திரசுத்தி என்பர்.

## 5. இலிங்கசுத்தி

இறைவன் சாந்நித்தியத்தைச் சராசரங்களிலும் பாவித்தல் இலிங்கசுத்தி என்பர். பஞ்சசுத்திகளும் செய்து, பாவனையோடு பூசை செய்யவேண்டும் என்பர்.

பஞ்சசுத்திசெய்து நின்னைப் பாவித்துப் பூசைசெய்தால்
விஞ்சிய ஞானம் விளங்கும் பராபரமே

எனப் பாடுவார் தாயுமானவர்.

இவ்வாறு நிகழ்த்தப்பெறும் சிவபூசையில் பதினறுவகை உபசாரங்களைக் கூறுவர். அவை 1. ஆவாகனம், 2. தாபனம் 3. சந்நிதானம், 4. சந்நிரோதனம் 5. அவகுண்டம் 6. தேனு முத்திரை 7. பாத்தியம் 8. ஆசமனீயம் 9. அருக்கியம், 10. புஷ்ப தானம் 11. தூபம் 12. தீபம், 13. நைவேத்தியம் 14. பானீயம், 15 ஜபசமர்ப்பணம் 16. தீபாராதனை.

இந்துக்கள் பலரும் பதினறுவகை உபசாரங்களைக் குறிப்பிட்டாலும் எல்லாரும் ஒன்றுபோல் கூறுவதில்லை. சைவர்களிலும் இவ்வுபசாரங்களைச் சிறிது வேறுபாட்டுடன் கூறுவோருண்டு. இங்குக் கூறப்பட்டுள்ள பதினறுவகை உபசாரங்களையும் சிந்தித்தாலும் சிவபூசையில் பாவனையின் ஆட்சி புலப்படும்.

1. ஆவாகனம் : என்பது சிவனை எழுந்தருள அழைப்பது என்பர். பூசையின் பொருட்டுச் சிவபிரானை இலிங்கம் முதலியவற்றில் வரவழைத்துத் தன்னைப் பார்க்கும்படிச் செய்தல் என்னும் பாவனை என இதனை விளக்குவர்.

2, தாபனம் : சிவலிங்கத்தில் தாபித்தல் என்பது சொற்பொருளாயினும், அனுக்கிரகம் செய்யும் பொருட்டு இவ்விலிங்கத்தில் எழுந்தருளியிருக்க வேண்டும் என்று அன்புடன் செய்யும் மனேபாவனையே என விளக்குவர். இது முன்னைய ஆவாகனத்தின் தொடர்ச்சியே.

3. சந்நிதானம் : சிவன் பூரணத்துவம், பூசைசெய்வோன் அறிவில் வந்து படிதல்; பூசைசெய்வோன் அறிவு சிவன் பூரணத்துவத்தில் படிதல்; இவ்வாறு ஒன்றையொன்றகலாது உறவு கொள்ளுதல் என்பர். அருள்வோனும் அருளப்படுவோனுமாகிய சம்பந்தபாவனை என்றும் கூறுவர்.

4. சந்நிரோதனம் : என்பதும் சந்நிதானத்தின் தொடர்ச்சியே. சிவனருள் எப்போதும் தன்னிடத்தில் தொடர்ந்திருக்க வேண்டும் என்னும் மனேபாவனையே என்பர்.

இப்பாவனைகள் பலவும் கைகூடுவதற்காக மந்திரங்களை உச்சரித்து முத்திரைகள் காட்டுவர். மந்திரங்களுக்குரிய அதிதேவதைகள் இப்பாவனைகளைக் கைகூடச் செய்யும் என்பது நம்பிக்கை.

5. *அவகுண்டனம்:* அவகுண்டனம் என்பதற்கு மூடுதல் என்பதே பொருள். கவச மந்திரத்தால் செய்யும் ஒருவகைச் சடங்கினையே இவ்வாறு கூறுவர். இரட்சையை எண்ணி உச்சரிக்கும் சுலோகம் ஒன்றினையே கவச மந்திரம் என்பர்.

6. *தேனுமுத்திரை:* இதனைச் சுரபிமுத்திரை என்றும் கூறுவர். பசுவின்மடி போற் காட்டும் முத்திரை என்பது பொருள். அவகுண்டனம் செய்தபின் தேனுமுத்திரையால் அமுத தாரை ஒழுகுவதாகப் பாவிப்பர். இதனால் பரமீகரணம் செய்வதாக விளக்குவர்.

7. *பாத்தியம்:* கால்கழுவ நீருதவல்

8. *ஆசமனீயம்:* ஆசமனம் செய்ய நீருதவல்

9. *அர்க்கியம் :* கைகழுவ நீருதவல் எனக்கூறுவர். இவ்வுபசாரங்கள் சடங்கு போன்று தோன்றினும் சில பாவனைகளை உள்ளடக்கியனவே. இறைவன் திருவடியில் பொருந்திநிற்றல் பாத்தியம்; அவன் அருள் முகத்தில் பொருந்தி நிற்றல் ஆசமனம்; அவன் திருமுடியில் பொருந்திநிற்றல் அருக்கியம்; எனக் கூறுவதோடு பாத்தியம் ஞானசத்தி காரியம் என்றும் ஆசமனீயம் கிரியாசத்தி காரியம் என்றும் அருக்கியம் இச்சாசத்தி காரியம் என்றும் விளக்குவர்.

இங்கு அருக்கியம் கொடுத்தல், நீர்கொடுத்தல் அளவில் அடங்குவதன்று. தூபம், தீபம், வாசனைப் பொருள், ஆபரணம், வஸ்திரம், இவற்றையும் இவ்வுபசாரத்தோடு சேர்த்துக் கூறுவர். இம்மூன்றனையும் பூசை செய்வோர் ஆன்மசுத்தி நிமித்தமாகவே கொடுப்பதாகக் கூறுவர்.

10. *புஷ்பதானம் :* கடந்த நிலையில் சென்று சிவானந்தம் பெறுவதற்காகவே முடியில் புஷ்பம் சாத்துவதாகக் கூறுவர். புஷ்பதானமும் மலர் சாத்தல் அளவில் அடங்குவதன்று. மந்திரத்தை உச்சரித்தவாறு அறுகு (புல்) அட்சதை (மஞ்சள் அரிசி) இவற்றையும் திருமுடியிற் சாத்துவர்.

11. *தூபம்*12. *தீபம் :* தூப தீபம் காட்டுதல் ஒரு புறநிகழ்ச்சி போன்று தோன்றினும் இவற்றிற்கும் உட்கருத்து உண்டு என்பர். திருமஞ்சனமாட்டுவது மலமகலுதற்கென்றும் எஞ்சியிருக்கும் வாசனுமலம் அகலுதற்கே தூப தீபம் காட்டுவதாகவும் கூறுவர். வாதனையைக் கழற்றுவது கிரியாசத்தி ஆதலால் அக்கிரியாசத்தியினைத் தூபம் என்பர். ஞானசத்தியின் விளக்கமாகவிருப்பது தீபம் என்பர். அறியாமை

அகன்று ஞானம் பிரகாசிப்பதையே தூபதீபங்கள் விளக்குகின்றன என்பர். பூசையின் போது மணி அடிப்பதற்கும் ஒரு விளக்கம் கூறப்படுவதுண்டு. மந்திரத்தை உச்சரித்தவாறு மணியினை நாபிக்கும் கீழே கொண்டுவராமல் அடிக்கவேண்டும் என்றும் அதனால் அசுரசத்திகள் அகன்று தேவ சக்திகள் சாந்நித்தியமாவர் என்றும் கூறுவர்.

13. *நைவேத்தியம் :* தூய உணவு வகைகளைப் படைத்தல்

14. *பானீயம் :* ஏலம், சந்தனம், பச்சைக்கருப்பூரம் பாதிரிப்பூ, செங்கழுநீர்ப்பூ கலந்த நீரைப்படைத்தல்; இவற்றை நிவேதனம்செய்து தாம்பூலம் (முகவாசம்) கொடுப்பர். நைவேத்தியம் என்பது ஒருவன் தன் தற்போதத்தைப் படைக்கும் பாவனையே என்பர். இவற்றைப் படைக்கும்போதும் மந்திரத்தை உச்சரித்து முத்திரைகளைக் காட்டுதல் உண்டு.

15. *ஜெபசமர்ப்பணம் :* இறைவனுக்குரிய மந்திரத்தை நூற்றெட்டு தடவை செபித்து, சிவனருளால் தனக்குச் சித்தியுண்டாக வேண்டும் என்ற பாவனையில் தன் செபத்தை ஏற்றுக்கொள்ள வேண்டி, 'அதிக இரகசியமாயுள்ளவரும் காக்கின்றவராயுமுள்ள பகவானே. தேவரீருடைய அனுக்கிரகத்தினல் எனக்குச் சித்தியுண்டாதற் பொருட்டு, என்னுற் செய்யப்பட்ட செபத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்' என்னும் கருத்தமைந்த மந்திரத்தைச் சொல்லிச் செபத்தை 'வரத ஹஸ்தத்தில்' சமர்ப்பிப்பர். சர்வகுணங்களும் கழன்று வீடுபெறுதற்காக இதனைச் செய்வதாகக் கூறுவர்.

16. *தீபாராதனை :* தீபங்கள் பல அடுக்குகளாக உள்ளன. ஒவ்வொன்றுக்கும் தனித்தனிப் பயன்கள் கூறப்படுவதுண்டு. சிறப்பானது கருப்பூர தீபாராதனையே. கருப்பூரம் வெண்மை நிறத்தைப் பொருந்தி அக்கினிபற்றியவிடத்தே அதன் வடிவமாக விளங்கி ஓர் பற்றுமில்லாமல் முற்றுங்கரையப் பெற்று ஆகாயத்துடன் கலந்து அத்துவிதமாய் விளங்கல்போல, ஆன்மா வெண்மை நிறமான சாத்துவிக குணத்தைப் பொருந்தி ஞானக்கினி பற்றிய விடத்தே பசுத்தன்மை நீங்கிச் சிவத்தன்மை விளங்கப்பெற்று மூவகைச் சரீரங்களும் களையப்பெற்று எல்லாப்பற்றும் சிதாகாசத்தோடு அத்துவிதமாய்ப் பேரானந்தப் பெருவாழ்வு அடைதல் வேண்டும் என்னும் குறிப்பை உணர்த்துவதே கருப்பூர தீபாராதனை என்பர்.

*தீதணையாக் கர்ப்பூர தீபமென நானகண்ட*
*சோதியுடன் ஒன்றித்துத் துரிசறுப்ப தெந்நாளோ*

என்பது தாயுமானவர் பாடல்.

பூசையின் இறுதியில் தோத்திரம்செய்து வலம்வந்து வந்தனம் செய்து முடிப்பர்.

பூசை முடிவில் அக்கினிகாரியம் செய்தலுமுண்டு. 'உமை யொருபாகனை ஓமம் செய்து உணர்மின்கள் உள்ளத்தால்' என்பர் அப்பர் சுவாமிகள்.

சிவபூசையில் பாவனை மிகுந்து நின்றாலும் புறத்தே புலனாகுமாறு விளங்குவன மந்திரம், முத்திரை, உபசாரம், ஓமம் என்பனவே. இவை சிவபூசையில் சைவக் கோட்பாட்டிற் கேற்பவே அமையும். முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து சென்று அங்குறையும் சிவத்தோடு கலத்தல் சைவர்களின் இலட்சியம். இவ்விலட்சியம் சிவபூசையின், பலநிலைகளிலும் விளங்கித் தோன்றக் காணலாம்.

சிவபூசை புறக்கிரியை போன்று தோன்றினாலும் பாவனையினால் வளர்ந்துவரும் அகவளர்ச்சியினையும் நாம் கருதவேண்டும். கிரியையினை ஞானம் கிடைத்தற்கு ஏதுவாகக் கூறுவதும் கருதத் தக்கது பதினாறுவகை உபசாரங்கள், சமுதாயச் சிந்தனையின் எதிரொலியாகவிருக்கலாம். சிறந்த தலைவனுக்குச் செய்யும் மரியாதை என்ற அளவிலும் கருதுவதற்கிடனுண்டு. ஆயின் அவற்றினிடமாகப் பயன்படுத்தப்படும் மந்திரங்களும் முத்திரைகளும் சிவபூசையின், தனித்தன்மையினை விளக்குவதோடு உட்கருத்தையும் புலப்படுத்தி, பாவனையினால் ஒருவன் உயர்ந்து செல்லும் நெறியினையும் நமக்குக்காட்டுகின்றன.

சிவபூசைக்குப் பயன்படுத்தும் மலர்களும் பிறமூர்த்திகளுக்குச் செய்யும் பூசையில் பயன்படுத்துவனவே எனக் கூறமுடியவில்லை. பொதுவாக எட்டு மலர்கள் முக்கியமானவை என்ற கருத்துத் தேவார காலத்திலேயே காணப்படுகிறது. அவற்றை புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், நீலோற்பலம், பாதிரி, அலரி, சொந்தாமரை என்பர். சாதகர்களுக்கு இருக்க வேண்டிய எட்டுப் பண்புகளை அட்டபுட்பம் எனக் கூறும் வழக்குமுள்ளது. அவை, கொல்லாமை, அடக்கமுடைமை, பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்பன.

இவ்வாறெல்லாம் விளக்கினாலும் சிவார்ச்சனைக்கு வில்வத்தைச் சிறப்பாகக் கூறும் மரபுமுள்ளது.

நோயுற வேண்டினும் நோன்மை வேண்டினும்
மாயிரும்புவி அடிவணங்க வேண்டினும்
தூயவிண் வேண்டினும் துறந்து மும்மலம்
ஓயநன் முத்தியை உதவும் வில்வமே

என்பது பேரூர்ப்புராணம்; வில்வத்தை அடுத்து மருக்கொழுந்தைக் கூறுவதுமுண்டு.

# 5. திருக்கோவில் வழிபாடு

இறைவனுக்கென்று கோவில் எடுத்து வழிபடுதல் இந்துக்கள் பலரும் செய்யும் ஒன்றே. திருக்கோவில் அமைப்பிலும் வழிபாட்டிலும் பல பொதுத் தன்மைகள் உண்டு. திருக்கோவிலை வெறும் பிரார்த்தனை மண்டபம் என்ற அளவில் கொள்ளாமல் இறைவனே நம்பொருட்டு வந்து தங்குகின்ற இடமாகக் கொள்ளுதல், வழிபாட்டில் பலவகை (16 வகை) உபசாரங்களையும் செய்தல் போன்றவை பொதுத்தன்மைகளே.

சைவ வாழ்க்கைக்கு ஏற்ற சைவச் சூழ்நிலை ஓர் ஊர் பெற்றிருக்க வேண்டுமென்றால் சைவத் திருக்கோவிலை அது மையமாகக் கொண்டிருக்க வேண்டும் என்பர். திருக்கோவில் இல்லாத ஊர் ஊரன்று; காடு என்பர்.

*திருக்கோவில் இல்லாத திருவிலூரும் திருவெண்ணீறணியாத திருவிலூரும்*
*பருக்கோடிப் பத்திமையாற் பாடாவூரும் பாங்கினொடு பலதளிகள் இல்லாவூரும்*
*விருப்போடுவெண்சங்க மூதாவூரும்விதானமும் வெண்கொடியுமில்லாவூரும்*
*அருப்போடு மலர் பறித்திட்டுண்ணா வூரும் அவையெல்லாம் ஊரல்ல அடவிகாடே*

என்பர். இங்குத் திருக்கோவில் வழிபாட்டினை மேற்கொள்ளாத ஊரினைக் காடு என்றே குறிப்பிடுகிறார்.

குறைந்த அளவில் ஒரு திருக்கோவில் கருவறையில் சிவலிங்கப் பிரதிட்டையும் கருவறையின் வெளியில் அதன் முன்பாக நந்தியை அடுத்துப் பலிபீடமும் அமைந்திருக்க

வேண்டும் என்பர். பலிபீடத்தை அடுத்துக் கொடிக்கம்பமும் நிறுவப்படுதலுண்டு. நந்திச் சின்னமே கொடியில் இடம் பெறும். சிவலிங்கம், நந்தி, பலிபீடம் இம்மூன்றும் சைவர்கள் கூறும் முப்பொருள், பதி (இறைவன்), பசு (உயிர்) பாசம் (கட்டு), உண்மையினை எதிரொலிப்பன எனப் பெரியோர்கள் கூறுவர்.

ஆய பதிதான் அருட் சிவலிங் கமாம்
ஆய பசுவும் அடலேறு என நிற்கும்
ஆய பலிபீடம் ஆகும் நற்பாசமாம்
ஆய அரனிலை ஆய்ந்து கொள்வார்கட்கே — 2417

என்பது திருமந்திரம். சிவலிங்கம் பதி, நந்தி பசு; பலிபீடம் பாசம் என விளக்கும்போது சைவர்கள் கூறும் வாழ்க்கைத் தத்துவத்தின் எதிரொலியினையே, திருக்கோவிலமைப்பில் காண்கிறோம் எனல் வேண்டும். மூன்று பொருட்கள் நிலையானவை. அவை 1. பதி 2. பசு 3. பாசம் என்பர். ஆன்மா பாசத்தோடு கூடியிருப்பதாலேயே அதனைப் பசு என்கின்றனர். பாசத்தைப் பலிகொடுத்து விட்டால் இறை தரிசனம் பெறலாம் என்ற கருத்தையே இக்கோவிலமைப்பு உணர்த்துகிறது. மேலும் கொடியினை விளக்கும்போது, மும்மலங்களிலே மூழ்கிக்கிடக்கும் ஆன்மா, அருள்கூடும்படி தீக்கைக் கிரமங்களினால் மலங்களைப்போக்கக் கொடி கட்டுவதாகக் கூறுவர்.

அடிப்படையான சைவக் கோட்பாட்டை விளக்கும் எளிமையான கோவில்களேயன்றிப் பல பிராகாரங்களோடும் மண்டபங்களோடும் அமைந்த பெரும் பெருங் கோவில்களையும் சைவர்கள் எழுப்பியுள்ளனர். பூசை நிகழ்த்தும்போது அதனை ஒரு புற நிகழ்ச்சியாக மட்டும் கொண்டு நிகழ்த்துவதில்லை; ஒருவன் அகத்திலும் கோவிற் பூசையின் எதிரொலி இருக்கவேண்டும் என்பர். எனவே மனித உடலையே கோவிலின் முன்மாதிரியாகக்கொண்டு கோவிலை அமைத்துள்ளதாகக் கூறுவர். ஒரு யோகியின் இருதய ஸ்தானத்தை எதிரொலிக்கும் வகையில் கருவறை ஒன்றை மட்டும் எழுப்பி அதில் சிவலிங்கத்தைப் பிரதிட்டை செய்து புறத்தே நந்தியையும் பலிபீடத்தையும் அமைப்பதோடு யோகியின் ஆறு ஆதாரங்களையும் அடிப்படையாகக்கொண்டு பல மண்டபங்களோடு கோவில் எழுப்புதலும் உண்டு.

மூலாதாரம்—சபாமண்டபம்; சுவாதிட்டானம்—அலங்கார மண்டபம்
மணிபூரகம்—ஸ்நபனமண்டபம்; அநாகதம்—மகாமண்டபம்
விசுத்தி—அர்த்தமண்டபம்; ஆஞ்ஞை—கருவறை என்பர்.

மேலும் திருக்கோவிலமைப்பு, கீழ்மேலாக ஒருவன் படுத்திருப் பதை எதிரொலிப்பது எனக்கூறி,

தலை – கருவறை; முகம்—அர்த்தமண்டபம்;
மார்பு ஸ்நபனமண்டபம்; கொப்பூழ்—மகாமண்டபம்
கணுக்கால்—ஆஸ்தானமண்டபம்; பாதம் – கோபுரம்

எனவும் விளக்குவர்.

ஊனுடம்பு ஆலயம் எனக்கொண்டு, அவ்வடிப்படையில் கோவி லமைக்க விரும்பிய விருப்பம் இங்குப் புலப்படுகிறது. மேலும் 3, 5 என்ற பிராகாரங்கள் அமைக்கப்பட்டுள்ள கோவிலமைப்புக்கும் மக்கள் உடற் கூறுக்கும் தொடர்புண்டு எனக் கூறி, மூன்று பிராகாரங்களைத் தூல சூக்கும காரண சரீரங்களாகவும் ஐந்து பிராகாரங்களை அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோன்மய கோசம், விஞ்ஞான மயகோசம், ஆனந்தமயகோசம் எனவும் விளக்குவதுண்டு. கோவில் வாசலில் பெரிய கோபுரம் ஒன்றை— இராசகோபுரத்தை எழுப்புவர். கருவறையின் மேலாகக் கோபுரம் எழுப்புதலும் உண்டு. கோபுரம் உலகினை எதிரொலிக்குமாறு பலவான உருக்கள் நிறைந்திருக்கும். இறைவன் எங்கும் உறை கின்றான்; எல்லாமாகவும் விளங்குகின்றான் என்பதன் விளக்க மாக இதனைக் கூறுவர். இதனை உணர்ந்தே திருக்கோவிலுக்கு வரும் அடியவர்கள் கோபுரத்தை, இறைவன் அடையாளமாக, தூல—லிங்கமாக வணங்குவர். கோபுரத்தில், 3, 5, 7, என்ற வகையில் அமைந்த வாயில்கள், மனித உணர்ச்சிகளை எதிரொலிப்பனவே என்பர். மூன்றுவாயில்கள் – நனவு, கனவு, சுழுத்தி என்னும் அவத்தைகளை உணர்த்தும் என்பர். ஐந்து வாயில்கள் ஐம்பொறிகளை எதிரொலிப்பன என்றும் ஏழுவாயில்கள் ஐம்பொறிகளோடு மனம், புத்திகளை எதிரொலிக்குமென்றும் கூறுவர். கோவில், சிவன்கோவில் என்பதைச் சுட்ட வெளிமதிற் சுவர்களில் நந்தி, சிவகணங்களை அமைப்பர்.

மூல விக்கிரகத்தைப் பிரதிட்டை செய்துள்ள கருவறை மிகச் சிறிதாக, அருச்சகர் மட்டும் நின்று தொண்டு செய்யும் இடமாக அமையும். அதனையடுத்து அர்த்த மண்டபம். கருவறையினும் சிறிது பெரிதாகவிருக்கும். இங்கு நின்றவாறு தான் அருச்சகர் தீபாராதனை செய்வர். அதனையடுத்துப் பலரும் நின்று வழிபடத் தக்க நிலையில், மேலும் அகலமாக அமைக்கப் பெறுவதே மகா மண்டபம். இம்மூன்றோடு கூடிய நிலையிலேயே பல திருக்கோவில் கள் இன்று எடுக்கப்பட்டு வருகின்றன. ஆயின் பண்டை நாளில் உலகனைத்தும் படைத்தும், காத்தும், கரந்தும் விளையாடும் இறை வனுக்கு, அருளாட்சி நடத்தும் மன்னவனுக்குச் சைவ சமுதாயம்

பெருங்கோவில்களை எடுத்துப் பலவாக பூசை செய்து மகிழ்ந்தது. திருக்கோவில்களைச் சூழ, பெரிய கல் மதில் எடுத்தார்கள். நடன அரங்குகளும் திருக்கோவில்களில் இருந்தன. தேவார ஆசிரியர் களும் இத் திருக்கோவில் அமைப்பைப் புகழ்ந்து பாடினர். இத்தகைய பெருங்கோவில்கள் எழுவதற்கு அரசாங்க ஆதரவு காரணமாக விருந்தாலும் ஆகமங்களிலும் இவற்றுக்கு விதிகள் உள்ளன என்பர்.

கட்டிட அமைப்பின் வளர்ச்சியைவிடவும் திருக்கோவில் வழிபாட்டின் வளர்ச்சியில் முக்கியத் திருப்பம், முதன்மைத் தெய்வம். பரிவார தெய்வம் பற்றியதே. சைவத் திருக்கோவில் களில் பிரதிட்டிக்கப் பெற்ற முதன்மைத் திருக்கோலம் 'சிவலிங் கமே. பரிவார தெய்வங்கள் என்ற நிலையில், மூலஸ்தானத்தின்—வாசலின் வலதுபுறம் விநாயகரையும், இடதுபுறம் சுப்பிரமணிய ரையும் பிரதிட்டை செய்வர். அவர்கள் அருகே துவார பாலகர்கள் இருவர் நிற்பர். கருப்பக் கிருகத்தின் வெளிப்புறம் தெற்குச்சுவரில் தட்சிணாமூர்த்தியினையும், மேற்குச் சுவரில் லிங்கோத்பவ மூர்த்தி யினையும், வடக்குச் சுவரில் துர்க்கா தேவியினையும் தாபிப்பர். துர்க்கைக்கு எதிரே எதிர்முகமாகத் தனியே சண்டேசுரரைத் தாபிப்பர். அது தெற்கு நோக்கிய கோலமாக விருக்கும். சோமாஸ் கந்தர், சபாபதி, பைரவர் போன்ற சிவன் திருக்கோலங்களும் சுற்றுத் தெய்வங்களாகப் பிரதிட்டிக்கப்படுதலுண்டு. ஸ்ரீதேவி பூதேவியோடு கூடிய திருமால் திருக்கோலமும் சிவன் கோவில் களில் காணப்படுகிறது. சமயக்குரவர்களை, அறுபத்து மூன்று நாயன்மார்களைத் தாபித்துள்ள சைவக் கோவில்களும் பல. வெளிப் பிராகாரத்தில், வாயிலுக்கு நேரே பலிபீடம், பெரிய நந்தி, கொடிமரம் இடம்பெறும். நவக்கிரகங்களைத் தாபிக்கும் வழக்கும் பிற்காலத்தில் ஏற்பட்டது. சிவலிங்கமே முதன்மைத் தெய்வமாகப் பிரதிட்டிக்கப் பெற்றதற்கு வேறாக, நாளடைவில், சில சைவக் கோவில்களில் விநாயகர், முருகன் போன்ற தெய்வத் திருக்கோலங்களும் முதன்மைத் திருக்கோலங்களாகப் பிரதிட்டிக் படலாயின.

## வழிபாட்டுத் திருக்கோலங்கள்

இந்துக்கள் வழிபாட்டினை மூன்று நிலைகளில் பிரித்து விளக்கும் முயற்சியும் உண்டு.

1. விக்கிரக வழிபாடு
2. எந்திர வழிபாடு
3. மந்திர வழிபாடு

இவ்வாறு பிரித்துக் கூறினாலும் எந்திரப் பிரதிட்டையோடு கூடிய விக்கிரக வழிபாட்டினையே திருக்கோவிலில் காண்கிறோம். மந்திரமின்றி எந்த வழிபாடும் நிகழ்த்தப் பெறுவதில்லை எனவே ஒரு குறிப்பிட்ட தெய்வத் திருக்கோலத்திற்கு இந்த மூன்றும் உண்டு எனலாம்.[1] திருக்கோவில்களில் பிரதிட்டிக்கப் பெறும் சைவத் திருக்கோலங்கள் விக்கிரகங்கள் சிலவற்றை இங்குச் சிந்திப்போம்.

1. *சிவலிங்கம்:* சிவலிங்கத்தை விக்கிரக அமைப்பைக் கொண்டு இருபிரிவாக விளக்குவர். அடிப்பகுதி தேவியைக் குறிப்பதென்றும் மேற்பகுதி சிவனைக் குறிப்பதென்றும் கூறுவர். அடிப்பகுதியை இரண்டாகப் பிரித்து அவை பிரமனையும் திருமாலை யும் உணர்த்துவதாகக் கூறும் மரபும் சைவ உலகில் இல்லாம லில்லை; சைவ புராணங்களில் இச்சிந்தனை உள்ளது. தாணுமாலய மூர்த்தி என்று சிவனைக் கூறுவதும் கருதத்தக்கது. குமரி மாவட் டத்தில் சுசீந்திரம் திருக்கோவிலில் கோவில் கொண்டிருக்கும், பெருமானை இவ்வாறு வழங்குவர். சம்பந்தரும் இத்திருக்கோலத் தில் ஈடுபட்டுப் பாடுவார்.

*பாதியோர் மாதர், மாலுமோர் பாகர் பங்கயத்தயனுமோர் பாலர்*
*ஆதியாய் நடுவாய் அந்தமாய் நின்ற அடிகளார் அமரர்கட்கமரர்*
*போதுசேர் சென்னிப் புரூரவர்ப் பணிசெய் பூசுரர் பூமகளனைய*
*வேதியர் வேதத்தொலியரு வீழி மிழலையான் என வினைகெடுமே —4084*

இப்பாட்டில் சம்பந்தர் உமையொரு பாகனைக் காண்பதோடு அரியோடும் அயனொடும் இணைந்திருப்பதாகவும் கண்டு பாடுகிறார்.

லிங்கம் என்பதற்கு அடையாளம் என்பதே பொருள். அகிலத் தைச் சிவனாகக் காணும்போது அண்டலிங்கம் அல்லது விசுவ லிங்கம் என்பர். உடம்பைச் சிவனாகக் காணும்போது பிண்ட லிங்கம் என்பர். ஆன்மாவை ஆன்மலிங்கம் என்றும் கூறும் மரபு முண்டு. பஞ்ச பூதங்களிலும் சிவனைக் கண்டு பூதலிங்கமாகவும் வழிபடுவர். பஞ்ச பூதத்தலங்களாக திருவாரூர் (நிலம்) திருவானைக்கா (நீர்) திருவண்ணாமலை (தீ) திருக்காளத்தி (காற்று) தில்லை (ஆகாயம்) என்பனவற்றைக் குறிப்பிடுவதும் கருதத் தக்கது. திருக்கோவிலில் பிரதிட்டை செய்யப் பெற்றிருப்பதைத் தாபரலிங்கம் (அசைவற்றிப்பது) என்பர்.

---

1. எந்திரம் மந்திரம் விக்ரகம் இவை ஒன்றோடொன்று பின்னிப் பிணைந் தவை.

லிங்கம் என்பதற்குச் சித்திரித்தல் எனப் பொருள்கூறிப் படைத்தல், காத்தல் முதலியவற்றால் உலகத்தைச் சித்திரிப்ப தாகிய பரமேசுவரப் பிரபாவமே லிங்கம் எனவும் விளக்குவர். (பிரபாவம்-ஒளி, மேன்மை, புகழ்) வெறும் அடையாளம் எனக் கொள்ளாது பரம்பொருள் உணர்வுடனேயே இவ்வழிபாட்டினை மேற்கொள்வர். சிவலிங்கத்திற்கு அபிடேகம் செய்யும்போது 'பாதாளமுதல் ஆகாசம்வரை எல்லையில்லாமல் ஆனந்தவடிவாக விளங்கும் லிங்கத்திற்குத் திருமஞ்சனம் ஆட்டுகிறேன் எனக் கூறித் திருமஞ்சனம் ஆட்டுவதும் இதனைத் தெளிவுபடுத்தும். ஒவ்வொரு திருத்தலத்திலும் கோவில் கொண்டுள்ள பெருமானை, மூர்த்தத்தை, புராண நிகழ்ச்சியோடு ஒட்டிய நிலையில் பெயரிட்ட ழைப்பதும் கோவில் கொண்டுள்ள பெருமானைப் பற்றிய பரத்து வத்தில் அவர்கள் கொண்டிருந்த உறுதியினைப் புலப்படுத்தும். மேலும் இத்திருமேனியில் ஆறு அத்துவாக்கள், திரிமூர்த்திகள், முப்பத்தாறு தத்துவங்கள் அடங்கியிருப்பதைச் சாத்திரங்கள் கூறும்.

இறைவன் திருவுருவை அருவம் அருவுருவம் உருவம் என மூன்றாகப் பாகுபடுத்தி விளக்குவர். சித்தாந்த நூற்கள் சிவலிங்க வுருவை அருவுருவத் திருமேனியாகக் குறிப்பிட்டாலும் வழிபாட்டு மரபில் லிங்கத்தை அருவத் திருமேனி என்றும் முகலிங்கத்தை அருவுருவத் திருமேனியாகவும் நடராசர் சோமாஸ்கந்தர் போன்ற மூர்த்தங்களை உருவத் திருமேனியாகவும் கொள்வ துண்டு. லிங்கத்திலிருந்தே பிற திருக்கோலங்கள் வளர்ந்தன, என்றும் கூறுவர். சிவலிங்கத்தைச் சதாசிவ மூர்த்தமாகவும் பிறதிருக்கோலங்களை மகேசுரமூர்த்தங்களாகவும் கூறும் மரபுண்டு.

சிவலிங்கத்தைத் தவிர பிறதிருக்கோலங்களைக் கருவறையில் முதன்மைத் தெய்வமாகப் பிரதிட்டிக்காவிடினும் நடராசர் போன்ற வடிவங்கள் சைவர்கள் உள்ளத்தில் மிகுதியாக இடம் பெற்றுள்ளமையின் அத்திருக்கோலங்களை இங்கு விளக்குதல் நலம்.

## நடராசர்

சபாபதி என வழங்கப்பெறும் இத்திருக்கோலம் பல அடியவர் களின் உள்ளங்களை நெகிழச்செய்து ஞானத்தை அருளிய திருக்கோலம். தில்லையம்பதியிலே திருக்கூத்து நிகழ்த்தும் கூத்தப் பெருமான் திருக்கோலத்தினைத் தரிசித்த அடியவர்கள் பலரும் பேரின்ப வெள்ளத்தில் திளைத்தனர்.

ஐந்து பேரறிவும் கண்களேகொள்ள அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றும் திருந்து சாத்துவிகமேயாக
இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த எல்லையில் தனிப் பெருங்கூத்தின்
வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்.

என்று சுந்தரர் தரிசனத்தைப் பாடுவர் சேக்கிழார் சுவாமிகள். நடராசப் பெருமானைத் தரிசித்த அப்பர் சுவாமிகள்,

குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியில் பால் வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்த பொற்பாதமும் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்தமாநிலத்தே

எனப்பாடுவர்.

## திருக்கோலம்

நடராசப் பெருமானை எண்டோள் வீசி நின்று ஆடும் பிரானாகவும் அடியவர்கள் கண்டு பாடினாலும் நான்கு கைகள் உள்ள திருக்கோலமே பலவிடங்களிலும் காணப்படுகிறது. தாண்டவமூர்த்தியை முதன்மையான திருக்கோலமாகக்கொண்டு வழிபடும் சிதம்பரத்திலும் நான்கு கைகளோடு நின்றே ஆடுகிறான். இத்திருக்கோலத்தில் இடக்காலைத் தூக்கிக்கொண்டும் வலக்காலை முயலகன்மீது ஊன்றியவாறுமுள்ளான். முன் இடக்கை தண்டாக நீண்டு உடம்பைச் சார்ந்து முன்னால் சிறிது வளைந்து தொங்கும். பின் இடக்கை நெருப்பை ஏந்தியுள்ளது. முன் வலக்கை அபயம் அளிப்பதாகவுள்ளது. பின் வலக்கையில் துடி இருக்கும். இத்திருக்கோலம் சாந்த நிலையிலானது. புன்முறுவல் பூத்தமுகம்; தலையில் சடைக்கோலம்; மூன்று கண்கள்; செம்மேனி யோடு கூடியது. இதனை ஐந்தொழில் நடனமாகக் கூறுவர்.

கையிலுள்ள துடி படைத்தலைக்காட்டும்
அபயகாரம் காத்தலைக் காட்டும்
கையிலுள்ள நெருப்பு அழித்தலைக் காட்டும்
முயலகன்மீது ஊன்றிய பாதம் மறைத்தலைக் காட்டும்
தூக்கிய திருவடி அருளலைக் காட்டும்

இவ்வைந்து தொழில்களையே பஞ்ச கிருத்தியம் என்பர். இறைவன் திருக்கோலத்திற்கேற்ப இவ்வுலகம் இயங்குகிறது

என்பதே பொருள். பஞ்ச கிருத்திய நடனத்தை ஆனந்தத் தாண்டவம் என்றும் கூறுவர். இதனுல் ஆனந்த நடராசர் என்ற பெயரும் தில்லைக்கூத்தனுக்கு உண்டு. இடதுகாலை ஊன்றி வலக்காலைத் தூக்கியவாறு ஆடும் நடராசவடிவம் சில கோவில் களில் காணப்படுகிறது. பிறிதோர் வடிவம் ஊர்த்துவத்தாண்டவ வடிவம். ஒரு காலை மேலே தூக்கியவாறு ஆடுவது. ஊர்த்துவத் தாண்டவத்தைச் சம்மார தாண்டவம் என்றும் கூறுவர்.

## சிதம்பர தரிசனம்

சிவன் திருப்பதிகளில் மேலானது சிதம்பரம் என்பர். சைவர்களுக்குக் கோயில் என்று சிறப்பித்துக் கூறப்படுவது சிதம்பரமே. பிற சிவன் கோவில்களுக்கெல்லாம் இதனை மூலமாகக் கூறுவதுமுண்டு. ஆத்மகலைகள் விழிப்பு நிலையில் ஒருவனிடத்திலிருந்து கண் முதலான துவாரங்கள் வழியாக வெளியே சென்று சுழுத்தி நிலையில் மீண்டும் ஆன்மாவில் ஒடுங்கு வதுபோல சிதம்பரம் கோவிலில் உள்ள.சிவகலைகளே காலையில் பல சைவக் கோவில்களுக்கும் சென்று நள்ளிரவானதும் சிதம்பரத் திற்குத் திரும்பிவிடும் என்பர். சிதம்பரம் ஒன்றே கோவில்; பிற கோவில்கள் அதன் கிளைகள் என்பதே இதன் பொருள்.

இத்திருக்கோவிலில் சிவலிங்கப் பிரதிட்டை இருப்பினும் கூத்தப்பெருமானே சிறப்புப் பூசைக்குரியவர். சிதம்பரம் என்பதும் திருக்கூத்து என்பதும் அடியவர்களுக்கு, ஞானிகளுக்குப் புறக் காட்சிகளல்ல. ஞானவெளியினையே சிதம்பரம் (சித்-ஞானம்; அம்பரம்-வெளி) என்பர். சிதம்பரத்தைப் பஞ்ச பூதத்தலங்களுள் ஆகாசத்தலமாக விளக்குவதும் கருதத்தக்கது.

சிதம்பரம் திருக்கோவிலில் நடராசப் பெருமான் திருநடம் செய்யும் சபைக்கு ஏறிச்செல்லும் படியினைப் பஞ்சாட்சரப்படி என்பர். பஞ்சாட்சரத் தியானமின்றிப் பெருமானை அடைய முடியாது என்பதே கருத்தாதல் வேண்டும். கூத்தப் பெருமானை வழிபட்ட பின்னுல் சிதம்பர ரகசியத்தைத் தரிசித்தல் என்னும் மரபுண்டு. தூல வடிவில் நம் புறக்கண்ணுக்குக் காட்சிதந்து நிற்கும் பெருமான் சூக்கும வடிவில் நம் அகக் கண்ணுக்குக் காட்சி தந்தருள்பவனே என்ற நம்பிக்கையின் விளைவே இத் தரிசனம். அங்கு நாம் நடராச வடிவத்தைக் காண்பதில்லை. திரை யின் உள் வெறும் வெளி, பொன்னுற் செய்த வில்வ இலையினுல் மறைக்கப்பட்டிருக்கிறது. அங்கு வெளியில், நமக்குக் கட்புலனு காத நிலையில் கூத்தப்பெருமானே நடனமாடுகின்ருன் என்ற நம்பிக்கையினையே சிதம்பர ரகசியம் உணர்த்துகிறது.

சூக்குமவடிவில் இறைவன் நிகழ்த்தும் கூத்து எல்லா இடங்களிலும் நிகழ்வதே. இதனைத் திருமூலரும்,

எங்கும் திருமேனி எங்கும் சிவசத்தி
எங்கும் சிதம்பரம் எங்கும் திருநட்டம்
எங்கும் சிவமா யிருத்தலால் எங்கெங்கும்
தங்கும் சிவனருள் தன்விளை யாட்டதே 2722

என்பர்.

இறைவனுக்கு அகத்துள் ஆகாசமாகிய ஞானமே அரங்கம் என்பதையே சிதம்பரம் என்னும் சொல் உணர்த்துகிறது. சிதம்பரம் ஞானவெளி என விளக்கப்படும்பொழுது ஞானவெளி அக அனுபவம் என்பதையும் குறிப்பிடவேண்டும்.

ஆடியகாலும் அதிற் சிலம் போசையும்
பாடிய பாட்டும் பலவான நட்டமும்
கூடிய கோலம் குருபரன் கொண்டாடத்
தேடி உளேகண்டு தீர்ந்தற்ற வாறன்றே 2760

என்பன திருமந்திரம்.

திருக்கூத்துத் தரிசத்தை அகதரிசனமாக விளக்குதற்கேற்ப யோகப் பயிற்சியின் விளைவாக அகத்தே கூத்தப் பெருமானின் திருச்சிலம்போசை கேட்கும் என்றும் கூறுவர்.

திருச் சிலம்போசை ஒலிவழியே சென்று
நிருத்தனைக் கும்பிடென்றுந் தீபற
நேர்பட அங்கே நின்றுந் தீபற

எனப் பாடுகிறது திருவுந்தியார்.

இறைவன் ஆன்மாக்களின் பொருட்டு நிகழ்த்தும் பஞ்ச கிருத்திய நடனமாகச் சிதம்பர நடனத்தை விளக்கியதைப் பார்த்தோம். இறைவன் ஆன்மாக்களின் பொருட்டுச் செய்யும் ஐந்தொழில் என்றால் பாசத்தால் கட்டுண்டு கிடக்கும் ஆன்மாக்களைத் தன்னோடு கலக்கச் செய்ய அவன் மேற்கொண்ட தொழில் அல்லது சங்கற்பம் என்பதே பொருள். இதனாலேயே இறைவன் திருக்கூத்தை,

மாயைதனை உதறி வல்வினையைச் சுட்டு மலம்
சாய அமுக்கி அருள்தானெடுத்து நேயத்தால்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்
தானெந்தையார் பரதம் தான் —உண்மைவிளக்கம் 37

என விளக்குவர்.

தத்துவநிலையில் ஆன்மாவினிடமாக நிகழ்த்தும் திருக்கூத்தினையே சிதம்பர தரிசனமாகக் கூறினாலும் தமிழ்நாட்டில் தென்னாற்காடு மாவட்டத்திலுள்ள சிதம்பர தரிசனத்தையும் சென்று காணத்தக்க ஒரு பேருகவே சைவர்கள் கருதுவர். மார்கழி—திருவாதிரை விழாவின் போதோ ஆனித் திருமஞ்சனத்தின் (உத்திர நாள்) போதோ தரிசிக்கச் செல்வோர் பலர். இவ்விரண்டு நாட்களிலும் நடைபெறும் அபிஷேகம் போன்று சித்திரைத் திருவோணம், ஆவணி பூர்வ சதுர்த்தி, புரட்டாசி சதுர்த்தசி, மாசி பூர்வ சதுர்த்தசி என்னும் நாட்களிலும் சிறப்பாக அபிஷேகம் நடைபெறுவதுண்டு. ஆயினும் சிறப்பான தரிசன நாளாகக் கருதுவது மார்கழி—திருவாதிரையின்போது, அம்பலவாணர் எழுந்தருளிவந்து திருக்காட்சி தரும் ஆருத்ரா தரிசனமே. ஆதிரை நாள சிவனுக்குரியது என்பர்.

இச்சிதம்பர தரிசனத்தில் முற்றுக உள் ஒடுங்கி வாழ்ந்த திருநாளைப் போவார் வரலாறும் குறிப்பிடத்தக்கது.

அம்பலவாணர் ஐந்தெழுத்து வடிவினர். மந்திரரூபியாக விளக்கும்போது நடராசப் பெருமானைப் பஞ்சாக்கரவடிவிலும் விளக்குவர்.

நம சிவாய : ஆடும்படிகேள் நல்லம் பலத்தான் ஐயனே
நாடும் திருவடியிலே நகரம், கூடு
மகரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகரு முகம்வா.முடியப் பார்
— உண்மைவிளக்கம் 33

சிவாய நம : சேர்க்கும் துடிசிகரம் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம் பார்க்கிலிறைக்(கு
அங்கி நகரம் அடிக்கீழ் முயலகனுர்
தங்கு மகரமது தான் —உண்மைவிளக்கம் 34

நடராசப் பெருமான் திருக்கோலத்தினைச் சுற்றியிருக்கும் திருவாசியினை ஓங்காரமாகக் கூறுவர்.

இங்குக் கூறப்படும் நடராச வடிவம் சிவலிங்க வடிவின் வேறுனதன்று என்றும் அச்சிவலிங்கத்தில் திருவைந்தெழுத்தால் அபாயமற நின்ருடுகின்ருன் என்றும் கூறுவர்.

எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள் — சி[illegible]ன்

சிவாய நமவென்னும் திருவெழுத் தஞ்சாலே
அவாய மறநின்று ஆடுவான்
— உண்மைவிளக்கம் 32

இக்கருத்தினை மேலும் விளக்குவர்.

பரையிடமா நின்று மிகுபஞ்சாக்கரத்தால்
உரையுணர்வுக் கெட்டாவொருவன் - வரைமகள்தான்
காணும்படியே கருணையுருக் கொண்டாடல்
பேணு மவர்க்குண்டோ பிறப்பு —உண்மை விளக்கம் 39

மந்திரவடிவில் தாண்டவத்தைக் காண்பதும் ஓர் அக அனுபவம் என்றே விளக்கப்படுகிறது.

நெற்றிக்கு நேரே புருவத்திடை வெளி
உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரமன் இருந்திடம்
சிற்றம்பலமென்று தேர்ந்து கொண்டேனன்றே —2720

என்னும் திருமந்திரப் பாடல் இதனை உணர்த்தும்.

## தட்சிணாமூர்த்தி

குருவடிவத்தில் கல்லால மரத்தின்கீழ், தென்முகமா கவிருந்து பிரம்மபுத்திரர்கள் ஆகிய சனகர், சனந்தனர், சநாதனர், சனற்குமாரர் ஆகிய நால்வருக்கும் உபதேசம் செய்யும் பாங்கில் அமைந்த கோலமே தட்சிணாமூர்த்தி திருக்கோலம். அத்திருக்கோலத்தில் சின்—முத்திரையைக் காட்டி, வாழ்க்கைத் தத்துவத்தைச் சொல்லாமற் சொல்லி உணர்த்துகிறார் என்பர். சுட்டுவிரல், ஏனைய மூன்றுவிரல்களிலிருந்து விலகி, வளைந்து பெருவிரலோடு ஒட்டியிருத்தல் சின் முத்திரை. சுட்டுவிரல்—உயிர்; பெருவிரல்—சிவன், ஏனைய மூன்று விரல்களும் மூன்று மலங்கள் (ஆணவம்—கன்மம்—மாயை) மும்மலங்களிலிருந்து விடுபட்டுச் சிவனோடு சேர்ந்து வாழ்தலே வாழ்க்கை இலட்சியம் என இத்திருக்கோலம் சொல்லாமற் சொல்கிறது.

இத்திருக்கோலத்துக்கும், நான்கு கைகள் உண்டு. ஒரு கையில் உடுக்கை; ஒரு கையில் நெருப்பு; ஒரு கையில் சுவடி; ஒரு கை சின்முத்திரையுடையது. வலது காலை பூதத்தின் மீது வைத்துக்கொண்டு, மற்றொரு காலை வலது கால் துடைமீது போட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கும் தட்சிணாமூர்த்தியின் பின்புறம் ஆலமரம் இருக்கும். சமயக்குரவர்களும் இத்தோற்றத்தில் ஈடுபட்டுப் பாடுவர்.

நூலடைந்த கொள்கையாலே நுன்னடி கூடுதற்கு
மாலடைந்த நால்வர் கேட்க நல்கிய நல்லறத்தை
ஆலடைந்த நீழல்மேவி, அருமறை சொன்னதென்னே
சேலடைந்த தண்கழனிச் சேய்ஞலூர் மேயவனே
—சம்பந்தர் 515

நன்றாக நால்வர்க்கும் நான் மறையின் உட்பொருளை
அன்றாலின் கீழிருந்தங்கற முரைத்தான் காணேடீ
அன்றாலின் கீழிருந் தங்கறமுரைத் தானாயிடினும்
கொன்றான்காண் புரமூன்றும் கூட்டோடே சாழலோ
- மாணிக்கவாசகர் 270

சதாசிவ மூர்த்தத்தின் தெற்கு நோக்கிய அகோரமூர்த்தம் போன்று தட்சிணாமூர்த்தியும் தெற்கு நோக்கிய மூர்த்தியே. இவர் பாவத்தைப் போக்கி நன்மை தருபவர் என்றும், யோகிகளுக்கு யோக நுட்பங்களையும், உறுதிப்பொருளின் உட்கருத்தையும் மனம் ஒடுங்க மௌனோபதேசத்தையும் அருளுபவர் என்றும் இம்மூர்த்தியே ஞானோபதேசம் செய்து மேனிலைக்குச் செல்ல அருள்பவர் என்றும் கூறுவர்.

## சோமாஸ்கந்தமூர்த்தி

உமையோடும் கந்தனோடும் கூடிய மூர்த்தி என்பது பொருள். கூத்தப்பெருமானுக்கு அடுத்த நிலையில் மதித்து வழிபடப்படும் திருக்கோலம் இதுவே. இப்பெருமான் சந்நிதி கிழக்கு நோக்கியதாகவிருக்கும். இத்திருக்கோலம் திருவிழாக் காலங்களில் எழுந்தருளி வருவதுண்டு. அவ்வாறு வரும்போது இடப வாகனத்திலோ தேரிலோ எழுந்தருளும்; திருக்கொடியேற்றம், திருக்கலியாணம் முதலியனவும் இத்திருக்கோலத்திற்குச் செய்தல் உண்டு.

சதாசிவ மூர்த்தியின் கிழக்கு நோக்கிய தத்புருஷ மூர்த்தியே சோமாஸ்கந்தராக உயிர்கட்குப் போகத்தை அளிப்பதாகக் கூறுவர். புராண இதிகாசங்களை உமாதேவி வாயிலாக அருளியவரும் இம்மூர்த்தியே என்பர்.

செல்வியைப் பாகங்கொண்டார் சேந்தனை மகனாக் கொண்டார்
மல்லிகைக் கண்ணியோடு மாமலர்க் கொன்றை சூடிக்
கல்வியை கரையிலாத காஞ்சி மாநகர் தன்னுள்ளால்
எல்லியை விளங்க நின்றார் இலங்குமேற்றளியனாரே
—அப்பர்

## சந்திரசேகரர்

பிறைசூடிய பெருமானே சந்திரசேகரனாகக் கூறப்படுகிறார் எத்தகைய பாவங்கள் செய்தவர்களும் பாவத்தை உணர்ந்து

மன்னிப்புவேண்டி நிற்கும்போது சிவன் அவர்களுக்கு அருள் செய்கிறான் என்பதையே பிறைசூடிய கதை நமக்கு உணர்த்து கிறது.

நின்ற திருக்கோலத்தோடு விளங்கும் இம்மூர்த்திக்கு நான்கு கைகள் உண்டு. வலது மேற்கையில் மழுவும் இடது மேற்கையில் மானும் இருக்கும். வலது கீழ்க்கை அபயகரமாகவும் இடது கீழ்க்கை வரதகரமாகவும் அமையும். சடைமுடியில் சந்திரனைக் கொண்டுள்ள இப்பெருமானின் அருகே இரண்டு கைகளையுடைய அம்பிகை நிற்கிறாள்.

பௌர்ணிமை, அமாவாசை, மாதப்பிறப்பு போன்ற நாட்களில் வீதிவலம் வருவது இம்மூர்த்தியே. ஸ்ரீபலி சாதிக்க எழுந்தருளுவதும் இத்திருக்கோலமே; பிரதோஷ நாட்களிலும் இவரே எழுந்தருளுவர்; எனவே பிரதோஷநாயகர், ஸ்ரீபலி நாயகர் என்னும் பெயர்களும் இவருக்குண்டு என்பர்.

யாழைப் பழித்தன்ன மொழிமங்கை ஒருபங்கன்
பேழைச் சடைமுடி மேற்பிறை வைத்தானிடம் பேணில்
தாழைப் பொழிலூடேசென்று பூழைத்தலை நுழைந்து
வாழைக்கனி கூழைக்குரங் குண்ணும் மறைக்காடே
—சுந்தரர் 7943

## ஸ்ரீபலி

கோயிலில் இடும் அன்னப்பலியினை இவ்வாறு கூறினாலும் ஒவ்வொரு நாளும் பலிபூசைக்காக ஒரு சிறு விக்கிரகம் ஒன்றை எழுந்தருளச்செய்து ஏனைய பரிவாரங்களுக்குப் பலி கொடுப்பதான பாவனையே ஸ்ரீபலி.

## பைரவர்

சிவமூர்த்தங்களுள் ஒருவராகக் கருதப்படுபவர்; இவரைச் சேத்திரபாலர் என்றும் கூறுவர். செஞ்சடையும் நீலநிறமும் கொண்டு விளங்கும் இப்பெருமானிடம் திருவடிகளில் சிலம்பும், மார்பில் தலைமாலையும் கைகளில் சூலம், மழு, பாசம், உடுக்கை என்பனவும் காணப்படுகின்றன. முக்கண்களோடும் கோரப் பற்களோடும் சீற்றம் கொண்ட முகத்தோடும் விளங்குவர். இவரே ஊழி இறுதியில் யாவற்றையும் அழிப்பவர் என்பர். நான்மறை களே நாய் வடிவுடன் வாகனமாகவிருக்கிறது என்றும் கூறுவர்.

நஞ்சினை உண்டிருள் கண்டர் பண்டந்தகனைச் செற்ற
வெஞ்சின மூவிலைச் சூலத்தர் வீழி மிழலையார்

அஞ்சனக் கண்ணுமை பங்கினர் கங்கையங்காடிய
மஞ்சனச் செஞ்சடையார் எனவல்வினை மாயுமே —2891

என்னும் சம்பந்தர் பாடல் பைரவரைக் குறிப்பிடுவதாகக் கொள்வர்.

## விநாயகர்

சிவலிங்கத்தைப் பிரதிட்டை செய்து வழிபடும் சைவர்கள் காலப் போக்கில், விநாயகப் பெருமானையும், சிவமூர்த்தமாகக் கொண்டு வழிபடலாயினர். சம்பந்தர் போன்ற சைவ சமயக் குரவர்கள் புராணமொழியில் சிவன் மகவாகக் கூறினும், சிவபிரானின் திருக்கோலமாக விநாயகரை வணங்கவில்லை. சம்பந்தர்,

பிடியதன் உருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண.பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில் வலிவல முறை இறையே —1330

எனப் பாடும்போதும், அப்பர் சுவாமிகள்,

பல பல காமத்தராகிப் பதைத்தெழுவார் மனத்துள்ளே
கலமலக் கிட்டுத் திரியும் கணபதி என்னும் களிறும்
வலமேந்திரண்டு சுடரும் வான் கயிலாய வெற்பும்
நலமார் கெடிலப்புனலும் உடையார் ஒருவர் தமர்நாம்
அஞ்சுவது யாதொன்றுமில்லை, அஞ்சவருவதுமில்லை.

எனப் பாடும்போதும், தீயோரை வருத்தி, வழிபடுவோர் இடர்களைப் போக்கும் விநாயகப் பெருமானைக் குறிப்பிட்டாலும் அப்பெருமானை நமக்களித்த சிவபிரானையே பாடுகின்றனர். மேலும் சிவனை வழிபடும் விநாயகனையே குறிப்பிடுவர்.

ஆயின் பின்வந்த திருமுறை ஆசிரியர்கள் விநாயகப் பெருமானையும் பாடுகின்றனர். விநாயகர் கோலத்தையே இட்ட தெய்வமாகக் கொண்டு வழிபட்ட வரலாற்றினை நம்பியாண்டார் நம்பியின் வரலாற்றில் காண்கிறோம்.

மருப்பை ஒருகைக் கொண்டு நாரையூர் மன்னும்
பொருப்பை அடிபோற்றத் துணிந்தால்—நெருப்பை
அருந்த எண்ணுகின்ற எறும்பன்றே அவரை
வருந்த எண்ணுகின்ற மலம்.

என்பது நம்பியின் விநாயகர் திருவிரட்டை மணிமாலை. இங்குச் சிவனடியார் மலத்திலிருந்து விடுபட விநாயகரை வழிபடுகிறார்.

விநாயகரைச் சிவன் திருக்கோலமாக, சிவ சொரூபமாகக் கொண்டு வழிபடுகிறுர் என்றே கொள்ளவேண்டும். கபிலதேவ நாயனுரும்,

> விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
> விநாயகனே வேட்கை தணிவிப்பான்—விநாயகனே
> விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாம் தன்மையினுல்
> கண்ணிற் பணிமின் கனிந்து

எனத் தம் திருவிரட்டை மணிமாலையில் பாடுவர். ஒருவர் (ஆணவ) மலத்தை அகற்ற விநாயகரை வேண்ட, ஒருவர் வினையை வேரறுக்க வேண்டுகிறுர். திருமுறையில் விநாயகரைப் பற்றிய பிரபந்தங்கள் இடம் பெற்றபோதே சைவர்கள் சிவன் திருக்கோலமாகவே அப்பெருமானைக் கொண்டமை நன்கு விளங்கு கிறது.

விநாயகப் பெருமானைச் சிவபிரானின் மூத்த மகனுகக் கூறுவது புராணமரபு; இம்மரபை ஒட்டிச் சைவ சமயக் குரவர் களும் பாடியுள்ளனர் என்பதுண்மை. இவ்வாறு கூறுவதெல்லாம் சில கருத்துக்களை விளக்கக் கூறுவதே. திருவருளிலிருந்து முதலில் வெளிப்பட்ட வடிவம் என இதனைக் கூறலாம்.

உலகனைத்திற்கும் மூலமாக ஓங்காரத்தைக் கூறுவர். சிருட்டி தோறும், சிவசக்தி, ஓங்காரத்தை நோக்கிய வழித்தோன்றிய அவதரமே விநாயகப் பெருமான் என்பர். இதனுலேயே திருவரு ளின் மூத்த பிள்ளையார் ஆகிறுர் என விளக்குவர். அப்பெருமானை அருச்சிக்கும்போது 'ஓம் ஓங்கார ரூபாய நம' என ஓங்கார வடி வினனுகக் கூறுவர்.

ஆன்ம அனுபவத்திலும் பிரபஞ்ச உணர்வு ஓங்காரத்தில் ஒடுங்க, அங்குச் சிவ சக்தியைத் தலைக்கூடிச் சக்தியின் வழிச் சிவத்தோடு கலக்கிறோம். பிரணவத்தியானத்தின்வழி இந்நிலை கைகூடுவதுண்டு என்றும், விநாயகர் வழிபாடும் இதனையே விளக்குகிறதென்றும் கூறுவர்.

சைவ சித்தாந்த ஆசிரியர்கள், கணபதியை வழிபட்டுத் தங்கள் நூலைத் தொடங்குகின்றனர்.

> கல்லா னிழன் மலை வில்லார் அருளிய
> பொல்லார் இணைமலர் நல்லார் புனைவரே

என சிவஞான போதத்தைத் தொடங்குவர் மெய்கண்டார். சிவன் மகவாகக் கூறப்படினும், சிவனுக்கும், விநாயகருக்கும் வேற்றுமை இல்லை என்பதே பின்னுளைய சைவர்கள் கோட்பாடு.

## வடிவம்

ஐந்துகை, யானை முகம், தேவவுடல், தும்பிக்கை ஒழிந்தகைகளில், பாசம், அங்குசம், தந்தம், மோதகம் (கனி) என்னும் நான்கு பொருள்கள், மூஷிகவாகனம்; இந்நிலையில் காட்சியளிக்கும் ஒரு திருக்கோலமே விநாயகர் திருக்கோலம். பொதுவாக பிரமசரிய கோலத்தினராகக் கூறப்படினும் மடியில் சத்தியோடு விளங்கும் வல்லப கணபதியும் உண்டு. அடியவர்களுக்குப் பயனையும் அறிவையும் தரும் சித்தி, புத்தி என்ற தேவிமார்களோடு விளங்குவதாகவும் கூறுவண்டு.

விநாயகன் என்னுஞ்சொல் தனக்குமேல் ஒரு தலைவன் இல்லாதவன் என்ற பொருளை உடையது. இப்பெருமானுக்குப் பரவலாக வழங்கும் பெயர் கணபதி என்பது; பல கணங்களுக்கும் தலைவர் என்பது பொருள். இவர் உடற்கூறும் இதனை விளக்கும் என்பர். இடையின் கீழே பூத உடம்பு, இடைக்குமேல் கழுத்துவரை தேவ உடம்பு, தலை விலங்கின்தலை, எனவே பல கணங்களுக்கும் தலைமையினை அவர் வடிவே காட்டும் என்பர். மேலும் இவர் ஓங்கார வடிவினர் என்பதையும் இவர் யானைத்தலை காட்டும் என்பர்.

யானை முகத்தவர் என்பதால், யானைக்குரிய மும்மதங்களும் இவருக்குண்டு எனக்கூறி, அவை இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானச்க்தி என விளக்குவர்.

விநாயகர் வழிபாடும், பிற சிவன் திருக்கோல வழிபாடுபோல் ஞானத்தைத் தந்து பேரானந்தத்துக்குத் துணையாக அமைவதே.

புராணத்தின் வழி இவர் பிறப்புக்கு ஒரு காரணம் கூறப்படுதல் உண்டு. கஜமுகாசுரனை அழிக்கவே விநாயகர் அவதரித்தார் என்பர்.

> 'கைவேழ முகத்தவனைப் படைத்தார்போலும்.
> கயாசுரனை அவனுற் கொல்வித்தார் போலும் —6776

என்பது அப்பர் தேவாரம். இக்கயாசுரன் ஒவ்வொருவரிடமும் அடங்கிக் கிடக்கும் ஆணவமே; இதனை, 'கண்ணில் ஆணவ வெங்கரி பிணித்தடக்கிக் கரிசினேற்கு இருகையும் ஆக்கும் அண்ணலை' எனப் பாடுகிறது தணிகை புராணம். எனவே அப்பெருமானைப் புந்தியில் வைத்துத் தியானம் செய்து ஞானத்தைப் பெறுமாறு திருமந்திரம் கூறுகிறது.

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்று கின்றேனே.

என்பர் திருமூலர். இதனாலேயே, 'இவர் புத்திக்கு அதி தெய்வம், விரும்பித் தொழும் பிள்ளைகள் முதல் எல்லோருக்கும் உள்ளொளியையும் நினைவாற்றலையும் வழங்குவர்; எடுத்த காரியங்களை இடையூறு தீர்த்து இனிது முடியச் செய்வர்' எனக் கூறுவர்.

நம் ஆணவமாகிய யானையை வெல்லும் விநாயகப் பெருமானாகிய யானையை நாம் எவ்வாறு வெல்வது என்றும் சைவப் பெரியார்கள் அறிவுறுத்துகிறார்கள்.

உள்ளமெனும் கூடத்தில் ஊக்கமெனும் தறி நிறுவி உறுதியாகத்
தள்ளரிய அன்பென்னும் தொடர்பூட்டி இடர்படுத்தித் தறுகட்பாசக்
கள்ளவினை பசுபோதக் கவளமிடக் களித்துண்டு கருணையென்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை நினைந்து வருவினைகள் தீர்ப்பாம்

என்பது திருவிளையாடற்புராணம்.

விநாயகப் பெருமான் திருமுன், பலீபீடத்திற்கு முன்பாக மூஷிகத்தையே (பெருச்சாளியினையே) பிரதிட்டை செய்வர். இங்கு மூஷிகம்[1] பசு (ஆன்மா) பசுபோதத்தைப் பலிபீடத்தில் பலியிட்ட பின் விநாயகப் பெருமான் திருக்காட்சி நமக்குச் சித்திக்கிறது. விநாயகப் பெருமான் எழுந்தருளுவதற்கேற்ற தகுதியுடைய ஆன்மாவாக நாம் ஆகிறோம் என்பது பொருள்.

## முருகன்

முருகப்பெருமானையும், சிவபிரான் மகவாக, சிவபிரானை வழிபடுகின்றவனாகவே சைவசமயக் குரவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

நம் கடம்பனைப் பெற்றவள் பங்கினன் எனப் பாடிய அப்பர் சுவாமிகளே, 'சரவணத்தான் கைதொழுது சாருமடி' எனச் சிவன் திருவடியைச் சிறப்பிப்பர். ஆயின் திருமுறைகள் பன்னிரண்டாகத் தொகுக்கப்பட்ட காலத்தில், முருகனைப் பற்றிய பாடல்கள், ௪-ஆம்

1. சில விநாயகர் சந்நிதியில் நந்திவாகனம் பிரதிட்டிக்கப் பெற்றிருப்பது விநாயகர் வழிபாடு சைவமரபில் வளர்ந்தமையினைக் காட்டலாம்.

திருமுறை 11-ஆம் திருமுறைகளில் இடம் பெறலாயின. 'சுப்பிரமணியன் என்னும் சொல் வழக்கும் முதலில் 9-ஆம் திருமுறையிலேயே இடம் பெற்றுள்ளது. முருகனடியார்கள் பாராயணம் செய்யும் திருமுருகாற்றுப்படையும், பதினொன்றும் திருமுறையில் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. முருகப் பெருமானைப் பற்றிய பாடல்களைத் திருமுறையில் சேர்ப்பதற்குக் காரணம், முருகப் பிரானையும், சிவன்கோலமாக, சிவ—சொருப மாகக் கொண்டதேயாதல் வேண்டும். சிவனே தன் ஐந்து முகத்தோடும், அதோமுகமும் கொண்டு அறுமுகனைத் தோன்றினன் எனத் திருமந்திரம் குறிப்பிடுகிறது. பின்வந்த சிவனடியார்களும் இதனைக் கூறுவர்.

> பாங்குடைய முக்கட் பரஞ்சோதி ஆங்கொருநாள்
> வேந்தவர்க்காற்றுத விண்ணோர் முறைக்கிரங்கி
> ஐந்து முகத்தோடு அதோ முகமும் தந்து
> திருமுகங்கள் ஆறாகி,

தோன்றியருளியதாகக் கூறுவர். முருகன் பிறப்பைக் கூறும் கந்த புராணமும்,

> வந்திங்கு மலரோனாதி வானவர் உரைத்தல் கேளாப்
> புந்திக்குள் இடர் செய்யற்க, புதல்வனைத் தருதுமென்று
> அந்திக்கு நிகர் மெய்யண்ணல் அருள்புரிந் தறிஞராயோர்
> சிந்திக்குந் தனது தொல்லைத் திருமுகமாறும்
> கொண்டான்.

எனப்பாடும்.

## ஆறுமுகங்கள்:

1. ஈசானம் — மேல்நோக்கிய வடகிழக்கு முகம்
2. தற்புருஷம் — கிழக்கு நோக்கியது
3. அகோரம் — தெற்கு நோக்கியது
4. வாமதேவம் — வடக்கு நோக்கியது
5. சத்தியோசாதம் — மேற்கு நோக்கியது
6. அதோமுகம் — கீழ் நோக்கியது

என்பன. சிவனைக் கூறும் போது இவ்வாறு கூறினும் முருகப் பெருமான் திருமுகங்கள் வரிசையாக முன்னோக்கியும் அமைக்கப் படுகின்றன.

## வடிவம்:

ஒரு பக்கத்தில் வள்ளி நாச்சியாரும், பிறிதொரு பக்கத்தே தெய்வயானை அம்மையாரும் அருகிருக்க, கையில்

வேலேந்தி நடுவே மயில்வாகனத்தில் வீற்றிருக்கும் திருக்கோல மும், ஒருமுகமும் நான்கு கைகளும் உள்ள திருக்கோலத்திற்கு வேறாக, ஆறுமுகங்களும் பன்னிரண்டு கைகளும் உள்ள திருக் கோலமும், தனியே வேலைக் கையில் கொண்டு பால முருகனாக விளங்கும் திருக்கோலமும், ஆண்டிக் கோலத்தில் தண்டாயுத பாணியாக விளங்கும் திருக்கோலமும் முருகன் திருக்கோலங்களே. வள்ளி தேவயானையரோடும் வேலோடும் தோன்றும் காட்சி இறைவன், இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞான சக்திகளோடு விளங் கும் காட்சி என்பர்.

இத் திருக்கோலங்களிலெல்லாம் முருகனை வழிபட்டாலும் அப்பெருமானைச் சிவசொரூபமாக வழிபடலே சைவ வழிபாடு எனல் வேண்டும்.

ஈசனே அவன் ஆடலால் மதலையாயினன்காண்
ஆசிலா அவன் அறுமுகத்துண்மையால் அறிநீ
பேசில் ஆங்கவன் பரனோடு பேதகமல்லன்
தேசுலாவகன் மணியிடைக் கதிர் வருதிறம்போல்

எனப் பாடுவர் கச்சியப்பர்.

இப்பெருமானை நினைவுகூரும் மந்தர ஜபமாக, 'அரகர சிவாய' எனக்கூறுவதுமுண்டு. முருகனை வழிபடுதெய்வமாகக் கொண்டா லும் திருவைந்தெழுத்தைத் தியான மந்திரமாகக் கொள்வர். சிவதீக்கை பெற்று, வழிபாடு நிகழ்த்துவோரும், முருகப்பிரானை இட்ட தெய்வமாகக்கொண்டு வழிபடுவதாலேயே முருகன் வழி பாடு சைவ வழிபாடு எனப்படுகிறது. விநாயகரை வணங்கும் போதும் சைவர்கள் திருவைந்தெழுத்து மந்திரத்தையே முதன் மையாகக் கொள்வர்.

முருகனை வழிபடும் அடியவர்கள் சிவதீக்கையோடு, குகதீக்கை பெறும் முறையும் ஏற்படலாயிற்று; 'குகதீக்கை குமார தந்திரமுறையை ஒட்டியது' என்பர். இம்முறையினையும் கந்த புராணத்தில் கண்டு கூறும்போது, 'சைவம்' அடிப்படை நூற் களாக வேறு சிலவற்றையும் ஏற்று வளர்ந்த வளர்ச்சியைத்தான் குறிப்பிடவேண்டும். இந்நிலையிலேயே 'ஓம் சரவணபவ' போன்ற மந்திரங்களும் சைவர்களால் செபிக்கப்படலாயின.

## தேவி வழிபாடு

தனித்த நிலையில் தேவியை வழிபடும் மரபு பண்டைய சைவ உலகில் காணப்படவில்லை. சிவபிரானின் ஒருகூறாகவே தேவி யைக் கொள்வர்.

சிவனை வழிபடும் அடியவர்கள் பலரும், தேவியைப் பாகமாக உடையவனையே வழிபட்டனர், பாடினர். ஆயின் தேவியின் திருக்கோலத்தைத் தனியே கண்டு பாடிய பாடல்களைச் சைவ சமயக் குரவர்கள் நால்வர் பாடல்களில் காணமுடியவில்லை. தேவியைப் பாகமாகவுடையவன் எனக் கூறினாலும் முருகனையும் விநாயகரையும் போன்று அத்தேவியும் சிவனை வழிபட்டதாகக் கூறுவர்.

அற்றமில் புகழாள் உமை நங்கை யாதரித்து வழிபடப் பெற்ற
கற்றைவார்சடைக் கம்பன் எம்மானைக் காணக்கண் அடியேன் பெற்றவாறே—7849

எனப்பாடுவர் சுந்தரர். திருமந்திரத்திலேயே.

அவளையறியா அமரரும் இல்லை
அவளன்றிச் செய்யும் அருந்தவமில்லை
அவளன்றி ஐவரால் ஆவதொன்றில்லை
அவளன்றி ஊர்புக மாறறியேனே —1053

என்பன போன்ற பாடல்களைக் காண்கிறோம். திருக்கோவில் அளவிலும் பிற்காலத்தில் தேவிக்கு முதன்மை கொடுத்து வழங்கப் படும். மதுரை மீனாட்சியம்மன் ஆலயம், காஞ்சி காமாட்சி யம்மன் ஆலயம், காசி விசாலாட்சிஅம்மன் ஆலயமெல்லாம், சொக்கநாதர் ஆலயம், ஏகாம்பரேசுவரர் ஆலயம், விசுவநாதர் ஆலயங்களே.

பழைய தேவி சந்நிதிகள் சிலவற்றில், இன்றும் காளை வாகனத்தையே காண்கிறோம். இந்நந்தி, அங்குறையும் தேவி சிவ சொரூபிணி என்பதைக் காட்டுவதே. தேவி வழிபாடு நிகழ்த்தும்போதும் 'சிவப்பதிவிரதையே நம' என வணங்குவதும் சிவனருளாக விளங்குபவளே சக்தி என்பதை நன்குணர்த்தும்; இங்குச் சிவனுக்கு வேறாக தேவிக்கு முதன்மை தந்து வழிபடும் வழிபாடில்லை.

தேவியின் திருமுன்பு, நந்திவாகனத்துக்கு வேறாகச் சிம்ம வாகனத்தைப் பிரதிட்டை செய்துள்ள கோவில்கள், சைவ மரபில் ஒரு புதிய வளர்ச்சி என்று தான் கூறவேண்டும்.

தேவி வழிபாட்டுக்கும் சிவ வழிபாட்டுக்கும் மிகுந்த நெருக் கத்தைக் காண முடிந்தாலும், தேவியை இட்ட தெய்வமாகக் கொண்டு வழிபடும் சிவனடியார் அருகியே உள்ளனர். தேவியைப் பாடியவர்களும் சிவன் திருக்கோலங்களில் ஒன்றாகக் கண்டு பாடி

யவர்களே அன்றித் தேவியை இட்ட தெய்வமாகக் கொண்டு வழி பட்டவர்களா? என்பது தெரியவில்லை. தேவி வழிபாடு சிவ வழி பாட்டோடு பின்னிப் பிணைந்தே உள்ளது. காஷ்மீரத்திலுள்ள 'சிவாத்துவிதம்' சாக்தத்தின்—சக்தி வழிபாட்டின்—வழிவந்ததே என்பர். சாக்த தந்திரத்தின் எதிரொலியினைத் திருமந்திரத்தி லும் காணுமையில்லை. சக்தியை வழிபடுபவர்கள் பின்னர், சாக்தேய தீக்கை பெறத் தொடங்கியதும், சைவ வளர்ச்சியினைச் சுட்டுவதே.

## திருக்கோலம்

சிவன் அருகில் நின்ற திருக்கோலமாக விளங்கும் தேவியின் திருக்கோலம் பெரும்பாலும் இரண்டு கைகளையுடையதாக விளங் கும். நான்கு கைகளோடுள்ள திருக்கோலமும் உண்டு. தனித்த நிலையில் தாபனம் செய்யப் பெறும் தேவியின் திருக்கோலம் பெரும்பாலும் நான்கு கைகளை உடையதாகவிருக்கும். இரண்டு கைகளோடு தாபிக்கப் பெறுவதும் உண்டு. மதுரை மீனாட்சி யம்மன் இரண்டு கைகளோடு காட்சி தருவது குறிப்பிடத்தக்கது.

உத்தரகாமிகாகமத்தில், சிவன்தேவி நான்கு கைகளோடு காட்சி தரும்போது இரண்டு கைகளில் பாசம், அங்குசங்களை ஏந்தியவாறும் இரண்டு கைகள் வரத, அபய முத்திரைகளோடும் விளங்குவள் என்றும் அப்போது முக்கண்ணியாக இருப்பள் என்றும், இரண்டு கைகள் உடையவளாக விருக்கும் போது ஒரு கை தொங்கவிடப்பட்ட நிலையிலும் ஒரு கை மலரேந்திய நிலையி லும் காட்சி தருவள் என்றும், அப்போது அன்னைக்கு இரண்டு கண்களே உண்டு என்றும் கூறப்பட்டுள்ளதை எடுத்துக்காட்டுவர் கைகளில், கிளி அல்லது கண்ணாடி, நீலமலர், சூலம் போன்ற பொருள்களோடு விளங்கும் திருக்கோலமும் உண்டு என்பர்.

## திருக்கோவில் பூசை

ஆன்மார்த்தமாகச் செய்யும் இட்டலிங்க பூசையின் போது பின்பற்ற வேண்டிய விதிகளைப் பின்பற்றியே திருக்கோவிலிலும் பூசைசெய்வர். ஆன்மார்த்த பூசை பரார்த்த பூசை என்பன நோக்க அளவில் வேறுபடினும் செயலளவில் ஒன்றே என்பர். திருக்கோவிலில் நிகழும் பூசையினை நித்திய, நைமித்திய, காமிய பூசைகள் என மூன்ருகப் பாகுபடுத்துவர். நித்தியபூசைஅன்ருடம் நிகழ்வது. ஏதேனும் ஒரு நிமித்தம் பற்றி நிகழ்வது நைமித்திகம். இதனைப் புண்ணிய காலங்களில் செய்யப்படும் சிறப்புப் பூசை எனலாம். நித்தியத்தில் தாழ்வு வந்துழிச் செய்வது நைமித்திகம். என்று விளக்குவோருமுண்டு. தனிப்பட்டவர்கள் வேண்டுதலாக அமையும்போது அது காமிய பூசை ஆகிறது.

## நித்திய பூசை

திருக் கோவில்களில் ஒரு கால பூசையிலிருந்து ஆறுகால பூசைகள் வரையிலும் நிகழ்கின்றன. பன்னிரண்டு கால பூசை நடைபெறும் கோவில்களும் உண்டு என்பர்.

1. உஷத்காலம் 2. காலைசந்தி 3. உச்சிக்காலம் 4. மாலை சந்தி 5. இரண்டாம்கால பூசை. 6. அர்த்தசாம பூசை.

1. உஷத்காலம்: கதிரவன் தோன்றுவதற்கு முன் பள்ளியறையில் துயில் கொள்வதாகப் பாவிக்கப்பெற்ற இறைவனைத் துயில் எழ வேண்டி பல்லக்கில் ஏற்றி மூலதானத்துக்குக் கொண்டு வருவர்; பள்ளியறை மூர்த்தியில் ஒடுங்கியிருப்பதாகப் பாவிக்கப் பெற்ற தெய்வீக சக்தியை மூலத்தானத்துத் திருக்கோலத்தில் எழுந்தருளச் செய்து பூசை செய்வர்.

2. காலைசந்தி : கதிரவன் தோன்றும்போது நடைபெறுவது; முதலில் சூரியனுக்குப் பூசை செய்த பின்னரே, விநாயகருக்கும் அதனையடுத்து மூலத்தானத்து இலிங்கத்துக்கும் பின் சுற்றுத் தெய்வங்களுக்கும் பூசை செய்வர்.

3. உச்சிக்கால பூசை : நண்பகலின்போது நடைபெறுவது இப்பூசையினைப் பல கோவில்களில் மிகச் சிறப்பாக நடத்துவர். சிறப்பாக அபிஷேகம் செய்து, நன்கு அலங்காரம் செய்து. நைவேத்தியம் படைத்துப் பின் தீபாராதனை செய்வர்.

4. மாலை-சந்தி: கதிரவன் மறையும் நேரம் செய்யப் பெறுவது. முதலில் விநாயகருக்கும் அடுத்து மூலவருக்கும் அதனையடுத்துச் சுற்றுத் தெய்வங்களுக்கும் பூசை நடைபெறும்.

5. இரண்டாங்கால பூசை: மாலை-சந்தி முடிந்து மூன்றே முக்கால் நாழிகை (1½ மணி நேரம்) கழிந்த பின்பு இப்பூசையினைச் செய்வர்.

6. அர்த்தசாம பூசை: இரண்டாம்கால பூசை முடிந்து மூன்றே முக்கால் நாழிகை கழிந்த பின்பே இப்பூசை நடைபெறும் அபிஷேகம், அலங்காரம், நைவேத்தியங்களோடு இப்பூசைகளினைச் செய்வர். இறைவனைப் பள்ளியறைக்கு அழைத்துச் சென்று வாசனைப் பொருள்களைப் படைத்துப் பள்ளி கொள்ள வேண்டுவர்.

பின் சண்டேசுர பூசைசெய்து, பைரவர் சந்நிதி சென்று பூசை நிகழ்த்தித் திருக்கோவில் திறவுகோலை அவரிடம்

ஒப்படைப்பது என்ற மரபுண்டு. காலையிலும் அவரிடம் திறவு கோலைப் பெற்றே திருக்கோவில் திறப்பதாக மரபு.

## திருவிழா

சில புண்ணிய நாட்களில் நடைபெறும் சிறப்புப் பூசையினையே பொதுவாக விழா என்பர். இந்நாட்களிலும் உற்சவ மூர்த்தி எழுந்தருளி வீதி உலாவருதலுண்டு. இவ்வாறு நல்ல நாட்களில் கொண்டாடும் விழாவோடு, ஒரு குறிப்பிட்ட கோவில் ஒரு குறிப்பிட்ட புண்ணிய நாளைத் தேர்ந்தெடுத்து பெரிய திருவிழாவாகக் கொண்டாடுவதும் உண்டு.

“எடுக்கும் விழவும் நன்னுள் விழவும் இரும்பலியின்
பின்னேடெத்திசையும்”
அடுக்கும் பெருமைசேர் மாடக் கூடல் ஆலவாயின் கண்
அமர்ந்தவாறே”-7,

என்னும் சம்பந்தர் பாடல் இதனை உணர்த்தும்.

திருவிழாவினை, உத்சவம் எனக்கூறி, ஆன்மாவுக்குச் சுகத்தை உண்டுபண்ணுவது, மேலான பரமேசுவரன் வெளியுலாவுதல் எனவும் பொருள் விளக்கம் தருவர். திருவிழாவில் நான்கு பகுதிகள் உண்டென்றும் அவை, 1 சிருட்டி செய்தல் 2 தம்மை வெளிக்காட்டல் 3 சுகத்தைக் கொடுத்தல் 4 வந்து பார்த்தல் எனக் கூறுவர்.

திருவிழாவன்று, அருள் பாலிக்க, இறைவன் விக்கிரகத்தில் சிறப்பாக முனைத்து நிற்கிருன் என்றும், தன்னிடத்திலிருந்தே தரிசனம் அளித்த இறைவன், வெளியே எழுந்தருளி வந்து தரிசனம் தருகிருன் என்றும் கூறுவர். திருவிழாக் காண்டலைப் பிறவிப் பயனுகவே கூறுகிறது பெரியபுராணம்.

மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்
கண்ணினுல் அவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல்
உண்மையாமெனில் உலகர் முன்வருகெனவுரைப்பர்
திருஞான. 1087

திருவிழாக் காலங்களில் வெளியே எழுந்தருளுவதைச் சைவசமயக் குரவர்களும் ஈடுபட்டுப் பாடுவர்.

சீருடை ஏழுநாளும் கூத்தராய் வீதி போந்தார் குறுக்கை
வீரட்டனுரே—4645
மால்விடைமேல் நெடுவீதி போதக்கண்டார் — 7189

எனப்பாடுவர் அப்பர் சுவாமிகள்.

பொதுவாகத் திருவிழா, ஒரு நாள் காலையில் தொடங்கி அன்றிரவே முடிந்து விடுவதுமுண்டு. பன்னிரண்டு நாட்கள்வரையிலும் நடைபெறும் பெருந் திருவிழாக்களும் உண்டு. திருவிழாவின் போது அங்குரார்ப்பணம், கொடியேற்றம், யாகம் செய்தல், அபிடேகம் படைத்தல், தீர்த்தத்துறை படிதல், விவாகம், பக்தோச்சவம் போன்ற பல நிகழ்ச்சிகள் நடைபெறும். பல கோவில்களில், இறைவனைத் தேரில் எழுந்தருளச் செய்து கண்டு மகிழ்வர்.

நீரார் முடியார் கறைகொள் கண்டர் மறைகள் நிறை நாவர்
பாரார் புகழால் பத்தர் சித்தர் பாடியாடவே
தேரார் வீதி முழவார் விழவின் ஒலியுந்திசை செல்லச்
சீரார் கோலம் பொலியும் நறையூர்ச் சித்தீச் சரத்தாரே.—769

என்னும் சம்பந்தர் பாடலும் இத்தகைய தேர்த் திருவிழாவையே பாடுகிறது.

திருவிழாக் காண்டலோடு திருவிழா நிகழ்ச்சிக்குத் துணை செய்தோர்களுக்குப் பெரும் பயன் உண்டு என்பர்.

திங்களஞ் சடையோன் சினகரஞ் செய்தோர் திருவிழா இனிதினின் அமைத்தோர்
அங்கவன் தடந்தேர் பண்ணுவித் தோர்கள் சாறயர் மறுகமைத்திட்டோர்
கொங்கவிழ் தருவின் நீழலிற் பன்னுள் குலிசன் வாழ்த்த வீற்றிருந்து
மங்கையோர் பாகன் உலகினினடைந்து மலரடி நீழல் வீற்றிருப்பார்

என்பர்.

## சிவாலய தரிசனம்

சிவாலய தரிசனம் செய்யச் செல்வோர், தம்மைத் தூய்மை செய்து பின்னர், திருநீறணிந்து, திருக்கோவில் வழிபாட்டிற்குரிய மலர், வெற்றிலை பாக்கு, தேங்காய், பழம் போன்ற பொருள்களைக் கையில் எடுத்துக்கொண்டு செல்வர்.

திருக் கோவிலுக்கருகில் செல்லும்போது, கோபுரத்தைத் தூல லிங்கமாகக் கருதி வணங்குவர்.

பூசகர் திருக்கோவில் திறந்து உட்சென்று விளக்கிட்ட பின்னரே கோவிலினுட் செல்வர்.

முதலில் வலம் வந்து, துவார பாலகர், திருநந்தி தேவரை வணங்குவர். சிவதரிசனத்துக்கு நந்திதேவரிடம் அனுமதி பெறுவதற்காக நந்திதேவரை வணங்குவதாகக் கூறுவர். பின்னர் விநாயகரை வணங்கிச் சிவ சந்நிதிக்குச் செல்ல வேண்டும். பெரு

மானைத் தியானித்தவாறு தோத்திரங்கள் பாடுவர்; தோத்திரங்களுள் பஞ்ச புராணங்களைச் சிறப்பாகக் கூறுவர். இறுதியில் அருச்சனை செய்வித்துப் பிரசாதம் பெற்றுத் திரும்புவர்.

திரும்பி, சபாபதி, தக்ஷிணாமூர்த்தி, சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், சுப்பிரமணியர் முதலிய மூர்த்திகளை வணங்கிவிட்டுச் சைவக் குரவர்களை வணங்கிவிட்டுத் தேவி சந்நிதிக்குச் செல்வர். இங்கும் சிவ சந்நிதியைப் போல், தோத்திரம் சொல்லி அருச்சனை செய்வித்துத் திரும்புவர். விபூதி பெற்று அணிந்து கொள்வர். சண்டேசுரர் சந்நிதியை அடைந்து சிவதரிசனப் பயனைத் தரும் பொருட்டுப் பிரார்த்திப்பர்.

இறுதியில் நந்தி தேவரை வணங்கி, ஓரருகில் அமர்ந்து திருவைந்தெழுத்தை உருச்செபித்துத் திரும்புவர்.

ஒவ்வொரு நாளும் சிவதரிசனம் செய்தல் வேண்டுமாயினும் புண்ணிய காலங்களில் கட்டாயம் திருக்கோவில் தரிசனம் செய்ய வேண்டும் என்பர்.

வழிபடும்போது, தலை தாழ்த்து வணங்குதல், ஐந்து உறுப்புக்கள் தரையில் பட வணங்குதல் (பஞ்சாங்க நமஸ்காரம்) எட்டுறுப்புக்கள் தரையில் பட வணங்குதல் (அஷ்டாங்க நமஸ்காரம்) எனப் பலவாக வணங்குவதைக் கூறுவர். எவ்வாறு வணங்குவது என்பதற்கு இலக்கியமாகப் பெரிய புராணம் கூறும் பாடல் ஒன்று இங்குக் குறிப்பிடத்தக்கது.

அன்பு பெருக உருகியுள்ளம் அலைய அட்டாங்க பஞ்சாங்கமாக
முன்பு முறைமையினுல் வணங்கி முடிவிலாக் காதல் முதிர வோங்கி
நன்புலனாகிய ஐந்தும் ஒன்றி நாயகன் சேவடி எய்தப் பெற்ற
இன்ப வெள்ளத்திடை மூழ்கி நின்றே இன்னிசை வண்டமிழ் மாலை பாட
—பெரியபுராணம் 272

திருக்கோவில் தரிசனத்தின் பயனை விளக்கும்போது, "இதய ஸ்தானத்தின் எதிரொலியாகக் கருவறை அமைக்கப்பட்டிருக்கிறது. அக்கருவறை பூசை தொடங்குவதற்கு முன் திரையினுல் மறைக்கப்பட்டிருக்கிறது; ஒளிவரும்வரை சிவதரிசனத்திற்காகக் காத்துக் கொண்டிருக்கிறோம்; மணி ஒலி கேட்கிறது; திரைவிலகுகிறது; தீபாராதனையாலும் விளக்காலும் ஒளியுண்டாக

சிவதரிசனம் கிடைக்கிறது. மனமே கருப்பக்கிருகம்; அங்கு நிகழ வேண்டிய ஞானக் காட்சியின் புறத் தோற்றமே இது. மனத்தை உண்முகமாகச் செலுத்தும் ஞான சாதகன் முதலில் காரிருளைக் காண்கிறான். சாதனையினால் படிப்படியாக உள்ளத்தினுள் இனிய ஓசையும் பிறகு 'ஞான ஒளியும் உண்டாகின்றன' என்பர்.

# 6. அடியார் வழிபாடு

இந்து சமயத்தவர்கள் பலரும் அடியவர் வழிபாட்டைப் பொதுவில் ஏற்றுக் கொண்டாலும், சைவ வைணவ மரபுகள் அதனைச் சிறப்பாகப் பாராட்டும். அடியவர்களைக் கண்டால் வழி படுங்கள்; அது நாம் செய்யும் 'புண்ணியம்' என்பர்.

'பொய்யன்பிலா அடித்தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே' என்பது அப்பர் சுவாமிகள் பாடல். அடியவர்க்கு அடியவரும் பணியத்தக்கவர்களே என்ற கருத்தில்,

'தொண்டர் தொண்டரைத் தொழுதடி பணிமின்கள்
தூ நெறி எளிதாமே'

எனச்சம்பந்தர் பாடுவர். சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகை இவ்வடிப்படையில் எழுந்த ஒன்றே.

அடியவர்கள் திருவேடம் சிவவேடத்தை எதிரொலிப்பது; எனவே அடியவர் வேடத்தில் சிவ சொரூபத்தைக் கண்டு வழி படுவதையே, அடியார் வழிபாடாகக் கூறுவர்.

எவரேனும் தாமாக இலாடத்திட்ட திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி
உவராதே அவரவரைக் கண்டபோது உகந்தடிமைத்திறம் நினைந்து அங்கு வந்து நோக்கி
இவர்தேவர் அவர்தேவர் என்று சொல்லி இரண்டாட்டா தொழிந்து—ஈசன் திறமே பேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றுப்பூர் நடு தறியைக்—காணலாமே —6856

எனப்பாடுவர் அப்பர் சுவாமிகள். அடியவர் வழிபாட்டில் ஈசனையே வழி படுகின்றனர். அவ்வாறு வழிபடுவோர் நெஞ்சில் இறைவன்

கோவில் கொள்கிறுன் என்ற கருத்தும் இப்பாட்டில் உள்ளது. அடியவர்களைச் சிவனுகக் காண்பதைவிட்டு அவர்கள் பிறப்பினை ஆய்வது சைவமன்று.

'குறியில் நான்கு குலத்தினராயினும்
நெறியின் அக்குலம் நீங்கினராயினும்
அறிவு சங்கரற்கு அன்பர் எனப்பெறில்
செறிவுறப் பணிந்து ஏத்திய செய்கையார்'

என்பது திருமுறை. அடியவர்களைச் சிவனிலிருந்து வேறு படுத்திக் காண்பது பேதைமை என்கிறது கந்தபுராணம்.

'நாதன் தன்னையும் நாதனதம்புயப்
பாதஞ்சேர்ந்து பரவினர்தம்மையும்
பேதஞ் செய்வது பேதைமை நீரென
வேதங் கூறும் விழுப்பொருள் பொய்க்குமோ'

என்னும் பாடல் கருதத்தக்கது.

அடியவர் வழிபாடு உண்மையில் சிவவழிபாடே. சிவனை மறந்து அடியவர் ஒருவரையே வழிபடும் ஒன்றினைச் சைவ மரபில் காண முடியவில்லை. இங்கு நேசநாயனுர் திருத்தொண்டைக் கூறும் சேக்கிழார் பாடல் ஒன்று குறிப்பிடத்தக்கது.

'ஆங்கவர் மனத்தின் செய்கை அரனடிப் போதுக் காக்கி
ஓங்கிய வாக்கின் செய்கை உயர்ந்த அஞ்செழுத்துக்காக்கி
தாங்கு கைத்தொழிலின் செய்கை தம்பிரானடியார்க்காக
பாங்குடை உடையும் கீளும் பழுதில் கோவணமும் நெய்வார்'

என்னும்போது மனம் சிவன் திருவடிகளைத் தியானிக்க, மொழி இறைவன் அஞ்செழுத்தையே செபித்துக்கொண்டிருக்க, மெய், அடியார் திருத்தொண்டைச் செய்து கொண்டிருக்கிறது என்ற வகையிலேயே அடியார் வழிபாட்டைக் கூறக் காண்கிறோம். எனவே அடியார் வழிபாடு, சிவ-வழிபாடு என்ற வகையிலேயே விளக்கப்படுதல் தெளிவாக உள்ளது.

இறைவன் எல்லாவிடங்களிலும் உறைபவனுயினும் சில இடங்களில் முனைத்து நிற்கிறுன் என்பர். அவ்விடங்களில் திருக் கோவில் ஒன்று, 'உள்ளம் பெருங்கோவில் ஊனுடம்பு ஆலயமாக வாழும் அடியவர் கூட்டம் பிறிதொன்று. திருக்கோவில் போன்று சிவ சொருபத்தைப் புலப்படுத்தி நிற்பதாலேயே அடியவர்களை

'நடமாடும் கோவில்' என்பர். நடமாடும் கோவிலாக வாழும் அடியவர்களைத் தொழுதால் மட்டும் போதாது, அவர்களின் பசி போக்குவதோடு பிறவகையில் உதவுவதையும் சிவத்தொண்டு' என்றே கூறுவர்.

படமாடக் கோயிற் பகவற்கொன் றீயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கங்காகா
நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயில்
படமாடக் கோயில் பகவற்சதாமே. —1857

என்பது திருமந்திரம்.

இவ்வாறு உதவுவதை "மகேசுவர பூசை" என்பர்.

## திருக்கோவிலில் அடியார் வழிபாடு

அடியார்க்குச் செய்கின்ற 'உதவி' என்ற நிலையில் மட்டும் அடியவர்கள் வழிபாட்டைக் கொள்வதில்லை. அடியார்களுக்குத் திருக்கோவிலிலும் இடம் வழங்கியுள்ளனர். அடியார்களின் திருக்கோலம் பிரதிட்டை செய்யப் பெற்று வணங்கப்பட்டு வருவதையும் இங்குக் குறிப்பிட வேண்டும். அறுபத்து மூன்று சிவனடியார்களையும் பல சைவத் திருக்கோவில்களில் பிரதிட்டை செய்துள்ளனர். மேலும் சிவனடியார்களில் சண்டேசுரருக்குத் திருக்கோவிலில் தரப்படும் மரியாதையும் குறிப்பிடத்தக்கது. 'சண்டேசுரர்' என்ற பதமும், அவர் 'பஞ்சமூர்த்திகளுள்'[1] ஒருவராகக் கருதப்படுவதும் அடியவர்களுக்குச் சைவநெறியில் தரப்படும் சிறப்பையே காட்டும். சிவபிரானுக்குத் தானம் செய்வதென்றால் சண்டேசுரர் திருக்கையில் நீர்வார்த்துக் கொடுத்தலும் உண்டு. திருக்கோவில்களில் 'பக்த உத்சவம்' ஒன்று நடைபெறுதலும் அவ்வடியார் விழாவில் சண்டேசுரர் இடம் பெறுவதும் திருக்கோவில் வழிபாட்டில் அடியவர் வழிபாட்டின் இடத்தை விளக்கும்.

திருக்கோவிலில் பிரதிட்டை செய்யப்படும் 'கணநாதராகிய' நந்தியெம்பெருமானையும் சிறந்த அடியவராகவே சிவபுராணங்கள் கூறும். எனவே அடியவரைக் கண்டால் தொழுவதோடு; அடியவர்க்குச் செய்யும் பூசையும் சைவ உலகில் முக்கியமானது என்பது கருதத்தக்கது.

சிவப்பேற்றுக்கும் அடியார் கூட்டுறவு இன்றியமையாதது என்பர். சீவன்முத்தி நிலை அடைந்த சிவனடியார்களும், 'வாசனு

---

1. சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், விஷ்ணு, பிரம்மன் என்னும் பஞ்சமூர்த்திகளோடு விநாயகன், முருகன், சிவன் உமை, சண்டேசுவரர் என்னும் ஐவரையும் பஞ்சமூர்த்திகள் என்பர்

மலம் முற்றுமகல' அடியவர்களோடு ஒருங்கிருந்து வாழ வேண்டும்;அவர்கள் திருவேடத்தைச் 'சிவமெனவே'கண்டு வாழ வேண்டும் எனச் சாத்திரங்கள் கூறுகின்றன.

'மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம்தானும் அரனெனத் தொழுமே'

என்பது சிவஞானபோதம். 'பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுவரன் எனக்கண்டு, வழிபடுக' என விதிக்கிறது சிவஞானபோதம்; மேலும், 'சிவபத்தர் மாட்டு அன்பு செய்து மனம், சொல், செய்கைகளால் அவர்வழி நிற்பார்க்கு உலகியல் உணர்வுமாறிச் சிவானுபூதி உணர்வு மேம்பட்டு நிகழும். நிகழவே பிராரத்த வினைகள் அவர்க்கு நுகர்ச்சியாதல் செல்லாமையின் அவரை வாதிக்க மாட்டா. எனவே வீட்டு ணர்வை நிலைப்படுத்த சிவபத்தர்களோடு இணங்குக' என விளக்குவர்.

இவ்வாறு பொது நிலையில் அடியவர்களைச் சிவசொரூபமாகக் கண்டுவழி படுவதன்றி, ஒரு குறிப்பிட்ட அடியவரை வழிபட்டு, பூசைசெய்து உய்வடைவதையும் சைவ நெறி கூறும். இவ்வாறு ஒருவரையே தேர்ந்தெடுத்து வழிபடும்போது அங்கு 'குரு' என்ற சிந்தனையும் ஏற்படுகிறது.

## சமயக் குரவர்கள்

சைவ உலகில் அடியவர்களைப் பொது நிலையில் சிவசொரூப மாகக் கண்டு வழிபடுவதோடு, சமயக்குரவர் நால்வரையும், சிறப் பாக, குருமார்கள் என்ற நிலையில் வழிபடுவதுமுண்டு. திருத் தொண்டர் திருவந்தாதி 11ஆம் திருமுறையில் சேர்க்கப் பெற்ற நூல். அந்நூலில் அறுபத்து மூன்று நாயன்மார்களையும் நம்பியாண் டார் நம்பி பாடியுள்ளார். பதினொன்றும் திருமுறையில் திருஞான சம்பந்தரைப் பற்றியும் திருநாவுக்கரசரைப் பற்றியும் பாடியுள்ள தனி நூற்கள் இடம் பெற்றுள்ளமை, இவ்வடியவர்களுக்குச் சைவ உலகிலிருந்த ஏற்றத்தைக் காட்டும். இவ்விருவரையும் சைவ சமயத்தின் இருகண்களாகச் சேக்கிழார் கூறுவர். இவ்விருவரோடு சுந்தரரையும் மணிவாசகரையும் சேர்த்துச் சைவக்குரவர்கள் நால்வர் என்பர்.

'பூழியர்கோன் வெப்புஒழித்த புகலியர்கோன் கழல் போற்றி;
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி;

வாழிதிரு நாவலூர் வன்தொண்டர் பதம் போற்றி;
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.
—சேக்கிழார் நாயனர் புராணம்

என்பர் உமாபதிசிவம்.

அப்பர் சுவாமிகளைப்பாடும் கச்சியப்பர்:
'மருக்குலாவு மறை வனத்தொன்றிய
தருக்கபாடம் திறந்த சொல் வேந்தனை
அருட்குலாவும் அறிவினை மூடிய
இருட் கபாடம் திறக்கவும் ஏத்துவாம்'

என்பர்

இருளகன்று ஞானம் பெற இவ்வடியார் வழிபாடு உதவும் என்பதையே இவ்வாறு கூறுவர். இதனாலேயே தேவார ஆசிரியர்கள் மூவரையும் வழிபட்டு உய்ந்த நாயன்மாரைப் பற்றிச் சேக்கிழாரும் பாடுவாராயினர்:

| | |
|---|---|
| சம்பந்தரிடம் பத்திசெலுத்தியவர் | கணநாதர் |
| அப்பரிடம் பத்திசெலுத்தியவர் | அப்பூதியடிகள் |
| சுந்தரரிடம் பத்திசெலுத்தியவர் | 1. சோமாசிமாறர் |
| | 2. பெருமிழலைக் குறும்பர் |

## கணநாதர்

சம்பந்தர் தோன்றியருளிய சீகாழியிலே தோன்றித் திருத்தொண்டு செய்து வந்த இவ்வடியார் சிவனை முறையாக வழிபட்டு வந்தவர். இவ்வழிபாட்டின் விளைவாக இவர் உள்ளம் அடியார் பணியில் நாட்டம் கொள்கிறது. திருத்தொண்டர்கள் பலருக்கும் உதவுகிறார். இவ்வடியார் பணி, ஞானசம்பந்தப் பெருமானின் திருவடிகளிலே நாயனருக்குப் பெரும் ஈடுபாட்டை, பத்திமையினை விளைக்கிறது. மூன்றுவேளை, அவர் அடிகளுக்கு அருச்சனை செய்து, பேரன்போடு வழிபாடு நிகழ்த்தி வருகிறார். இவ்வழிபாடே நாயனருக்குப் பெரும் பேற்றை நல்குகிறது என்பர் சேக்கிழார் சுவாமிகள்.

'ஆனதொண்டினில் அமர்ந்த பேரன்பரும்
அகலிடத்தினில் என்றும்
ஞானமுண்டவர் புண்டரீகக்கழல் அருச்சனை
நலம்பெற்றுத்
தூநறுங்கொன்றை முடியவர் சுடர்நெடுங்கயிலை
மால்வரை எய்தி
மான நற்பெருங்கணங்கட்கு நாதராம்
வழித்தொண்டினைப் பெற்றார்—3933

என்பது பெரியபுராணம்.

## அப்பூதியடிகள்

திருநாவுக்கரசரின் திருவடிகளிலே பிடிப்போடு பத்திமை செய்து வாழ்ந்தவர்; தம் மக்களுக்கும் சூழவுள்ள பொருள்களுக் கெல்லாம் திருநாவுக்கரசு என்றே பெயரிட்டவர். திருநாவுக்கரசர், திங்களூர்வந்து அப்பூதியடிகளைக்காண, தம்மை நாடிவந்தவர் திருநாவுக்கரசரே என அறிந்தபோது, அப்பூதியடிகள் அடைந்த பத்திமை உணர்வை,

'அரசறிய வுரை செய்ய அப்பூதியடிகள் தாம்
கரகமலம் மிசை குவியக் கண்ணருவி பொழிந்திழிய
உரை குழறி உடம்பெல்லாம் உரோமபுளகம் பொலியத்
தரையின் மிசை வீழ்ந்தவர்தம் சரண கமலம்
பூண்டார்'—1804

எனப்பாடுவர் சேக்கிழார் சுவாமிகள். மேலும் இந்நாயனர் திருநாவுக்கரசரிடம் கொண்ட பத்தியினுலேயே தம் இறுதி இலட்சியத்தை அடைந்தார் என்பதையும்,

'இவ்வகையரசின் பாதம் ஏத்தி எப்பொருளும் நாளும்
அவ்வருந்தவர் பொற்றுளே யெனவுணர்ந்தடைவார் செல்லுஞ்
செவ்விய நெறியதாகத் திருத்தில்லை மன்றுளாடு(ம்)
நவ்வியங் கண்ணுள் பங்கர் நற்கழல் நண்ணினுரே'—1831

எனக் குறிப்பிடுவர்.

## சோமாசிமாறர்

'ஈசனுக்கு அடியவர்தாம் நமையாள்வோர்' என வாழ்ந்த இந்நாயனர் சுந்தரரிடம் பேரன்பு கொண்டு வாழ்ந்தவர். தம் சிவத்தியானத்திலும், புலன் ஒடுங்கி நின்று சுந்தரர் திருவடியே தமக்குப் பேரின்பம் தரவல்லது என்று அதில் தோய்ந்தவர். அதன் விளைவாகச் சிவலோக இன்பத்தைப் பெற்றவர்.

துன்றும் புலனைந்துடன் ஆறுதொகுத்த குற்ற
வென்றிங்கு இது நன்னெறி சேரும் விளக்கமென்றே
வன்றெண்டர் பாதம் தொழுதான சிறப்பு வாய்ப்ப
என்றும் நிலவும் சிவலோகத்தில் இன்பமுற்றுர். —3639

என்று, சுந்தரர் வழிபாட்டினுல் சோமாசிமாறர் பெற்ற பேற்றைக் கூறுவர் சேக்கிழார்.

## பெருமிழலைக்குறும்பர்

இந்நாயனுரும் சுந்தரரை வழிபட்டுய்ந்தவரே. உள்ளம் சிவனேடு ஒன்றி நிற்க, செயல்கள் அடியார் திருத்தொண்டில்

ஒன்றி நிற்க வாழ்ந்த இந்நாயனுருக்கு, சுந்தரருக்கு அடிமைத் திறம் பூணவேண்டும் என்ற எண்ணம் இறையருளால் பிறக்கிறது.

மையார் தடங்கண்பரவையார் மணவாளன் தன்
மலர்க்கழல்கள்
கையால் தொழுது வாய்வாழ்த்தி மனத்தால் நினைக்கும்
கடப்பாட்டில்'

நின்ருல் திருவடிப்பேறடைய முடியும் என்ற உறுதி பிறக்கிறது. ஆரூரர் நாமமே மந்திரமாகிறது. அதுவே உறவு,]அதுவே பொருள், அதுவே ஞானம் என்ற நிலை ஏற்படுகிறது. சுந்தரர் அஞ்சைக் களத்தப்பனைப் பணிந்தவாறு கயிலை செல்லப் போவதைத் தம் யோகக் காட்சியில் உணர்ந்த இந்நாயனுர்,

'மண்ணில் திகழும் திருநாவலூரில் வந்த வன்ருெண்டர்
நண்ணற்கரிய திருக்கயிலை நாளை எய்த நான் பிரிந்து
கண்ணிற்கரிய மணிகழிய வாழ்வார் போலவாழேன்
என்று
எண்ணிச் சிவன்ருள் இன்றே சென்றடைவன்
யோகத்தால் —1719

எனக் கூறியவாறே பிரமநாடி (கழுமுனை) வழியாக, மறைமூலம் (பிரமாந்திரம்) திறக்கப்பெற்றுக் கயிலையைச் சென்றடைந்து விடுகிருர்.

இங்கு அன்பால் ஒருவரைக் குருவாகக் கொண்டு உய்வதைக் காண்கிறோம். விதி வழிப்பட்ட பூசையில் தீட்சாகுருவைச் சில நியமங்களோடு வழிபடுவர். இந்நிகழ்ச்சிகளில் அத்தகைய வழிபாட்டுச் சிந்தனை இல்லை.

## சிவகுரு

ஆன்மாக்களை உய்விப்பதற்காகச் சிவனே குருவாக எழுந்தருளி வருகிருன் என்பதும் சைவர்கள் நம்பிக்கை. தட்சிணுமூர்த்தியின் திருக்கோலத்தோடு, வேறு பல உருவிலும் அடியவர்களுக்கு அவன் குருவாக வந்து ஆட்கொள்வதுண்டு என்பர். மணிவாசகர் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சியினை அப்பெருமானே,

'அருபரத்து ஒருவன் அவனியில் வந்து
குருபரனுகி அருளிய பெருமையை'

எனப் பாடுவர்.

மேலும் ஞானுசாரியனுக நின்று பத்துவகையாக இறைவன் இரட்சித்த முறையினையே திருச்சதகம் பாடுகிறது எனத் திருச்சதகத்துக்கு விளக்கம் கூறுவர்.

சிவகுருவின் பணியினைப் பேசவந்த திருமூலர்
'பத்திப் பணிந்துப் பரவும் அடிநல்கிச்
சுத்தவுரையால் துரிசறச் சோதித்துச்
சத்தும் அசத்தும் சதசத்தும் காட்டலாற்
சித்தம் இறையே சிவகுருவாமே. —1573

என்பர்.

சிவகுரு ஆன்மாக்களுக்குச் செய்யும் பணியினையே இப்பாடல் பேசுகிறது. உள்ளத்தைக் கனிவித்து அன்பாக்கி, திருவடி ஞானத்தைத்தந்து, தூய மந்திரோபதேசத்தால், மலத்தைப் போக்கி ஒளிபெறச் செய்து, சத்து இது, அசத்து இது, சதசத்து என்று வேறுபடுத்திக் காட்டும் பணியே சிவகுருவினுடையது என்கிறார்.

'குரு' பற்றிய சிந்தனை அறியாமையிலிருந்து விடுபட எண்ணும் எண்ணத்தால் ஏற்படுவது. 'குரு' என்ற சொல்லுக்கும் அறியாமையைப் போக்குபவன் என்பதே பொருள். 'குருராயர்' என்னும் சொல்லை விளக்கும் வள்ளலார், கு—இருள்; ரு—அருள்; ராயன்—விளங்கச் செய்கின்றோன்; 'கு' என்னும் அசுத்தாவத்தையில் நின்றோரை, 'ரு' என்னும் சுத்தாவத்தையில் நின்றவண்ணம் நிறுத்துகின்றோர் குரு ஆவர் என்பர். இவ்வாறு விளக்கியதோடு, இறைவன் குருவாக எவ்வாறு உள்—நின்று உணர்த்துகின்றான் என்பதை:

'மலத்திலே கிடந்தேன் தனை எடுத்தருளி மன்னிய
வடிவளித்து அறிஞர்
குலத்திலே பயிலும்தரம் இங்கெனக்குக் கொடுத்து
உளேவிளங்கும் சற்குருவே
பலத்திலே, சிற்றம்பலத்திலே, பொன்னம்பலத்திலே
அன்பர்தம் அறிவாம்
தலத்திலே ஓங்கும் தலைவனே எனது தந்தையே
கேட்க என்மொழியே'

என்று பிள்ளைப் பெருவிண்ணப்பத்திலே பாடுவர்.

மலத்திலே, இருளிலே, ஒரு மூலையிலே கிடந்தேன்; மலத்தைப் போக்கி, ஒளிபெறச் செய்து, ஒளிபெற்ற ஞானியர்களோடு வாழச்செய்து, பலருமறியும்படி முற்றத்தில் கொண்டு வந்து விட்டாய்; என இக்கருத்தினைச் சித்தாந்த சாத்திரமும் பேசும்.

'மூலை இருந்தாரை முற்றத்தே விட்டவர்
சாலப் பெரியர் என்றுந்தீபற
தவத்தில் தலைவர் என்றுந்தீபற —12

என்பது திருவுந்தியார்.

சித்தாந்த சாத்திரத்தில் இறைவன் குருவாக எழுந்தருளி வந்து ஆட்கொள்வதை விரிவாகவும் பேசும்.

'மன்னவன் தன்மகன் வேடர் இடத்தே தங்கி
வளர்ந் தவனை அறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன்நீ என்றவரிற் பிரித்துப்
பெருமையொடும் தானாக்கிப் பேணுமாபோல்
துன்னிய ஐம்புல வேடர் சுழலிற்பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறும் தொல்லுயிரை
மன்னுமருட் குருவாகி வந்தவரின் நீக்கி
மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்
—சித்தியார் சூ VIII—1

என்பது சித்தியார். அரசன் மகன், வேடர்கள் நடுவே அகப்பட்டுத் தன் அரச மரபினை மறந்து வாழ்ந்தபோது, அரசனே நேரில் வந்து, 'நீ என் மகன்' எனத் தெரிவித்து மீட்டுக் கொள்வதுபோல், ஐம்புலன்களாகிய வேடுவர்கள் நடுவே அகப்பட்டு, தம் இனமாகிய இறைவனை மறந்து துன்புறும் ஆன்மாக்களை, குருவடிவில் வந்து, வேடுவர்களிடமிருந்து பிரித்து, மலத்தை அகற்றி, சிவமாக்கி, தன் திருவடிக்கீழ் வாழுமாறு செய்வன் என்பது இதன் கருத்து.

இவ்வாறு சிவனே குருவாகவந்து தெளிவித்து ஆட்கொள்வது இருநிலையில் நிகழும் என்பர். உள்—நின்று உணர்த்துவதும் உண்டு; புறம்— வந்து உணர்த்துவதும் உண்டு.

'விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு
தண்ணின்றதாளைத் தலைக்காவல் முன்வைத்து
உண்ணின்றுருக்கி யொரொப்பிலா ஆனந்தக்
கண்ணின்று காட்டிக் களிம்பறுத் தானே' —113

என்பது திருமந்திரம்

இறைவன் நம் மலத்தை அகற்றத் தன்னிலையிலிருந்து இறங்கி வருகிறான்; தன் அருட் செயலுக்கேற்ற வடிவை எடுத்துக்கொள்கிறான். உள்ளே நின்று உருகுவதோடு, முன்னால் நின்று தன்னை இன்னார் என்று அறிவித்தும் தம் அருட்பணியினைச் செய்து முடிக்கிறான் என்பர்.

புறத்தே மானிடக் கோலத்தில் இறங்கிவந்தருளுவது அடியவரின் பக்குவ நிலையை ஒட்டி அமையும் என்பர். 'மானைக் காட்டி மானைப் பிடிப்பதுபோல, மானிடச் சட்டை தாங்கிக் கொண்டு, சிவனே குருவடிவில் எழுந்தருளுவதாக விளக்குவர்.

'பார்வையென மாக்களைமுன் பற்றிப் பிடித்தற்காம்
போர்வையெனக் காணார் புவி' —45

என்பது திருவருட்பயன்.

இவ்வாறு இறை இயல்பினை விளக்குவதோடு, தனிமனிதன் ஒருவன், 'தனக்குத் தீட்சை செய்வித்து உய்யும் நெறி காட்டிய குருவினையும்—சிவனாகவே பாவித்து வழிபடுவதையும் சைவநெறி கூறும். கருடத், தியானத்தால் ஒருவன் விடம் நீங்கி நலம்பெறுவது போல, குரு தியானத்தால் ஒருவன் மலம் நீங்கப்பெற்றுச் சிவப் பேறடைய முடியும்' என்பர்.

'கருடன் உருவம் கருதுமளவில்
பருவிடம் தீர்ந்து பயங்கெடுமாபோல்
குருவின் உருவம் குறித்த அப்போதே
திரிமலம் தீர்ந்து சிவனவனாமே.' —2659

என்பது திருமந்திரம்.

குரு வழிபாட்டினை வற்புறுத்தும் போது,

'சிவனே சிவஞானியாதலால் சுத்த
சிவனே என அடி சேரவல்லார்க்கு
நவமான தத்துவ நன்முத்திநண்ணும்
பவமானதின்றிப் பரலோகமாமே.

தெளிவு குருவின் திருமேனிகாண்டல்
தெளிவு குருவின் திருநாமம்செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல்தானே. —139

எனவும் பாடுவர். சிவகுருதரிசனத்தால் நாம் இறுதி இலட்சியத்தை அடைகிறோம் என்பதை,

'ஆறாறு மூப்பதும் அங்கே அடங்கிடிற்
கூறக் குருபரன் கும்பிடுதந்திடும்
வேறே சிவபதம் மேலாய் அளித்திடும்
பேறாக ஆனந்தம் பேணும் பெருகவே. —2656

எனத் திருமந்திரம் கூறும்.

## குருமடம்

'பலியும் அவியும் பரந்து, புகையும்
ஒளியும் எம்ஈசன் தனக்கென்றேஉள்கிக்
குவியும் குருமடம் கண்டவர், தாம்போய்த்
தளிருமலரடி சார்ந்து நின்றாரே.' — 2649

என்பது திருமந்திரம்.

சைவ மடங்கள் பல தமிழ் நாட்டிலும் இந்தியாவின் பிற பகுதி களிலும் உள்ளன. தமிழ்நாட்டில் சிறப்பான சைவ மடங்கள் சித்தாந்த மடங்களே. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை திருவாவடு துறை, தருமபுரம், திருப்பனந்தாள் மடங்களே. சைவ மடங்களை 'ஆதீனம்' என்பர்.

## திருவாவடுதுறை மடம்

கும்பகோணத்தின் கிழக்கே பன்னிரண்டு மைல் தூரத்தில் திருவாவடுதுறை உள்ளது. திருமூலர் வரலாற்றோடு பிணைப்புண் டிருக்கும் இவ்வூர் திருமூலர் காலத்துக்குப் பின்னாலும் பல சித்தர் களோடு தொடர்பு கொண்டிருந்ததாகக் கூறுவர்.

இம்மடம் கயிலாய பரம்பரையைச் சார்ந்ததாகக் கூறுவர். இப்பரம்பரையினை அகச்சந்தானம் புறச்சந்தானம் என இரண் டாகப் பாகுபடுத்துவர். அகச்சந்தானம் தேவபரம்பரை என்றும் புறச்சந்தானம் பூதபரம்பரை என்றும் வழங்கப்படு கின்றன. சித்தாந்தக் கோட்பாடு, நந்தி தேவர், சனற்குமாரர், சத்திய ஞான தரிசினிகள் என்ற முறையில் ஒருவர் பின் ஒருவ ராக, அகச்சந்தானவழி வந்தது என்றும், பின், மெய்கண்டார், அருணந்தி சிவம், மறை ஞானசம்பந்தர், உமாபதிசிவம் என்ற முறையில், புறச்சந்தான வழி வந்தது என்றும் கூறுவர்.

இம்மடத்தின் முதல் குரவர் உமாபதிசிவத்தின் மாணாக்கர் பரம்பரையில் வந்த 'நமச்சிவாய மூர்த்திகள்' என்பர். இவ்வா தீனத் தலைவர், நமச்சிவாய மூர்த்திகளின் ஞான—பரம்பரையில் வந்த ஒருவராகவே கருதப்படுகிறார். இவ்வாதீனத் தலைவர்கள், தாங்களாகவே சைவம் தழைக்க நூற்கள் எழுதியும், பக்குவப் பட்ட மாணாக்கர்களுக்கு உபதேசம் செய்தும் தொண்டாற்றிய தோடு, சிவஞானசுவாமிகள், ஆறுமுக நாவலர், அனைய சைவத் துறவிகளை ஊக்குவித்ததன் மூலமாகவும் பெருந்தொண்டாற்றி யுள்ளனர்.

## தருமபுரமடம்

தருமையாதீன குருமரபும் திருக்கயிலாயமரபே என்பர். ஸ்ரீகண்டபரமசிவம் நந்தி தேவருக்கு வழங்கிய ஞானச்செய்தி யினையே, அவரிடமிருந்து சந்தான குரவர்கள் வழி கமலை ஞானப் பிரகாசர் பெற்றார் என்றும் அவர் சீடராகிய குரு ஞானசம்பந்தரே, பதினாறும் நூற்றாண்டின் இறுதியில் தருமபுரமடத்தைத் தோற்று வித்தார் என்றும் கூறுவர். இவர் பரம்பரையில் ஞான தீக்கை பெற்றவர்களே ஆதீனத் தலைவர்களாகத் தொடர்ந்து வருகிறார்கள்.

மெய்கண்ட சாத்திரத்தை ஒட்டி இம்மடம் பலநூற்களைப் படைத்துள்ளதோடு, திருக்கோவில்கள் பலவற்றைத் திறம்பட நிர்வகித்து வருகிறது. பிற்காலத்துச் சைவப் புலவர்களில் சிறந்த வராக விளங்கும் குமரகுருபரர் இவ்வாதீனத் தலைவர்களில் நான்காமவரான மாசிலாமணிதேசிகர்பால் பயின்றவரே.

## திருப்பனந்தாள் மடம்

இதனைக் காசி மடம் என்பர். குமரகுருபரரால், காசியில் தோற்றுவிக்கப்பெற்ற சைவ மடம் ஒன்றன் கிளையாகத் தோற்று விக்கப்பெற்றதே, இம்மடம் என்பர். குமரகுருபரரின் ஞான பரம் பரையில் வந்த, தில்லைநாயக சுவாமிகளே இதனைத் தோற்று வித்தார் என்றும், இது தோன்றிய பின், இம்மடம் தலைமை மட மாகவும் காசியிலுள்ள மடம் கிளை மடமாகவும் செயல் பட்டுவருவ தாகக் கூறுவர்.

இம்மடம் தமிழ்க் கல்விக்கும் சைவக் கல்விக்கும் அறக்கட்டளை நிறுவி, பரிசு வழங்கிவருதலைச் சிறப்பாகக் குறிப்பிடவேண்டும்.

பொதுவாகச் சைவ மடங்கள், மாநாடுகள், நூல் வெளியீடு, கல்வி நிலையங்கள், மறுவாழ்வு நிலையங்கள் ஆகியவற்றில் கருத்தைச் செலுத்தி வருகின்றன எனலாம். மக்களிடையே 'சைவ வாழ்க்கை—சிவ சம்பந்தத்தோடு கூடிய தெய்வீக வாழ்க்கை—மலர மேலும் பல தொண்டுகள் செய்ய வேண்டிய அமைப்புக்கள் இம்மடங்கள்.

# 7. பொதுவான வழிபாடு

தீட்சை பெற்று மேற்கொள்ளத்தக்க, சிவபூசையோடு, இந்துக்கள் பலரும் கூறும் தனி வழிபாடுகளும் சைவ உலகில் கூறப்படுவனவே.

1. வேதம் ஓதுதல் என்பது, குறிப்பாகத் திருவுருத்திரம் ஓதுதல், திருவருளுக்கு ஆளாக்கி ஒருவனை உய்யச் செய்யும் என்பர். பசுபதி நாயனார் திருவுருத்திரம் ஓதி, பேறு பெற்றவரே. மிருத்தியுஞ்சய மந்திரம், சிவ காயத்திரி போன்றவற்றை ஓதுதலையும் சிவ வழிபாடென்றே கூற வேண்டும்.

2. ஆகமப் பயிற்சியும், தீக்கை பெற்று மேற்கொள்ளத் தக்க தாகக் கூறும் போது ஒரு வழிபாடாக சாதனையாகக் கூறமுடிந் தாலும் தோத்திரங்களாகவன்றிக் கிரியை விளக்கங்களாகவே விருப்பதால், ஆகமம் ஓதுதல் என்ற மரபில்லை.

3. திருமுறை ஓதுதல்: திருமுறை ஓதுதலும் வேதம் ஓதுதல் போன்று சிவவழிபாடே; இங்கு இறைவனைத் தோத்திரம் செய்வது பற்றி நம் சமயக் குரவர்கள் கூறுவதனைச் சிறிது விளக்குவது நலம். அவர்கள் தோத்திரம் பாடுதலைத் தவ நெறியாகவே விளக்குவர்.

## தவநெறி

சாத்திரங்கள் கூறும் தவ வேள்விக்கு வேறாகத் தவ நெறி என்ற ஒன்று நம் சமயக் குரவர்களால் கூறப்படுகிறது. திருக் கோவில் சென்று பணிதலும், இறைவன் திருப்புகழைப் பாடு தலுமே தவநெறியாகக் கூறப்படுகிறது.

'சீர்கெழு சிறப்போவாச் செய்தவ—நெறி வேண்டில்
ஏர்கெழு மடநெஞ்சே இரண்டுற மனம் வையேல்
கார்கெழு நறுங்கொன்றைக் கடவுளதிடம் வகையால்
பார்கெழு புகழ் ஓவாப் பருப்பதம் பரவுதுமே. —1276

தவநெறி செல்லவேண்டில், ஐயத்தை அகற்றிப் பருப்பதத்தைப் பரவவேண்டும் என்கிறார் திருஞானசம்பந்தர். மேலும் எவ்வாறு பரவுவது என்னும் வினாவிற்கும் விடை கூறுவார் போல், 'என் பாடல்களையே பாடிப் பரவுங்கள், அது உங்களுக்குத் தவ நெறியாக அமையும்' என்கிறார்.

'இன்னிசையால் இவைபத்தும் இசையுங்கால் ஈசனடி ஏத்துவார்கள்
தன்னிசையோடு அமருலகில் தவநெறி சென்றெய்துவார் தாழாதன்றே' —1404
'நங்கள்தம் வினைகெட மொழியவல்ல ஞானசம்பந்தன் தமிழ்மாலை
தங்கிய மனத்தினால் தொழுதெழுவார் தமர்நெறி உலகுக்கோர் தவநெறியே' —2680

பண்ணிய அருந்ததமிழ் பத்தும் வல்லார்
'நடலையவை யின்றிப் போய் நண்ணுவார் சிவனுலகம்
இடராயின இன்றித்தாம் எய்துவர் தவநெறியே' —2833

என்பன சம்பந்தர் தேவாரம்.

இக்கருத்தினைச் சுந்தரரும் பாடுவர்.

'செய்யார் கமலமலர் நாவலூர் மன்னன்
கையால் தொழுதேத்தப்படும் துறையூர்மேல்
பொய்யாத் தமிழ் ஊரன் உரைத்தனவல்லார்
மெய்யே பெறுவார்கள் தவநெறிதானே' —7357

இவ்வாறு திருக்கோவில் சென்று பரவும் தவநெறியினை, நம் சமயக் குரவர்கள் இறைவனிடம் வேண்டி நிற்பதையும் காண்கிறோம்.

'நினையே அடியார்தொழ நெடுமதிற் புகலிந்நகர்
தனையே இட மேவினைத் தவநெறி அருள் எமக்கே'

என்பர் சம்பந்தர்.

'தலைவா உனைவேண்டிக்கொள்வேன் தவநெறியே'

என்பர் சுந்தரர்.

சாம்பரகலத்தணிந்தாய் போற்றி தவநெறிகள் சாதித்து நின்றாய் போற்றி

என்ற அப்பர் பாடலிலும், இக்குறலைக் கேட்கிறோம். சாத்திர வழிபாட்டுக்கும் வேறாக, உடலை வருத்தும் தவவேள்விக்கும் வேறாக, இங்குத் தவ நெறி கூறப்படுகிறது. இத்தவநெறியினைப் 'பாடல் நெறி' என்றும் கூறுவர்.

## பாடல் நெறி

திருக்கோவில் சென்று இறைவன் புகழைப் பாடுவது, புண்ணியம்; புண்ணியத்தின் பயன் என்பர்.

'என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே இருங்
கடல்வையத்து
முன்ன நீபுரிநல்வினைப் பயனிடை முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ் திருவலஞ்சுழி வாணனை வாயாரப்
பன்னி ஆதரித்து ஏத்தியும் பாடியும் வழிபடுமதனாலே. —2616

'பாடல் நெறி' என்னும் போது, இங்கு இறைவனை நாதப்பிரமமாகக் கண்டு, இசை வல்லுநர்கள் மேற்கொள்ளும் நெறி என்பது பொருளன்று. நமக்குத் தெரிந்த வகையில் பாடினால் போதும்; இறைவன் அதனைக் கேட்டு மகிழ்வான்' என்பர்.

'கோழை மிடறாக கவிகோளுமிலவாக இசை கூடும்வகையால்
ஏழையடியார் அவர்கள் யாவைசொனசொல் மகிழும்
ஈசனிடமாம்' —3559

என்பதும் சம்பந்தர் வாக்கு. நாம் புதிதாகப் பாட வேண்டுவதுமில்லை. ஞானசம்பந்தரே, 'தம்பதிகங்களைப் பாடி உய்யுங்கள்; அப்பதிகங்களைப் பாடுவதே, உங்களுக்குத் 'தவநெறியாக அமையும்' என்றதை முன்னர்ப் பார்த்தோம்.

சம்பந்தர் பாடல்கள்—பதிகங்கள்—சைவர்களுக்கு ஒரு நெறியாகவுள்ளது எனக்கொண்டு, பதிகப் பெருவழிகாட்டிய அருளாளராக நம்பியாண்டார் நம்பியும் அப்பெருமானைக் குறிப்பிடுவர்.

'பதியப் பெருவழிகாட்டப்பருப்பதக் கோன் பயந்த
மதியத்திருநுதல் பங்கன் அருள்பெற வைத்த எங்கள்
நிதி!'

என்பது நம்பி வாக்கு.

திருஞானசம்பந்தர், அப்பர் சுவாமிகள் பாடிய பாடல்களைப் பாடினால் போதும்; இறைவன் கேட்டுகந்து அருள்செய்வான் என்பர் சுந்தரர்.

நல்லிசை ஞான சம்பந்தனும் நாவினுக்கரசரும்
பாடிய நற்றமிழ் மாலை

சொல்லியவே சொல்லி ஏத்துகப்பானைத்
தொண்டனேன் அறியாமையறிந்து
கல்லியல் மனத்தைக் கசிவித்துக் கழலடி காட்டி
என் களைகளை யறுக்கும்
வல்லியல் வானவர் வணங்க நின்றானை
வலிவலம் தன்னில் வந்து கண்டேனே. —7905

அடியவர்கள், மனமுருகிப்பாடுவதை ஒருவழிபாடாக இறைவன் ஏற்று மகிழ்கிறான் என்பது, சுந்தரர் தனிவாழ்க்கையும் உணர்த்தும் ஒன்று. சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் தடுத்தாட் கொண்ட இறைவன், தன்னைப்பாடுவதே தனக்குச் செய்யும் தொண்டு எனச் சுந்தரரிடம் கூறியதாகப் பெரிய புராணம் பேசுகிறது.

'மற்று நீ வன்மை பேசி வன்றொண்டன் என்னும் நாமம்
பெற்றனை, நமக்கும் அன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க
அர்ச்சனை பாட்டே யாகும் ஆதலான் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடுகென்றார் தூமறை பாடும் வாயார்.

என்பர் சேக்கிழார் சுவாமிகள். இறைவன் வேதங்களைப் பாடியவா றிருப்பினும் அவன் உவப்பது 'அருளாளர் பாடிய தமிழ்ப்பாடல் களே' என்னும் குரலும் கேட்கிறது.

கயிலை சென்று கண்ணுதலைத்தரிசித்த காரைக்காலம்மை யார் பெருமானிடம் கேட்ட வரம், இறைவனைப் பாடிக் கொண்டிருப்பதே ஓரின்பம் என்பதைக் குறிப்பிடுகிறது.

' இறவாத இன்ப அன்புவேண்டிப் பின் வேண்டுகின்றார்
பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும்
மறவாமை வேண்டும், இன்னும் வேண்டும், நான் மகிழ்ந்து பாடி
அறவா நீ ஆடும் போதுன் அடியின் கீழிருக்க' —1781

என்றார்.

இறைவன் அடிக்கீழிருந்தவாறு அவனைப்பாடுவது, இறவாத இன்பம்; பிறவாமையால் வரும் இன்பம் போன்றது என்ற கருத்தினை இப்பாடல் புலப்படுத்தக் காண்கிறோம்.

இப்பாடல் நெறி, இம்மை நலனையும் மறுமை நலனையும் நமக்குத் தரவல்லது என்பர்,

‘ பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவாய்’

என இம்மை நலனைப் பாடிய சுந்தரர்’

பாட்டும் பாடிப் பரவித் திரிவார்
ஈட்டும் வினைகள் தீர்ப்பார் கோவில்
காட்டும் கலமும் திமிலும் கரைக்கே
ஓட்டும் திரைவாய் ஒன்றியூரே’ —814

என வினையை அகற்றி, மறுமை நலனையும் தரவல்லது தோத்திரம் எனப்பாடுகிறார். சம்பந்தர் வீட்டுப் பேற்றையும் அதற்குக் காரணமாகவுள்ள ஞானத்தையும், பெருமானுடைய பதிகங்களை ஓதுவதே தரவல்லது என்றும் கூறுவர்.

‘ வீடும் ஞானமும் வேண்டுதிரேல் விரதங்களால்
வாடி ஞானமென்னுவது, எந்தை வலஞ்சுழி
நாடி, ஞானசம்பந்தன் செந்தமிழ்கொண்டு, இசை
பாடு ஞானம் வல்லார் அடிசேர்வது ஞானமே.’ —1490

‘விரதங்களால் உடலைவாட்டி ஞானத்தைப் பெறவேண்டுவதில்லை; ஞானசம்பந்தன் பாடியுள்ள தமிழ்ப்பாடல்களை, ஞானப் பாடல்களை, இசைப்பாடல்களைப் பாடினால், அதுவே உங்களுக்கு ஞானத்தைத் தந்து இறைவனடி சேர்ப்பிக்கும்’ என்கிறார்.

‘சொன்மாலை ஓதும் அடியார்கள் வானில் அரசாள்வர் ஆணை
நமதே’ —2398

எனவும் பாடுவர்.

இறைவனைப் பாடுவது எவ்வாறு சிவானந்தத்திளைப்புக்கு ஆளாக்கும் என்பதனை மணிவாசகர் பாடல் ஒன்று பேசுகிறது.

‘ பாடவேண்டும் நான் போற்றி நின்னையே
பாடி நைந்துருகி நெக்குநெக்கு
ஆடவேண்டும் நான் போற்றி, அம்பலத்து
ஆடும் நின் கழற்போது நாயினேன்
கூடவேண்டும் நான் போற்றி, இப்புழுக்
கூடு நீக்கு எனைப்போற்றி, பொய்யெலாம்
வீடவேண்டும் நான்போற்றி வீடுதந்து.’
அருளுபோற்றி நின்மெய்யார் மெய்யனே. —திருச்சதகம்100

மாணிக்கவாசகர் சிவானந்தத்தில் எவ்வாறு திளைக்க விரும்புகிறார் என்பதை இப்பாடல் நன்குணர்த்துகிறது. பாடி, ஆடி, திருவடியைக்கூடிப் பேரின்பத்தில் திளைத்தலைக் கூறும்போது,

பாடல் இறுதி இலட்சியத்துக்கு இட்டுச் செல்வதையே குறிப்பிடு கிறார்.

'ஒருவர் இறுதி இலட்சியத்தை அடைய சிவபிரான் அருள் இன்றியமையாதது, என்பர். இறைவனருளையும் இப்பாடலே தூண்டவல்லது என்பர். 'அளப்பிலா கீதம் சொன்னார்க்கு அடிகள் தாம் அருளுமாறே' என்பது அப்பர்வாக்கு. இதனாலேயே ஞானசம்பந்தரும் இறைவனைப் 'பாடல்நெறி நின்றான்' என்பர். 'கீதக்கண்ணாடியில் கேட்டு நின்றானன்றே' என்பர் திருமூலர்.

'கீதத்தை மிகப்பாடும் அடியார்கள் குடியாக' வாழும் இறைவன் கீதவடிவாகவும் விளங்குகின்றான் என்றும் கூறுவர்.

'பண்ணும் பதமேழும் பல ஓசைத்தமிழவையும்
உண்ணின்றதோர் சுவையும் உறுதாளத்தொலிபலவும்
மண்ணும் புனலுயிரும் வருகாற்றும் சுடர்மூன்றும்
விண்ணும் முழுதானானிடம் வீழிம்மிழலையே" —111

என்றும் சம்பந்தரே பாடுவர்.

' பண்ணுநீராய் பாட்டுமானீர் பத்தர்சித்தம் பரவிக்கொண்டீர், —7279

என்பது சுந்தரர் பாடல்.

' பூம்படிமக்கலம் பொற்படிமக்கலம் என்றிவற்றால்
ஆம்படிமக்கலமாகிலும் ஆரூர் இனிதமர்ந்தார்
தாம்படிமக்கலம் வேண்டுவரேல் தமிழ்மாலைகளால்
நாம்படிமக்கலஞ் செய்து தொழுது உய் மடநெஞ்சமே" —5146

என்னும் அப்பர் சுவாமிகள் பாடலும் இங்குக் கருதத்தக்கது.

## செபம்

இவ்வாறு தோத்திரங்கள் பாடுவதோடு, நாம செபத்தையும் சைவர்கள் வற்புறுத்தவே செய்வர். 'நாதன் நாமம் நமச்சிவா யவே' எனக் கூறுவதால், மந்திரமாகவும் கருதப்படும் இம்மந் திரத்தைச் செபத்திற்குரிய நாமமாகக் கொள்வர். 'பூசையில்" ஒருகூறு ஜப நிவேதனம்; திருக்கோவில் வழிபாட்டிலும் ஒருவர் ஜபம் செய்தவாறு சந்நிதியில் இருப்பதைக் கூறுவர். இல்லங்களி லும் தனியே, தூய இடமொன்றில் அமர்ந்து ஜபம்செய்ய வேண்டும்

என்பர். பஞ்சாட்சரத்தையே ஜபம் செய்வதற்குரிய நாமமாகக் கொள்ள வேண்டும் என்ருலும்,முருகப் பெருமானையோ, விநாயகப் பெருமானையோ, வழிபடு கடவுளாகக் கொள்ளும்போது, பிற திருநாமங்களைச் செபித்தலுமுண்டு.

## தியானம்

தியானம் என்பது அட்டாங்க யோக உறுப்பாகக் கொள்ளப் படினும், யோகநெறி நில்லாதாரும் 'தியானம் செய்ய வேண்டும் என்பர். இறைவன் திருவுருவைத் தியானிப்பதோடு, மந்திரத் தியானம் ஒன்றையும் குறிப்பிடக்காண்கிருேம். திருவுருவைத் தியானிக்கும் போது, ஒருவர் தம் இட்டதெய்வத்தைத் தியானிப் பதே முறை; குருவின் திருவுருவைத் தியானித்தலும் சைவத் திற்கு உடன் பாடென்றே தோன்றுகிறது.

'தெளிவு குரு உரு சிந்தித்தல் தானே' என்பது திருமந்திரம்.

மந்திரத் தியானமாகக் கூறும் போது பிரணவத் தியானம்செய் வதும் சைவத்திற்குடன் பாடென்றே கூறவேண்டும். இங்குப் பஞ் சாட்சரத்தைப் பற்றிச் சைவர்கள் கூறுவதைச் சிறிது விரிவாகச் சிந்தித்தல் நலம்.

## திருவைந்தெழுத்து

சைவர்கள் அளவில், ஆன்மார்த்த பூசையாயினும் பரார்த்த பூசையாயினும் அக வழிபாடாயினும் புற வழிபாடாயினும் 'திருவைந்தெழுத்தே' அடியவர்களுக்குத் துணையாகவிருந்து அவர்களைச் சிவன்பால் செலுத்தவல்லது என்பர்.

திருவைந்தெழுத்து அகத்தும் புறத்தும் இறைவனைக் காட்ட வல்லது என்பதனை,

'விண்ணிஞர் மதி சூடிய வேந்தனை
எண்ணி நாமங்கள் ஓதி எழுத்தஞ்சும்
கண்ணிஞர் கழல் காண்பிடம் ஏதெனில்
புண்ணியன் புகலூரும் என்நெஞ்சுமே —5689

என்பர் அப்பர் சுவாமிகள்.

சிவநாமங்களை ஓதி சிவமந்திரமாகிய திருவைந்தெழுத்தையும் செபித்தால், அல்லது தியானித்தால், புண்ணியனைத் திருப்பு

கலூரிலும் தரிசிக்கலாம்; நெஞ்சினுள்ளும் தரிசிக்கலாம் என்பர். எனவே சைவர்களின் எல்லாவகையான வழிபாட்டிலும் திருவைந்தெழுத்து, சிறந்து நிற்பதில்வியப்பில்லை.

அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டானை
அஞ்செழுத்தால் அர்ச்சித்து இதயத்தில் அஞ்செழுத்தால்
குண்டலியிற்செய் தோமம் கோதண்டம் சானிக்கில்
அண்டனும் சேடனும் அங்கு —சிவஞானபோதம் 9-3-60

வாசனுமலம் நீங்க ஸ்ரீ பஞ்சாக்கரத்தை உச்சரித்தற்கு இப்பாட்டு மேற்கோளாகக் காட்டப்படினும், 'உள்ளத்தை அரசனுடமையாக்கும் ஞான வழிபாடாயினும், அருச்சிக்கும் புறப்பூசையாயினும், குண்டலியை எழுப்பும் யோக வழிபாடாயினும் 'அஞ்செழுத்துத் துணையாக நிகழ்வனவே' என்னும் ஒலியும் இப்பாட்டில் கேட்கிறது.

திருவைந்தெழுத்து எல்லோரும் செபித்தற்குரியது என்ற கருத்தையும் பெரியோர்கள் கூறுவர்.

' சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கலால்
தலமிலன் நாடொறும் நல்குவானலன்
குலமிலாராகிலும் குலத்துக்கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சிவாயவே' —4267

என்பது அப்பர் தேவாரம். சமுதாய அளவில் தாழ்த்தப்பட்டுள்ளோம் என்ற சிந்தனை வேண்டா. திருவைந்தெழுத்தை ஓதுதல் 'சமுதாய அளவிலும் மேம்பாட்டைத்தரவல்லது" என்பது கருத்து

" ஏதுமொன்றும் அறிவிலராயினும்
ஓதி அஞ்செழுத்தும்முணர்வார்கட்குப்
பேதமின்றி யவரவருள்ளத்தே
மாதும் தாமும் மகிழ்வர்மாற்பேறரே —5830

என்பது அப்பர்பாடல்.

'கல்வி கற்கவில்லையே எனவும் கவலவேண்டா; அஞ்செழுத்தை ஓதுங்கள்; அதன்வழி அதன் உட்பொருளாக விளங்கும் சிவனை உணருங்கள். உங்கள் உள்ளத்தே உமையொரு பாகன் மகிழ்ந்துறைவான்' என்கிறார்.

' கல்விக் குறைபாடன்றி ஒழுக்கக் குறைபாடுகள் உள்ளவர்களும் திருவைந்தெழுத்தை ஓதினால் நல்லொழுக்கத்தில் சிறந்த பல நலன்களையும் பெறுவர்' என்பர்.

" கொல்வாரேனும் குணம்பல நன்மைகள்
இல்லாரேனும் இயம்புவராய்விடின்
எல்லாத்தீங்கையும் நீங்குவர் என்பரால்
நல்லார் நாமம் நமச்சிவாயவே. —3324

என்பது சம்பந்தர் தேவாரம்.

மேலும் ஒரு படி சென்று,

நல்லவர் தீயவரெனாது நச்சினர்
செல்லல்கெட சிவமுத்திகாட்டுவ
கொல்ல நமன்தமர் கொண்டு போமிடத்து
அல்லல்கெடுப்பன அஞ்செழுத்துமே —3034

எனவும் கூறுவர்.

இம்மை நலனுக்கும் மறுமை நலனுக்கும் திருவைந்தெழுத்துத் துணை யாவதையும் இப்பாடல்கள் உணர்த்தக் காண்கிறோம். 'செல்லல் கெட சிவ முத்திகாட்டுவ' எனக் கூறியதோடு,

'இருந்து சொல்லுவன் கேண்மின்கள் ஏழைகாள்
அருந்தவம்தரும் அஞ்செழுத்து ஓதினால்
பொருந்து நோய்பிணி போகத்துரப்பதோர்
மருந்துமாகுவர் மன்னுமாற் பேறரே.' —5833

என்று உடல்நோய்க்கும் மருந்தாக இறைவனைத் தூண்டவல்லது இவ்வைந்தெழுத்து என்றும் அப்பர் சுவாமிகள் கூறக் கேட்கிறோம். இருமைக்கும் நலம் பயப்பது திருவைந்தெழுத்து என்பதனைத் திருநாவுக்கரசர் வரலாற்றோடு இணைத்துச் சேக்கிழார் சுவாமிகள் கூறுவது இங்குக் கருதத்தக்கது. 'கல்லோடு சேர்த்துக் கடலில் எறிந்துவிட்ட நிலையிலும்', 'நற்றுணையாவது நமச்சிவாயவே' எனத் திருவைந்தெழுத்தைத் துணையாகக் கொண்டு கரைசேர்ந்தார் என அவர் வரலாறு கூறும். இதனைச் சேக்கிழார் சுவாமிகள்,

'இருவினைப் பாசமுமலக்கலார்த்தலின்
வருபவக் கடலின் வீழ் மாக்கள் ஏறிட
அருளுமெய்யஞ்செழுத்து அரசை இக்கடல்
ஒருகன்மேலேற்றிடல் உரைக்க வேண்டுமோ.'
—பெரியபுராணம் 1399

என்பர்.

இவ்வாறு இருமைக்கும் நலம்பயக்குமாயினும், உலகியல் நலனுக்கு 'நமச்சிவாயத்தை' ஓதுக; சிவானந்தத்துக்கு 'சிவாய நம' என்பதை ஓதுக எனப் பாகுபடுத்திக் கூறலாயினர். இப்பாகு பாட்டில், பஞ்சாக்கரத்தைக் குருமூலமாகக் கேட்டு ஓதவேண்டும்; ஓதுதல் நலம் என்றும் கூறினர்.

'குருவழியாய குணங்களினின்று
கருவழியாய கணக்கை யறுக்க
வரும்வழிமாள மறுக்கவல்லார்கட்கு
அருள்வழிகாட்டுவது அஞ்செழுத்தாமே' —2705

என்பது திருமந்திரம்.

'எந்தை எம்பிரானருளை இவ்வெழுத்தெனப்பிரித்துத்
தந்த மந்திரம் ஐந்தெழுத்தாமெனத் தகுமால்
அந்த மந்திரத் தளவைச் சற்குருவறிந்து
சிந்தை தேருறத் தெளிப்பதங்கதனிலை தெரிக்கில்'

என்பது உபதேசகாண்டம்.

குருவழியாக உபதேசம் பெறும் சிந்தனையும், 'தூலபஞ்சாக் கரம், சூக்குமபஞ்சாக்கரம், அதிசூக்குமபஞ்சாக்கரம்' என்னும் பாகுபாடும் உண்டு. இச்சிந்தனை, சாதகன் ஒருவன், படிப்படி யாகச் சிவானந்தத்தை நோக்கி உள்ளொடுங்கிச் செல்லும்போது, அவன் அனுபவத்தை எதிரொலிக்கும் வகையில் திருவைந் தெழுத்தை விளக்குவதே.

'பழுத்தன ஐந்தும் பழமறையுள்ளே
விழித்தங்குறங்கும் வினையறிவாரில்லை
எழுத்தறிவோமென்றுரைப்பர்கள் ஏதர்
எழுத்தை அழுத்தும் எழுத்தறியாரே' —2721

என்ற திருமந்திரம் இங்குக் குறிப்பிடத்தக்கது.

இனி, சாத்திரங்கள் இதனை எவ்வாறு விளக்குகின்றன எனப் பார்ப்போம்.

'சிவன் அருள் ஆவி திரோதமலம் ஐந்தும்
அவன் எழுத்தஞ்சின் அடைவாம் —இவனின்று
நம்முதலா வோதி லருள் நாடாது நாடுமருள்
சிம் முதலா வோது நீசென்று.' —உண்மைவிளக்கம்—41

| சி | வா | ய | ந | ம |
|---|---|---|---|---|
| சிவன் | அருள் | ஆவி | திரோதம் | மலம் |

என 'சிவாயநம' என்பதில் ஒவ்வொர் எழுத்தும் ஓர் உண்மையினைச்சுட்டி நிற்பதாகக் கூறுவர். சிவாய நம என்பதற்கு வேருக, 'நம சிவாய' என்றும் அஞ்செழுத்தைக் கூறுவதுண்டு; 'சிவாய நம' என்று ஓதுதலே அருள்வாழ்வுக்கு, சிவனேடு கலந்து வாழும் பெருவாழ்வுக்குரியதென்றும் 'நம சிவாய' என ஓதுதல், உலகியல் நலன் கருதி வாழ்வோருக்குரியது என்றும், எனவே அருள் வாழ்வை இலட்சியமாகக் கொண்ட நீ, 'சிவாய நம' என் ஓதவேண்டும் என்றும் இப்பாட்டில் கூறுகிருர். இதனுலேயே, 'நமசிவாய' என்பது 'தூலபஞ்சாக்கரம்' என்றும், சிவாய நம என்பது சூக்கும பஞ்சாக்கரம் என்றும் விளக்குவர்.

## பிரணவம்

'ஓம்' என ஒலிக்கப்பெறும் 'பிரணவம்' குறித்தும் சிறிது விளக்குதல் நலம். இதனை இந்துக்கள் அனைவரும் ஏற்று ஒலிப்பதுண்டு. சைவமரபும் இதனை ஏற்றுத் தன் கோட்பாட்டிற்கேற்ப விளக்கம் கூறும். சிவபுராணங்கள் இறைவன் ஓங்கார ரூபியாக நின்றே இவ்வுலகத்தைப் படைத்தான் எனக் கூறுவதோடு, ஓங்கார செபமே சிவப்பேற்றுக்குத் துணை செய்வது எனவும் கூறும். சைவசமயக் குரவர்களும், 'உய்ய என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா' (மணிவாசகர்) எனவும்,

'ஓங்காரத்துட் பொருளாய் நின்ருன் கண்டாய்' —அப்பர்

எனவும்,

'உலகெல்லாம் ஓங்காரத்துருவாகி நின்ருனை' —சுந்தரர்

எனவும் கூறுவர்.

சித்தாந்த நூற்களும் ஓங்காரத்தைப் பஞ்சாக்கரமாக விளக்க முயலும்

இறை, சத்தி, பாசம், எழில் மாயை ஆவி
உறநிற்கும் ஓங்காரத்துள் —82

என்பது திருவருட்பயன்.

இங்கு 'ஓம்' என்பதனை, ஐந்து கூறுகளாகப் பிரித்து; அ, உ, ம், நாதம், விந்து எனக் கொண்டு சூக்கும பஞ்சாக்கரமாக விளக்கும் முயற்சியுமுண்டு, இவ்வைந்து கூறுகளையும் 'சித்தாந்தக் கோட்பாட்டிற்கிசைய, சிவம், சக்தி, ஆணவம், திரோதானம், உயிர் எனக் குறிப்பிடுகிருர்.

பிரணவ செபம், பிரணவத் தியானம் என்பனவும் சைவ நூற்களில் பேசப்படுவனவே.

## சைவ விரதங்கள்

என்றும் போல் வாழாது ஒரு குறிப்பிட்ட நாளில் கட்டுப்பாட்டுடன் வாழ்வது விரதம் என்பர். சைவர்கள் விரதங்களின் போதும், சிறப்பாகச் சிவவழிபாடு மேற்கொள்ளுதலையே, சிவபூசை செய்தலையே பெரிதும் வற்புறுத்துவர். ஒரு குறிப்பிட்ட கிழமை, ஒரு குறிப்பிட்ட நாள் (நட்சத்திரம்), ஒரு குறிப்பிட்ட திதி, இவ்வாறே இந்துக்களின் விரதநாட்கள் அமையும். சிவனடியார்களுக்குத் திங்கட்கிழமை (சோமவாரம்) ஆதிரைநாள், சதுர்தசி திதி—இவற்றைச் சிறப்பான விரத காலமாகக் கொள்ளலாம்.

## சோமவாரம் (திங்கட்கிழமை)

கிழமைகளில் சிறந்தது 'சோமவாரம் அல்லது திங்கட்கிழமை' என்பர். ஒவ்வொரு திங்கட்கிழமையும் விரதம் இருத்தற்குரிய நாளாகக் கருதினும், கார்த்திகை மாதத்து முதல் திங்கட்கிழமை தோறும் பட்டினியிருந்து பிரதோஷ காலத்தில் (சூரியன் மறைவதற்கு முன்னும் பின்னுமாகவுள்ள 3½ நாழிகை) சிவபிரானுக்குப் பூசை செய்து மேற்கொள்ளும் விரதம் சிறப்பானது என்பர்.

சிவபிரானுக்குச் சோமசுந்தரன் என்ற பெயருண்டு. இறைவன் சடையில் இருக்கின்ற பேற்றையும் சந்திரன் நோன்பிருந்தே பெற்றான் என்பர்.

## ஆதிரைநோன்பு

திருவாதிரை நாளைச் சிவனுக்குரிய நாளாகக் கூறுவர். 'ஆதிரை நாளு கந்தானும் ஆரூர் அமர்ந்த அம்மானே' என்பது தேவாரம். திருவாதிரையன்று நோன்பிருத்தலைப் பொதுவாகக் கூறினும் மார்கழி மாதத் திருவாதிரையை மிகச் சிறப்பாகக் கருதுவர். திருக்கோவில்களில் அன்று சிறப்பான பூசை நடைபெறுவதுண்டு. 'ஆருத்ரா தரிசனம்' என்ற வகையில், சைவக் கோவில்களுக்கெல்லாம் தாய்க் கோவிலாக விளங்கும் சிதம்பரத்தில், திருவாதிரை, திருவிழா நாளாகக் கொண்டாடப்படுகிறது. அன்று 'அம்பலவாணரைத் தரிசிப்பது' பெரும் புண்ணியம் என்பது சைவர்கள் நம்பிக்கை. அன்று விரதமிருப்பதோடு, திருக்கோவில் தரிசனமும் முக்கியமானது என்பர்.

சிதம்பரம் சென்று இவ்விரதம் மேற்கொள்வோர் பெரும் பயன் அடைவர் என்பர்.

'செவ்வழிச் சின்மயச் சிதம்பரத்தலத்து
இவ்வழி இந்த நோன்பு இயற்றுவார்அவர்

வெவ்வழித் தன்மைய வினையினீங்கி மற்
றுய்வழி அருங்கதி ஒடுங்குவார்களே.
—சிவவிரதமான்மியம் 27

'மார்கழி திருவாதிரை மஞ்சனத்து
ஆருயிர்க்கெலாம் அன்பின் நடம்புரிந்து
ஓர்வரும் கதிநல்கி உமை இடக்
கார்மிடற்றன் கருணை வழங்குமால்
—சிவவிரதமான்மியம் 37

## சிவராத்திரி

திதிகளுள் சதுர்தசி சிறந்தது என்பர். ஒவ்வொரு மாதமும் வரும் இருபத்து நான்கு சதுர்தசிகளையும் நித்த சிவராத்திரி என்பர். அமரபக்ஷத்தில் வரும் பன்னிரண்டு சதுர்தசிகளையும் மாத சிவராத்திரி என்பர். தைமாதம் அமரபக்ஷத்தில் வரும் சதுர்தசியினைப் பக்ஷ சிவராத்திரி என்பர். சோமவாரத்தின் இரவில் அமாவாசைவரின் அந்நாளை யோக சிவராத்திரி என்பர் இவ்வாறெல்லாம் கூறினும் மாசிமாதம் தேய்பிறையின்போது வரும் சதுர்தசியினையே 'மகாசிவராத்திரி' என்பர்.

சிவராத்திரி நாளைப் பலவாக விளக்குவர்.

1. சிவபிரான் லிங்கத்தில் தோன்றியருளியநாள்.
2. பிரமவிஷ்ணுக்களிடையே சோதிமயமாகத் தாணு வடிவில் தோன்றியநாள்.
3. புனர் உற்பவத்திற்காகத் தேவி, பூசை செய்த நாள்.

என்பர். இவ்வாறு விளக்கினும் சிவபூசையினை ஏற்றுக்கொள் வதற்காக, 'சிவபிரான் அமைந்து நின்ற நாள்' என்றே கூற வேண்டும். இக்காரணம் பற்றியே அன்று சிவபூசையினை மிகுதி யாக வற்புறுத்துவர். சிவபிரான், சிவராத்திரியன்று, இரவு பதினலு நாழிகைக்கு மேல் ஒரு நாழிகை, லிங்கத்தில் தோன்றி யருளினன் என்பதாலேயே அன்று இரவெல்லாம் கண் விழித் திருந்து பூசை செய்யக் கூறுவர்; சிவத்தியானம் செய்யக் கூறுவர்; சிவ வழிபாடு முக்கியமே தவிர கண்விழித்தல் முக்கியமன்று. 'ஆராயும் வேளையில் சிவராத்திரிபோது துயிலோம் என்ற விரதியரும் அறிதுயில்போலே இருந்து துயில்வார்' என்று தாயுமானரும் மக்கள் உறுதியின்மையைச் சுட்டிக்காட்டுவர். நான்கு யாமங்களிலும் சிவபூசை செய்தலே முக்கியமானது.

## பிரதோஷம்

பொதுவாக, சூரியன் மறைவதற்கு முன்னும் பின்னுமாக வுள்ள மூன்றே முக்கால் நாழிகையினைச் சிவபூசைக்குரிய

பிரதோஷ காலமாகக் குறிப்பிட்டாலும் கிருஷ்ணபக்ஷத்து (தேய் பிறை) திரயோதசியன்றுள்ள மாலைக் காலத்தையே சிறப்பானதாகக் கொள்வர். அன்றுதான் விரதமேற்கொள்வர்.

## அட்டமி

அட்டமி திதியின் போதும் விரதம் இருப்பதுண்டு.

## திருக்கார்த்திகை

கார்த்திகை மாதத்தில் வரும் கார்த்திகை நாளைத் தீபத்திரு விழாவாகச் சைவர்கள் கொண்டாடுவர். கார்த்திகை தீபம் திருவண்ணுமலை நிகழ்ச்சியாகக் கொண்டாடப்படினும், ஒவ்வொரு கோவிலிலும் இது சிறப்பாகக் கொண்டாடப்படும். சைவர்கள் விரதமிருந்தும் இந்நாளைக் கொண்டாடுவர்.

## உமாமகேசுவர விரதம்

கார்த்திகைப் பௌர்ணமியன்று, பூசை செய்து அடியார்களோடிருந்து அமுதுண்ணக் கூறுவர்.

இவற்ருேடு கேதாரநோன்பு, மணவிரதம், பரமன்நோன்பு, சூற்படை நோன்பு என்பனவற்றையும் புராணங்கள் கூறுகின்றன. பைரவருக்குத் தைமாதம் ஞாயிற்றுக்கிழமையினையும், சித்திரை ஐப்பசி மாதங்களில் பரணி நாளையும் விரதநாட்களாகக் கூறுவர். செவ்வாய்க்கிழமையினை வீரபத்திரருக்குரிய விரத நாளாகக் கொள்வதுமுண்டு.

## தேவிக்குரியன

கிழமைகளில் வெள்ளிக்கிழமையினையும், நட்சத்திரத்தில், ஐப்பசி உத்திரத்தையும் திதிகளில் சித்திரை—பௌர்ணமியோடு, நவராத்திரியின் இறுதி நாட்களாகிய நவமி, தசமி—நாட்களையும் கூறுவர்.

## விநாயகருக்குரியன

வெள்ளிக்கிழமை; மார்கழியில்வரும் சட்டி திதியோடு சதுர்த்தியினைச் சிறப்பாகக் கூறுவர். சதுர்த்தியிலும் வளர்பிறையில் வருவதனைச் சிறப்பாகக் கருதுவர். ஆவணியில் வளர்பிறையில் வருவதனையே விநாயகர் சதுர்த்தியாகக் கொண்டாடுவர்.

## முருகனுக்குரியன

வெள்ளிக்கிழமை; கார்த்திகை நட்சத்திரம், சட்டி—திதி. ஐப்பசி மாதம் பிரதமையிலிருந்து ஆறு நாட்கள் நோன்பிருத்தலையே கந்தர் சட்டி விரதம் எனச் சிறப்பாகக் கூறுவர்.

விரதநாளில் உச்சிப்போதில் ஊண், இரவில் ஊண், ஊணின்றி இருத்தல், ஊணின்றியும் உறங்காது மிருத்தல்; சிவ பூசை செய்தல் இவற்றை விதிப்பதோடு புலனடக்கத்தையும் வற்புறுத்துவர். விரதங்கள் இம்மை நலனையும் நோக்கமாக உடையன. விரதப்பயனை,

'வன்மனம்கரைய நின்று வேண்டிய வரங்கள் வேண்ட
நன்மணப்பேறு மக்கட்பேறு நல்வாக்கு கல்வி
பொன்மனக்கினிய போகம் தெவ்வரைப் புறகுகாண்டல்
இம்மையிவரசு மற்றும் எண்ணியாங்கு எய்தும்'

என்று கூறும் திருவிளையாடல் புராணம்.

# 8. சைவ சமயக் குரவர்கள்

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசகர் என்னும் நால்வரையும் சைவ சமயக் குரவர்கள் என்பர். அடியவர்களைச் சிவசொருபமாக வழிபடுதல் சைவத்தின் ஒரு பகுதியே; அடியவர்கள் நினைவுநாட்களையும் 'குருபூசை' என்றே கொண்டாடி வருகின்றனர். ஆயினும், சில அடியவர்களைச், சமுதாயம் செய்த புண்ணியத்தின் விளைவாகத் தோன்றி மக்கள் பாசமகன்று பரனோடு உறவுகொள்ளத் தூண்டியவர்கள் என்ற நிலையில் 'சமயக்குரவர்கள்' எனச் சிறப்பாகக் கூறுகின்றனர். இந்நால்வரும் அவ்வாறு கூறப்பட்டு வருபவர்களே. இந்நால்வரையும் புறச்சமயத் தாக்குதலிலிருந்து சைவத்தைக் காத்தவர்கள் என்றும் கூறலாம். இந்நால்வரும் சிவபிரானால் அருள் பாலிக்கப் பெற்று, நாம் உய்யுமாறு நம்மை வழிநடத்திச் செல்ல இறைவனால் நமக்குத் தரப்பட்டவர்கள் என்பதே சைவர்களின் உறுதி.

## திருஞான சம்பந்தர்

சீகாழியிலே, சிவபாத இருதயருக்கும், பகவதியம்மையாருக்கும் மகவாகத் தோன்றியவர். மூன்று வயதினராகவிருக்கும் போதே தேவியால் ஞானப்பால் ஊட்டப் பெற்றுத் தெய்வப்பாடல்களைப் பாடத் தொடங்கியவர். ஓதாதுணர்ந்த ஞானியாகத் தமிழகமெங்கும் உலாவந்து சைவநெறியைப் பேணியவர். ஒவ்வொரு திருக்கோவிலுக்கும் சென்று தாளமிட்டுப் பதிகம்பாடி மக்களைச் சிவன்பால் ஆற்றுப்படுத்தியவர்.

ஞானப்பால் உண்ட மறுநாள் சீகாழியில் பிரமபுரத்து ஈசனை வணங்கிவிட்டுத் திருக்கோலக்கா என்னும் திருத்தலம் சென்று பாடும்போது திருவைந்தெழுத்துப் பதிக்கப் பெற்ற பொற்றாளம்

ஒன்று இறைவனருளால் இவருக்குக் கிடைக்கிறது. இறைவன் புகழ், திருவைந்தெழுத்தின் ஓசை, நாடெங்கும் பரவுகிறது. சைவத்திற்கெதிராகத் தருக்கி எழுந்த ஆரவாரம் வலியொடுங்கு கிறது. வாய், பெருமானைப் பாடவும், கைகள், தாளமிடவும், பாடிக்கொண்டு சென்ற திருஞானசம்பந்தரோடு திருநீலகண்ட யாழ்ப்பாணர் என்னும் சிவனடியாரும் பாட்டிற்கேற்ப யாழ் வாசித்தவாறு உடன் செல்கிறார். இத்தெய்வீக இசை, தமிழிசை யாகத் தமிழகமெங்கும் பரவுகிறது. ஆளுடையபிள்ளையார், சிவசோதியாக நின்று மக்களின் மன இருளை, அஞ்ஞானத்தை அகற்றி அவர்கள் வாழ்வில் தெய்வீகம் மலரச் செய்கிறார்.

ஞானசம்பந்தரை ஞான அரசாக ஏற்று இவ்வுலகம் உய்ய இறைவன் திருவுளம் பற்றினான் போலும்! தந்தையின் தோள் களில் இருந்தவாறு பாடிச்சென்று சம்பந்தருக்கு, அன்பர்கள் வழியே முத்துச் சிவிகையினையும், வெண் (கொற்றக்) குடையினை யும், முத்துச் சின்னத்தையும் அனுப்புகிறான். அப்பெருமானும் சிவத்தொண்டு மலர, சிவனருளால் கிடைத்ததாகக் கருதி அஞ்செழுத்து ஓதி முத்துச் சிவிகையில் ஏறுகிறார். இந்நிகழ்ச்சி யினைக் கூறும் சேக்கிழார் சுவாமிகள்,

'சோதி முத்தின் சிவிகை சூழ்வந்து பார்
மீது தாழ்ந்து வெண்ணீற்றொளி போற்றிநின்று
ஆதியார் அருளாதலின் அஞ்செழுத்து
ஓதி ஏறினார் உய்ய உலகெலாம்'

எனப் பாடுவர்.

'அருளரசு' நிலைபெற அப்பெருமான் செல்லும் ஊர்களில் எல்லாம், மக்கள் நடைப்பந்தரும் தோரணங்களும் வாழைகளும் நாட்டி நிறை குடம் வைத்து வரவேற்கின்றனர்.

அந்நாளில் வாழ்ந்த அடியவர்கள் பலரும் சம்பந்தப் பெருமானைக் கண்டு அளவளாவுதலில் மகிழ்ச்சி கொள்கின்றனர். தொண்டர்கள் பலரும் அப்பெருமான் தலைமையினை ஏற்றுத் தம் சிவப் பணியினைச் செய்து வருகின்றனர். அப்பர் பெருமானும் சம்பந்தர் சிவிகையினைத் தாங்க முந்துகிறார்.

சிவ ஒளியைப் பரப்பி நிற்கும் சிவ சூரியன் தோன்றி விட்டான்; இனி இருள் ஒழிந்து ஒளி பரவ, மக்கள் நல்வாழ்வு பெறுவார்கள் என்ற நம்பிக்கை மக்களிடையே பரவுகிறது. சைவம் தழைக்கப் பாண்டிநாடு எழுந்தருளவேண்டும் என்று பாண்டிமா

தேவியார் மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் குலச்சிறையாரும் வேண்டிய வேண்டுதலை ஏற்றுக் கொண்டு பாண்டிநாடு செல்கிருர்.

இங்கு, ஒளியை இருள்விழுங்க முயலும் வேடிக்கை நிகழ்ச்சி ஒன்று நிகழ்கிறது. பாண்டி மன்னனைத் தன் கையில் வைத்துக் கொண்டு சைவத்திற்குத் தீங்கிழைத்த அமண் தலைவர்கள் சம்பந்தரின் பாண்டி நாட்டு வருகையால் தம் எண்ணம் ஈடேருது எனக் கருதிக் கலக்கமடைகின்றனர். அரசன் அனுமதியோடு ஞானசம்பந்தர் தங்கியிருந்த திருமடத்தில் மந்திரத்தால் எரியூட்ட முயல்கின்றனர். தங்கள் மந்திரம் வலியற்றதைக் கண்டு தம் வன் கைகளாலேயே எரிகொளுவுகின்றனர். இதனை உணர்ந்த சம்பந்தர் அரசனைச் சிவநெறிதெருட்ட விரும்புகின்ருர். சைவர் வாழ்மடத்தில் சமணர்கள் இட்ட தீத்தழல் 'பையவே சென்று பாண்டியற்காக' என ஏவுகிருர்.

அரசனை வெப்பு நோய் வாட்டத் தொடங்குகிறது. குலச் சிறையாரும் மங்கையர்க்கரசியாரும் சமணர்கள் சம்பந்தருக்குச் செய்த தீங்கே இந்நோய்க்குக் காரணமென்கின்றனர். 'யார் என் வெப்பு நோயை அகற்றுகின்ருர்களோ, அவர்கள் கோட்பாட்டை ஏற்றுக்கொள்வேன்' என அறிவிக்கிருன் அரசன். 'சமணர்கள் தங்கள் மருந்தாலும் மந்திரத்தாலும் தீர்க்க முடியாத வெப்பு நோயைத் தீர்க்க, சம்பந்தர் திருநீற்றைத் தடவி,

'மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்திலுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருவால வாயான் திருநீறே'

என்னும் திருப்பதிகம் பாடப் பாண்டியன் வெப்பு நோய் அகல் கிறது.

அடுத்து அனல்வாதமும் புனல்வாதமும் நிகழ்கின்றன. இரு சாராரும் தங்கள் உண்மைகளை ஏட்டில் எழுதி, நெருப்பிலிடு கின்றனர்; நீரில் இடுகின்றனர். சமணர்கள் ஏடு நெருப்பில் சாம்பலாகிறது; நீரில் அடித்துச் செல்லப்படுகிறது. சம்பந்தர் ஏட்டை அனலோ புனலோ ஏதுவும் செய்ய முடியவில்லை. பாண்டியன் சிவநெறிக்கு, திருநீற்று நெறிக்குத் தலைவணங்கு கிருன். பாண்டி நாட்டு மக்கள் திருநீற்று நெறியைப் போற்று கின்றனர். தெய்வத் தமிழ்க் குழந்தையால் அயல்வழக்கு வீழ்கிறது.

சம்பந்தர் பாண்டி நாட்டில் திருநீற்ரெளி பரவச் செய்து விட்டுச் சோழநாடு திரும்புகிருர். வழியில் போதிமங்கையில்

பெரும் வரவேற்பொன்று நடைபெறுகிறது. 'பரசமயக் கோளரி வருகிறார்' என முத்துச் சின்னங்கள் முழங்குகின்றன. 'புத்தநந்தி' என்பவன் அங்குவந்து எதிர்க்கின்றான். தம் திருப்பதிகத்தால் அவனையும் வென்றொழிக்கின்றார் சம்பந்தர். தருக்க வாதத்தால் வெல்ல வந்தோரையும் வென்று சிவநெறிக்குத் திருப்புகிறார்.

பல திருக்கோவில்களையும் பாடி மீண்டும் தம்மூர் திரும்பும் போது பெற்றோர்கள் ஞானசம்பந்தருக்குத் திருமணம் நடத்த விரும்புகின்றனர். அன்றே பல அடியவர்களோடும் மண மகளோடும் சிவசோதியில் மறைகின்றார் ஞானசம்பந்தர். சிவசோதியைத் தரிசிப்பதற்கு ஏற்ப நம் கண்களைச் செம்மைப் படுத்திய பெருமான் தம் பணி முடிந்து வைகாசி மூலத்தன்று சிவபிரான் திருவடிக்கே சென்று விடுகிறார்.

இப்பெருமானின் தெய்வீக ஆற்றலையும் பதிகங்களின் மந்திர ஆற்றலையும் புலப்படுத்த பல நிகழ்ச்சிகள் இவர் வாழ்க்கையில் நிகழ்கின்றன.

திருவீழிமிழலையில் இறைவனருளால் பெற்ற 'காசு' வாசி குறைந்தமை கண்டபோது 'வாசி தீரவேகாசு நல்குவீர்' எனப்பாடிய பதிகம், வாசி தீர்ந்த காசைப்பெற்றுத் தருகிறது.

திருமறைக்காட்டில் பதிகம்பாடத் திருக்கதவம் அடைத்துக் கொள்கிறது.

பாண்டியனை வெப்பு நோய் பற்றியபோது சம்பந்தர் பாடல் அவனை வெப்பு நோயிலிருந்து விடுபடச் செய்கிறது. மேலும் இவர் பாடல். (பாச்சிலாச்சிரமத்தில்) கொல்லிமழவன் மகளை வாட்டிய முயலகன் என்னும் நோயைப் போக்குகிறது —470

செங்குன்றூரில் அடியவர்கள் பலர் அனுபவித்த சுரநோயை அகற்றுகிறது. —1249

ஆவடுதுறையில் தந்தையார் வேள்வி செய்யப் பொருள் வேண்டிப் பாடப் பூதம் ஒன்று பொற்கிழி கொடுத்துச் செல்கிறது; திருப்பட்டீச்சரத்தில் முத்துப்பந்தர் (3581) அளிக்கிறது.

முள்ளிவாய்க்கரையில் ஓடத்தைக் கரைசேர்க்கிறது.

திருவோத்தூரில் ஆண்பனையைப் பெண்பனையாக்குகிறது.

மருசலில் வணிகன் பாம்புக்கடியைப் போக்குகிறது.

மயிலாப்பூரில் பூம்பாவை உயிர் பெற்றெழச் செய்கிறது.

புத்த நந்தியையும் ஒழிக்கிறது.

## அப்பர்

அப்பர், திருமுனைப்பாடி நாட்டில் தந்தை புகழனுர்க்கும், தாய் மாதினியாருக்கும் திலகவதியாரின் இளவலாகத் தோன்றிய வர். இவர் பிள்ளைத் திருநாமம் 'மருணீக்கியார்'. இவர் இளமை நிகழ்ச்சிகள் இவர் வாழ்க்கையினை மாற்றுகின்றன. தமக் கையார் திலகவதியாருக்குக் கலிப்பகையார் என்பவரை மணம் பேசி முடிக்கின்றனர் பெற்றோர்கள். திருமணம் நடைபெறுவதற்கு முன்பே பெற்றோர் இறந்து விடுகின்றனர். திலகவதியாருக்கு மணம் பேசி வைத்திருந்த கலிப்பகையார் என்பவரும் போர்க் களத்தில் இறந்து விடுகிறார். திலகவதியாரும் உடன் உயிர் துறக்க முடிவு செய்கிறார். தம்பி மீது கொண்ட பேரன்பால் அவரைப் பேணத் தவ வாழ்க்கை மேற்கொள்கிறார். இந்நிகழ்ச்சிகளால் 'நிலையாமை' உணர்ச்சி மருணீக்கியார் உள்ளத்தில் ஏற்படுகிறது. துறவு வாழ்க்கை மேற்கொண்டு பல சமய நூற்களையும் கற்கிறார் அதன் விளைவாக, இறைவன் அருளின்மை என்றுதான் கூற வேண்டும், சமண சமயம் சார்ந்து விடுகிறார். சமண சமய நூற்கள் பலவும் கற்று அவர்களுக்குத் தலைவராகவும் விளங்குகிறார். 'தருமசேனர்' என்னும் பட்டமும் பெறுகிறார். தேரரையும் வாதில் வெல்கிறார்.

திலகவதியாரின் பிரார்த்தனை மருணீக்கியாரைத் தடுத்தாட் கொள்ள இறைவனைத் தூண்டுகிறது. இறைவன் மருள் நீக்கி யாருக்குச் சூலை நோய் கொடுத்துத் தடுத்தாட் கொள்ளுகிறுன். சமணர்களின் வித்தைகளும் மந்திரங்களும் உடல் நோய் அகல வும் பயன்படாததை உணர்கிறார். நோயிலிருந்து விடுபடவும், நிலையாவாழ்விலிருந்து நிலைத்த வாழ்வுக்குச் செல்வதற்கும், இறைவன் திருவடியினைப் பற்றி வாழ்வதே வழி என்ற எண்ணம் பிறக்கிறது. திலகவதியார் அளித்த திருநீற்றைத் தமக்குப் பெரு வாழ்வு வந்ததெனப் பணிந்து ஏற்று உடல் முழுவதும் பூசிக் கொள்கிறார். 'நீறணிந்தார் அகத்திருள் அகல்கிறது; திருக் கோவிலை வலம்வந்து வணங்குகிறார். திருவருளால் இறைவன் புகழைப் பாடவேண்டும் என்னும் உணர்வும் மேலெழுகிறது. 'கூற்றாயினவாறு' எனத் தொடங்கும் பதிகம் பாடுகிறார். சூலை அகல்கிறது. இறைவன் கருணைக் கடலில் மூழ்குகிறார். சிவானு பவத்தில் திளைத்து நிற்கும் 'ஞானியாகி' உயர்ந்து நிற்கிறார். சிவானந்தத்தில் நின்று பாடியதைக் கேட்ட இறைவனே

'நாவுக்கரசு' என்று உன் நாமம் உலகேழினும் நயப்புற மன்னுக' என்று கூறுகிறான்.

இவ்வாறு ஆட்கொள்ளப்பட்ட அரசு உடலில் சிவ சின்னங்கள் விளங்கவும், உள்ளம் சிவனைத் தியானிக்கவும், வாய் சிவன் திருப்புகழைப் பாடவும், கை உழவாரப்படைகொண்டு திருக்கோவில் தொண்டு செய்யவும் வாழ்ந்து வருகிறார்.

சமண சமயக் கோட்பாடுகளை விளக்கிப் பிறசமயத்தினரை வென்ற வாழ்ந்த தருமசேனர், சமணத்தை விடுத்துச் சைவத்திற்குத் திருப்பிவிட்டார் என அறிந்த சமணர்கள் கலக்கமடைகின்றனர். அரசனைத் தூண்டிவிட்டு அரசுக்குத் தீங்கிழைக்கின்றனர். சிவபிரானுக்கே அடிமையாகிவிட்ட திருநாவுக்கரசர், ஆணைக்கு அஞ்சவில்லை. அரசன் நீற்றறையில் இட்டபோதும், நீற்றறை இறைவன் திருவடி நிழலாகிறது. பாலுடன் நஞ்சைக் கலந்து கொடுக்கின்றனர். நஞ்சுண்ட கண்டன் அடியாருக்கு நஞ்சும் அமுதமாகிறது.நாவுக்கரசைக் கொல்ல ஏவிய வேகயானையும் அரசை வலம் வந்து தாழ்ந்து வணங்குகிறது. கல்லிற் கட்டிக் கடலில் எறிகின்றனர். திருவைந்தெழுத்து இவரைக் கரை சேர்க்கிறது. "பிறவிக்கடலையே கடக்க உதவவல்ல, திருவைந்தெழுந்து இக்கடலைக். கடத்தற்கு உதவுதல் அரிய செயலா?" எனக் கேட்கிறார் சேக்கிழார்.

இவ்வாறெல்லாம் புறத்தாக்குதல்களை இறையருளால் வென்று, ஒளிவீசி நின்ற திருநாவுக்கரசர் 'சிவநெறியை' நிலைநிறுத்த உறுதி கொள்கிறார். பல திருக்கோவில்களுக்கும் சென்று பாடுகிறார். அடிகளின் அருளாற்றலை உணர்ந்த மன்னவனும் சைவம் தழுவுகிறான். சமணப் பள்ளிகளை இடித்துச் சைவத் திருக்கோவில் எடுக்கிறான்.

திருப்பெண்ணாகடம் சென்று வணங்கும்போது, அடிகளின் மனத்தில் ஓரெண்ணம் எழுகிறது. இவ்வுடல் சில காலமேனும் அமணர்களோடு சேர்ந்து வாழ்ந்தமையின் தொடக்குண்டு விட்டது. இவ்வுடலோடு வாழ்தல் முறையன்று. இவ்வுடல் தூய்மை பெறவேண்டுமானால் சைவ முத்திரைப்பொறிக்கப்படுதல் வேண்டும் என்ற எண்ணம் எழுகிறது. தம் விருப்பத்தை இறைவனிடம் விண்ணப்பிக்கிறார். சிவபூதம் ஒன்று தோன்றி வாகீசர் திருத்தோளில் சூலமுத்திரை இடபமுத்திரையோடு பொறித்து அகல்கிறது. ஐயன் திருநடம் கும்பிடும் ஆர்வம் பெருக, தில்லை சென்று பாடுகிறார்.

ஞானசம்பந்தரை, சீகாழி சென்று வணங்குகிறார். அவரும் அரசுக்கு அஞ்சலி செய்து அப்பரே எனப் புகழ்கிறார். சோழ நாட்டுத் திருத்தலங்கள் பலவும் சென்று வணங்குகிறார். திருச் சத்தி முற்றத்தில் திருவடிதீக்கை செய்தருளுமாறு இறைவனை வேண்ட, பெருமானும் நல்லூர் வரப்பணித்துத் 'திருவடி' சூட்டி யருளுகிறார்.

திங்களூர் சென்றபோது தம்மையே (குருவாகக் கொண்டு) வணங்கிவரும் 'அப்பூதி அடிகள்' இல்லம் செல்கிறார். பாம்பு கடித்த அவர் மகனைப் பதிகம் பாடி எழுப்புகிறார். திருநாவுக்கரச ரோடு பல சிவத்தொண்டர்களும் அளவளாவுகின்றனர். அவர் கள் நடுவே வணங்கத்தக்க பெருந்தொண்டர் என்ற நிலையிலேயே தோற்றமளிக்கிறார் அப்பர் பெருமான்.

திருவீழிமிழலையில் சம்பந்தரோடு தங்கியிருந்து, அங்கு ஏற்பட்ட பஞ்சத்தை இறைவனைப்பாடி, காசு பெற்றுப் போக்கு கிறார்.

திருமறைக்காட்டில் இவர் பதிகம் பாடப், பல நாட்களாக அடைக்கப்பட்டிருந்த கதவு திறக்கிறது. எல்லாரும் திறந்த கதவு வழியே தரிசனம் செய்து மகிழ்கின்றனர்.

பழையாறையில், சமணர்கள் திருக்கோவிலில் உள்ள சிவ லிங்கத்தை மறைத்து வைத்திருப்பதைக் கண்டு மனம் கலங்கு கிறார். அவர்கள் வஞ்சனையை மாற்ற இறைவனை வேண்டுகிறார். 'வண்ணம் கண்டு நான் உம்மை வணங்கியன்றிப் போகேன்' என்று உண்ணாவிரதம் இருக்கிறார். இறைவன் ஆணையால் அரசன் சமணர்களை ஒழித்துத் திருநாவுக்கரசர் வழிபட உதவுகிறான்.

திருவானைக்கா வழியாகத் திருப்பைஞ்ஞீலி செல்லும்போது வழி நடை வருத்தத்தால் இளைத்துவிட்ட அப்பருக்கு இறைவன் வழி யில் ஒரு சோலையையும் குளத்தையும் அமைத்துக்கொண்டு கையில் கட்டுச் சோறுடன் நிற்கிறான். அப்பரின் களைப்பைப் போக்கியதோடு திருப்பைஞ்ஞீலி வரை உடன் சென்று மறை கிறான்.

தொண்டை நாட்டுத் திருத்தலங்களை வழிபட்டு வரும்போது 'பெருமான் கயிலை வீற்றிருக்கும் கோலம் காணக் காதல் பிறக் கிறது. அங்கமெல்லாம் தேய நடந்து செல்கிறார். வழியில் இறைவன் தன் திருக்கோலத்தைக் காட்டி 'இப்பொய்கையில்

மூழ்கித் திருவையாற்றில் என் கயிலைக் கோலத்தைத் தரிசிப்பாயாக' எனப்பணிக்கிருர். திருநாவுக்கரசரும் அவ்வாறே செய்ய, திருவையாற்றில் கயிலைக் காட்சியை எதிரொலிக்கும் வகையில் சராசரங்கள் அனைத்தும் 'சிவ—சத்தி' சொரூபமாகக் காட்சியளிக்கக் காண்கிருர்.

திருப்பூந்துருத்தியில் திருமடம் அமைத்துச் சில நாள் தொண்டு செய்து வருகிருர். பாண்டிநாடு சென்று திரும்பி வந்த சம்பந்தரும் சில நாள் அங்கேயே தங்கியிருக்கிருர்.

பின்னர், அப்பர் சுவாமிகள் பாண்டி நாடு சென்று பலபதிகளையும் வணங்கியவாறு பூம்புகார் வந்தடைகிருர். அங்குத் திருத்தொண்டு செய்து வரும்போது, இறைவன், அப்பர் பெருமானின் நிலைமையினை உலகுக்குணர்த்த, உழவாரப்பணி செய்து வந்த இடத்தில் பொன்னும் நவமணியும் பொலிந்திலங்கச் செய்கிருன். அவற்றைப் பருக்கைக் கற்களோடு நீர்நிலையில் வீசுகிருர். தேவமகளிர் தோன்றிக் காம உணர்வைத் தூண்ட முயன்ற போதும், சித்த நிலை திரியாது தம் திருத்தொண்டிலேயே கருத்தூன்றி நிற்கின்ருர். வந்த தேவமாதர்கள் அடிவணங்கித் திரும்புகின்றனர்.

சித்திரை—சதய நாளில் 'புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே' எனப் பாடியவாறு இறைவன் திருவடி சேர்கிருர்.

திருஞானசம்பந்தர் பாடல் போன்று அப்பர் சுவாமிகள் பாடலும், மந்திர ஆற்றல் மிக்கதாகப் பல அற்புதங்களைச் செய்யக் காண்கிருேம்.

நமச்சிவாயப் பதிகம், அடிகளைக் கடலிலிருந்து கரை சேர்க்கிறது. அவர் பதிகத்தால் திருமறைக் காட்டில், அடைக்கப்பட்ட திருக்கதவும் திறக்கிறது. மேலும் அவர் பாடல் பாம்பு கடித்த அப்பூதியடிகள் மகனை, நஞ்சு இறங்கப் பெற்று எழச் செய்கிறது; திருவீழிமிழலையில் ஏற்பட்ட பஞ்சம் நீங்கப் படிக்காசு பெற்றுத் தருகிறது.

## சுந்தரர்

திருக்கயிலையில் திருத்தொண்டு செய்து வாழ்ந்த ஆலால சுந்தரர் திருநாவலூரில் தந்தை சடையனுருக்கும், தாய் இசை ஞானியாருக்கும் மகவாகத் தோன்றி வளர்கிருர். இவர் குழந்தைப் பருவத்தினராக இருக்கும் போதே நரசிங்க முனையரையர் என்னு

மரசர், இவரை 'மகன்மை' கொள்கிறார். இவர் திருமணத்தின் போது இவரைத் தடுத்தாட்கொள்ளத் திருவுளம் பற்றுகிறான் இறைவன். மணப்பந்தலில் அந்தணர் கோலத்தில் வந்து நின்று, 'உனக்கும் எனக்கும் ஒரு வழக்குண்டு; அதனை முடித்துவிட்டு மணவினை மேற்கொள்ளலாம்' என்கிறான். சுந்தரரை நோக்கி 'நீ என் அடிமை' என்கிறான். சுந்தரரோ 'ஆசில் அந்தணர்கள் வேறோர் அந்தணர்க்கடிமையாதல் பேச இன்றுன்னைக் கேட்டோம், பித்தனோமறையோன்' என வழக்காடுகிறார். சான்றாகக் காட்டிய ஓலையினையும் கிழித்தெறிகிறார். மறையவர் கோலத்தில் வந்த இறைவனோ திருவெண்ணெய் நல்லூருக்கழைத்துச் சென்று அங்குக் கூடியிருந்த ஆதிசைவர் முன் 'மூல ஓலை' என ஒன்றைக் காட்டித் தடுத்தாட் கொள்கிறான்.

வன்மை பேசி வழக்காடிய சுந்தரரை 'வன்றொண்டன்' என்றே குறிப்பிட்டு, அருளின் நோக்கி, தம்மைப் பாடப் பணிக்கிறான் இறைவன். 'பித்தன்' என்றே சுந்தரர் தன்னை அழைத்தமையின் 'பித்தன்' என்றே தொடங்கிப் பாடக் கூறுகிறான். இறைவன் அருள் நோக்கால், அறியாமை 'இரும்புண்ட நீர் போல,' அகல, ஞான நிலையில் நின்று பாடத் தொடங்குகிறார் சுந்தரர். 'பித்தா பிறை சூடி' என்னும் பதிகத்தைப் பாடுகிறார்.

ஒவ்வொரு திருக்கோவிலுக்கும் சென்று பாடுகிறார். தில்லை செல்லும் வழியில் சித்தவடமடத்தில் இறைவன் திருவடிதீக்கை கொடுத்தருள்கின்றான். தில்லை சென்று அம்பலவாணர் தரிசனத்தில் திளைக்கிறார். அங்கு நின்றும் திருவாரூர் செல்கிறார். இறைவனே தூண்ட அவ்வூர் மக்கள் பெரும் வரவேற்புக் கொடுக்கின்றனர்.

திருவாரூர் பெருமானைப் பாடிக் கொண்டிருக்கும் போது, சுந்தரர் கேட்க, ஒரு வாக்கு எழுகிறது. 'தோழமையாக உனக்கு நம்மைத் தந்தனம்; நீ மணக்கோலம் புனைந்து மண்மேல் வேட்கை தீர விளையாடலாம் என்பதே அவ்வாக்கு. அன்று முதல் தம்பிரான் தோழராகிறார். இறைவன் திருவாக்கிற்கு ஏற்ப, திருக்கோவிலை வழிபடச் சென்ற சுந்தரர், வழிபட்டுத் திரும்பும் பரவையாரைக் கண்டு காதல் கொள்கிறார். இவர் முன்பு சுந்தரரோடு கயிலையில் திருத்தொண்டு செய்து வந்த கமலினியாரே. பரவையாருக்கும் சுந்தரரிடம் காதல் பிறக்கிறது. இறைவன் ஏவ 'அடியவர்களே' இருவருக்கும் மணம் முடித்து வைக்கின்றனர். பரவையாரோடு இன்புற்று வாழ்ந்தே சிவயோகத்திலும் திளைத்து வாழ்கிறார்.

ஒரு நாள், திருவாரூர் கோவில் தேவாசிரிய மண்டபத்தில் அடியவர்கள் பலர் ஒருங்கிருக்கக் கண்டபோது 'இவர்க்கு யான் அடியோனாகப் பண்ணும் நாள் எந்நாளோ?', எனப் பரமர்தாள் பணிகிறார்.

இறைவன் 'தில்லை வாழந்தணர்தம் அடியார்க்கு மடியேன்' என அடி எடுத்துக் கொடுக்க அதனை முதலடியாக வைத்துக் கொண்டு திருத்தொண்டத் தொகை பாடுகிறார். அடியவர்களைத் தொகையாகவும் தனியாகவும் கண்டு பாடுகிறார். 'அப்பாலும் அடிசார்ந்தார் அடியார்க்குமடியேன்' என்னும்போது 'காலம் இடம் கடந்த நிலையிலும் அடியவர்களைச் சிந்திப்பது தெளிவாகிறது.

சுந்தரர், கோட்புலி நாயனார் வேண்ட, நாட்டியத்தான் குடிக்கு எழுந்தருளுகிறார். நாயனார் சுந்தரருக்குப் பாதபூசை செய்து, தாம்பெற்ற சிங்கடியார் வனப்பகையார் என்னும் இரு பெண்களையும் அடிமையாக ஏற்றுக் கொள்ள வேண்டுகிறார். சுந்தரரோ அவர்களைத் தம் மக்களாக ஏற்றுக் கொண்டதோடு தாம் பாடிய திருப்பதிகங்களிலும் தம்மை'சிங்கடியப்பன்', வனப் பகையப்பன்' எனக் குறிப்பிடுகிறார்.

பல திருக்கோவில்களுக்கும் சென்று வணங்கி வரும்போது, திருப்பனையூரின் புறத்தே இறைவன் திருக்கூத்தோடு காட்சி கொடுத்தருள்கிறான். திருக்கோலக்காவிலும் காட்சி கொடுக்கிறான். குருகாவூர் செல்லும்போது சுந்தரரை நீர்வேட்கையும் வயிற்றுப் பசியும் வருத்த, இறைவன் தண்ணீரும் பொதிச்சோறும் கையிற்கொண்டவாறு பந்தரமைத்து, சுந்தரர் செல்லும் வழியிலே நின்று அமுதளித்து மறைகிறான். சுந்தரர் பசி போக்கத் திருக்கச்சூரில் இறைவனே இல்லம் தோறும் சென்று இரந்தும் உணவளிக்கிறான்.

காளத்திவரையிலும் சென்று வழிபட்ட சுந்தரர், அங்கிருந்த வாறு பருப்பதம் கேதாரம் போன்ற திருப்பதிகளையும் பாடுகிறார். பின்பு திருவொற்றியூர் வருகிறார், அங்கு ஆலால சுந்தரரோடு திருக்கைலையில் திருத்தொண்டு செய்து வந்த அநிந்ததையார், சங்கிலியாராகப் பிறந்து பெருமானுக்கு மலர்த்தொண்டு செய்து வருகிறார். சுந்தரருக்குச் சங்கிலியாரிடம் உள்ளம் செல்கிறது. சுநதரரை மணந்து கொள்ளுமாறு இறைவனே சங்கிலியாரிடம் கூறுகிறான். இறைவன் கூறியபடித் தம்மைப் பிரிவதில்லை என உறுதிமொழி பெற்றுக்கொண்டு மணத்துக்கு உடன்படுகிறார். ஒற்றியூர் சிவனடியார்களே மணம் முடித்து வைக்கின்றனர்.

சங்கிலியாரோடு இன்புற்றவாறு இறைபணி செய்து கொண்டிருக்க, இளவேனிற் காலம் வருகிறது. அது, திருவாரூரில் நிகழும் வசந்த விழாவைச் சுந்தரருக்கு நினைவூட்டுகிறது. பரவையார் ஆடல் பாடல்கள் கண் முன் வந்து நிற்கின்றன. திருவாரூர் பெருமானை மறந்தமைக்கு மனம் அழிகிருர். சங்கிலியாருக்குக் கொடுத்த உறுதிமொழியினையும் மதியாமல் திருவாரூர் திரும்புகிருர். ஒற்றியூரை விட்டுப் புறப்பட்டு விடுகிருர். சபதத்தை மீறியமையின் கண்ஒளி மறையவே மூர்ச்சித்து வீழ்கிருர், பிழைபொறுத்துக் கண் ஒளி வழங்கப் பாடுகிருர். கச்சியம்பதியிலே ஏகாம்பரநாதரைப் பாடும்போது ஒரு கண், ஒளி பெறுகிறது. திருத்துருத்தித் தீர்த்தத்தில் மூழ்குதலும் சுந்தரரை வருத்திய பல நோய்களும் அகல்கின்றன. திருவாரூர் வந்ததும் உரிமையோடும் வேகத்தோடும் இறைவனைப் பரவுகிருர். 'மற்றைக் கண்தான் தாராதொழிந்தால் வாழ்ந்து போதீரே' என்று ஏனைய கண்ணுக்கும் ஒளி வேண்டி உரிமையோடு பாடுகிருர். இறைவன் கருணை நோக்கம் சுந்தரர்பால் வீழ்கிறது. அவரும் சிவக்கொழுந்தின் அருளைப் பருகித் திளைக்கிருர். சுந்தரர் சங்கிலியாரை மணந்து திரும்பியுள்ளார் என்னும் செய்தி பரவையார் ஊடல் கொள்ளக் காரணமாகிறது. சுந்தரர் வேண்ட இறைவன் தூது சென்று பரவையார் ஊடலைத் தணிக்கிருன். இருவரும் சிவன் கருணைத் திறம் போற்றி வாழ்கின்றனர்.

## ஏயர்கோன்

சுந்தரர் பெருமானைத் தையல்பால் தூது விட்டார் என்ற செய்தி ஏயர்கோன் கலிக்காமர் என்னும் சிவனடியாருக்குப் பெருஞ் சீற்றத்தை விளைக்கிறது. ஏயர்கோன் சீற்றத்தை தனித்து இரண்டு அடியவர்களையும் ஒருங்கு கூட்ட எண்ணிய இறைவன், கலிக்காமருக்குச் சூலை நோயருளி, சுந்தரராலேயே இந்நோயகலும் எனவும் கூறிவிடுகின்ருன். சுந்தரரிடமும் சென்று கலிக்காமர் நோயை அகற்றக் கூறுகின்ருன். சுந்தரர், விரைந்து வருகிருர். கலிக்காமரோ, சுந்தரரால் நோயகலுதலினும், மடிந்துபடுதலே தக்கதெனக் கருதி உடைவாளால் வயிற்றைக் கிழித்து மாய்கிருர். இதனைச் சென்று கண்ட சுந்தரர், தாமும் உடைவாளால் உயிரை மாய்த்துக் கொள்ளச் செல்லும்போது, இறைவன் அருளால் கலிக்காமர் உயிர் பெற்றெழுந்து சுந்தரர் கையிலுள்ள வாளைப்பற்ற அப்பெருமானும் ஏயர்கோனை வணங்கி வீழ்கிருர். ஏயர்கோனும் சுந்தரர் குரைகழல் பணிந்து வீழ்கிருர். இருவரும் நண்பினுல் பிணைந்தவாறு திருப்புன்கூர் இறைவனைச் சென்று பணிகின்றனர்.

## சேரமான் பெருமான்

சுந்தரரைச் சேரமான் பெருமாளுக்கு நினைப்பூட்டுகின்றான் இறைவன். சேரமானும் சுந்தரரைக் காணத் திருவாரூர் வருகிறார். சுந்தரரும் சேரமானோடு நட்புக் கொண்டு பல திருப்பதிகளுக்கும் சென்று பரவுகிறார். சேரமானோடு மதுரைக்குச் சென்ற சுந்தரர் பாண்டியனோடும் அங்குத் தங்கியிருந்த சோழனோடும் திருக்கோவில்களுக்குச் சென்று வழிபட்டுப் பாடுகிறார். சோழ அரசரும் பாண்டி மன்னரும் சில திருக்கோவில்களோடு திரும்பிவிடவே சுந்தரர் சேரமானோடு மலை நாட்டிலும், தெற்கே உள்ள பிற திருக்கோவில்களிலும் சென்று வழிபடுகிறார். திருவாரூர் திரும்பி வந்து சில நாட்கள் சேரமானோடு அளவளாவி மகிழ்கிறார். சேரமான் வேண்ட அவரோடு சேரநாடு சென்று அஞ்சைக் களத்தப்பனைப் பணிகிறார். திருவாரூர் நினைவு வர மீண்டும் திருவாரூர் திரும்புகிறார். சேரமான் பெருஞ் செல்வத்தைக் கொடுத்தனுப்புகிறார். இறைவன் திருவிளையாடலால் வழியில் கவரப்பட்ட அச்செல்வமெல்லாம் திருமுருகன் பூண்டியில் சென்று பாடும்போது மீண்டும் சுந்தரரிடம் வந்து சேருகின்றன.

சிவலோக உணர்வு முதிர, மீண்டும் மலைநாடு செல்ல விருப்பம் எழுகிறது. செல்லும் வழியில் திருப்புக்கொளியூரில் முதலை விழுங்கிய பாலகனைப் பதிகம் பாடி மீட்டுத் தருகிறார். சேரநாட்டில் சேரமானால் சிறப்பாக வரவேற்கப் படுகிறார். அஞ்சைக் களத்தப்பனைச் சென்று பாடுகிறார். 'இவ்வுலகில் பாசம் அடுத்த வாழ்க்கையினை அறுத்திட' வேண்டுகிறார். சிவபெருமான் ஏவலால் தேவர்கள், சுந்தரரை வெள்ளானையில் ஏற்றிக் கயிலை திரும்புகின்றனர். சுந்தரர் கணநாதர்பதம் பெறுகிறார். மீண்டும் சிவத்தொண்டு செய்யப் பரவையாரும் சங்கிலியாரும் கமலினி அநிந்தையாகிக் கயிலை திரும்புகின்றனர். சுந்தரர் ஆலால சுந்தரராக திருக்கைலையில் திருத்தொண்டு செய்து வந்தவர் என்பதும் பரவையார் கமலினி என்னும் பெயரோடு சங்கிலியார் 'அநிந்திதை' என்னும் பெயரோடும் கைலையில் திருத்தொண்டு செய்து வந்தவர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கன,

சுந்தரர் திருப்பதிகமும் மந்திர ஆற்றல் உடையது என்பதை இவர் வாழ்க்கை வரலாறு உணர்த்தும். திருப்புக்கொளியூரில் முதலை விழுங்கிய பாலகனை இவர் பாடிய 'பதிகம்' மீட்டுத் தருகிறது.

## மணிவாசகர்

'வாதவூரர்' என்று அழைக்கப்படும் மணிவாசகர் பாண்டி நாட்டில் திருவாதவூரில் தோன்றியவர். பதினாறு ஆண்டுகளுக்

குள்ளாகவே பல கலைகளையும் கற்றுத் தெளிந்தவர் வாதவூரர் அறிவுத் திறத்தைத் தக்கோர் வாயிலாக அறிந்த பாண்டியன் 'தென்னவன் பிரமராயன்' என்ற பட்டம் அளித்து மந்திரத் தலைமையும் நல்குகிறான். அவரும் அரசன் ஆணையைத் திறம்பட நடத்தி வருகிறார்.

சைவ நூல்களில் வாதவூரர் நாட்டம் செல்கிறது. அதன் விளைவாகக் கற்ற கல்வி, வாதவூரரைச் சிவனுக்கு அடிமையாக்கு கிறது. ஆட்சியை நடத்தி வரும்போதும், தீவினையால் துன்புறு வோரைக் கண்ட போதெல்லாம் உலக வாழ்வு நிலையற்றது என்ற எண்ணம் பிறந்து வளர்கிறது. எனவே, உலகப்பற்று இல்லாம லேயே ஆட்சியை நடத்தி வருகிறார். படிப்படியாகப் பாசப் பிணிப்பு அகல்கிறது. 'குருபரன்' திருவடியைச் சென்று கூட வேண்டும் என்ற எண்ணம் பிறக்கிறது. கலைஞானம் மிக்க சைவர் களை நாடுகிறார். ஞானத்தை உபதேசிக்கும் தன்மையுடையவரை ஆராய்கிறார்.

## அரசியல் கடன்

'சோழன் கடற்கரை நகரில், வெளிநாட்டார், குதிரைகள் கொண்டுவந்துள்ளனர்' என அறிந்த பாண்டியன் குதிரை வாங்கி வர வாதவூரரை அனுப்புகிறான். மிகுதியாகப் பொன் கொடுத் தனுப்புகிறான். சிவனையே மனம் நெகிழ்ந்து தியானிக்கும் நிலையி லுள்ள வாதவூரர் சொக்கநாதரை வணங்கிவிட்டுப் பலர் உடன் வரத் திருப்பெருந்துறை செல்கிறார்.

இறைவன், வாதவூரரை ஆட்கொள்ளத் திருவுளம் பற்று கிறான். கணநாதர்களை மனித உருக்கொண்டு வரச்செய்து அவர் களோடு தானும் 'குரு' வடிவில் எழுந்தருளி வருகிறான். திருப் பெருந்துறையில் பூஞ்சோலை ஒன்றிலுள்ள குருந்தமரத்தடியில் வந்தமர்கிறான். அவ்வழியே வரும் வாதவூரர் பூஞ்சோலையில் சிவாகம ஒலி கேட்க, அங்குச் செல்கிறார். அங்கு எழுந்தருளி இருக்கும் பெருமானைத் தட்சிணாமூர்த்தியாகக் கண்டு அவருக்கு அடிமையாகிறார். பெருமானே வாதவூரருக்குச் சிவஞான போதத்தை விளக்குகிறார். 'நின்ற சிவம் ஒன்று; அதனைத் தேர்தல் ஞானம் நிகழ்போதம் தேர்ந்ததனைத் தெளிதல்' என் கிறார். உள்ளம் உருகி நிற்கும் மணிவாசகர் தம்மை அடிமையாக ஏற்றுக் கொள்ள வேண்ட, பெருமானும் திருவடி தீக்கையளித்து, மந்திரோபதேசம் செய்தருளுகிறார். வாதவூரரோ, பசுகரணங்கள் பதிகரணங்களாக,* சிவஞானியாகி நிற்கிறார். குதிரை வாங்கக் கொண்டு வந்த பொருள் தெய்வத் திருப்பணிக்காகிவிடுகிறது.

* முற்றுணத் தெய்விக உணர்வில் நிற்றலையே சைவர்கள் இவ்வாறு விளக்குவர்

நடந்ததை அறிந்த மன்னன், வாதவூரரை அழைத்து வர ஆள் அனுப்புகிறான். அனுப்பிய ஓலையைப் பிரான் சந்நிதியில் சென்று வாசிக்கிறார். இறைவனே 'ஆவணி மூலத்தன்று குதிரைகள் வரும்' என்று சென்றுகூறப் பணிக்கிறான். குருமணியை நீத்தற்கு — பிரிதற்கு — அஞ்சியவாறே அமைச்சர் கோலத்தில் பாண்டியன்பால் திரும்பி வருகிறார். இறைவன் கூறியதையே அரசனிடம் வந்து கூறுகிறார்.

திருப்பெருந்துறையில் குதிரைகள் இல்லை எனத் தூதுவர் வாயிலாக அறிந்த அரசன், வாதவூரரைச் சிறையில் அடைக்கிறான். வாதவூரர் இறைவனிடம் முறையிடுகிறார். இறைவனே ஆவணி மூலத்தன்று நரிகளைக் குதிரைகளாக்கித் தேவர்களைச் சேவகர்களாக்கி, வணிகர் கோலத்தில் வருகின்றான். குதிரைகள் வந்துவிட்டமை அறிந்த பாண்டியன் வாதவூரரை விடுவிக்கிறான். மறுநாள் குதிரைகள் நரிகளாகிக் கூக்குரலிடுகின்றன- மீண்டும் மன்னன் வாதவூரரை வருத்துகிறான். அவரோ சோமசுந்தரக் கடவுளிடம் மீண்டும் முறையிடுகிறார்.

திருவாதவூரர் துன்பத்தைப் போக்க, வைகையாற்றில் வெள்ளப் பெருக்கு ஏற்படச் செய்கிறான் இறைவன். அரசனும் திருவாதவூரருக்கு இழைத்த துன்பமே இதற்குக் காரணமென நினைத்து அவரை விடுவிக்கிறான். வைகையில் ஏற்புட்ட உடைப்பைப் போக்க வாதவூரர் தாமே முன்சென்று பணி செய்கிறார். இறைவனே பிட்டுவிற்று வாழும் சிறந்த அடியவரான 'செம்மனச் செல்வியின்' பங்கை அடைக்கத் தாமே கூலியாளாக வந்து திருவிளையாடல் புரிகிறான். அவன் விளையாட்டை அறியாத அதிகாரிகள் அவன் முறையாகக் கரையை அடைக்கவில்லை என்று பெருமானைக் கோல் கொண்டு புடைக்க, அவன் மறைந்து விடுகிறான். அவ்வடி எல்லோருடைய உடம்பிலும் படுகிறது. பாண்டியனும் குறையுணர்ந்து வாதவூரரை வணங்குகிறான்.

அடிகள் இறைவன் திருவருளை வியந்து பாடித் திருப்பெருந்துறை செல்கிறார். குருமணியாக எழுந்தருளிய பெருமான், கயிலைக்குத் திரும்பும் எண்ணத்தை வெளிப்படுத்த 'எம்மை விடுதியோ' என வீழ்ந்தயருகிறார். பெருமானே பல இடங்களுக்கும் சென்று வழிபட்டுப் பொன்னம்பலத்தில் சிவசாயுச்சியத்தை அடைவாயாக'* எனக் கூறி மறைகிறார்.

மணிவாசகரும், குருந்த மரநிழலில் இறைவன் கூறியவாறு, பீடிகை அமைத்து வணங்கி வருகிறார். அங்குள்ள பொய்கையில்

* நாயினேனை நலமலி தில்லையுள், கோலமார் பொதுவினில் வருகென ஏல என்னை ஈங்கொழித்தருளி [கீர்த்தித்திருவகவல்],

தோன்றிய செந்தழலில் அடியவர்கள் பலரும் அஞ்செழுத்தோதி அரன்கழல் சேர்கின்றனர். வாதவூரரோ, கொன்றை மரநிழலில் சிவயோகத்தில் அமர்கிருர். பின்னர் பல திருக்கோவில்களுக்கும் சென்று வணங்கி வாழ்த்தியவாறு சிதம்பரம் வருகிருர்.

தத்துவ முடிவிலாடும் தாண்டவம் தம்முள் கண்டு, நித்தமும் சென்று மன்றில் நிமலனை இறைஞ்சி நிற்கிருர்.

சைவத்தை வென்று, புத்தத்தை நிலைநிறுத்த இலங்கையிலிருந்து சிதம்பரம் வருகிருன், புத்தமதத் தலைவன் ஒருவன். பலர் முன்னிலையில் வாதவூரர் அவனேடு வாதிட்டு பெளத்தத்தை வென்று சைவத்தை நிலைநாட்டுகிருர். அங்குப் பிராணைப் பழித்த புத்தர்கள் ஊமைகளாயினர். ஈழ நாட்டு மன்னன் ஊமை மகள் பேசத் தொடங்குகிருள். அனைவரும் அம்பலவாணரை இறைஞ்சுகின்றனர்.

தென்பாண்டி நாடே சிவலோகமாகத் தோன்றிய வாதவூரருக்கு இங்குச் சிதம்பரம் சிவலோகமாகத் தோன்றுகிறது. சிவானுபவத்திலிருந்து பாடும் வாதவூரர் பாடல்களை எழுதிப் பின் சந்ததியினருக்கு வழங்க இறைவனே எழுத்தர் கோலத்தில், எழுந்தருளி வருகிருன். திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் எழுதி முடித்ததும் மறைகிருன். 'வாதவூரன் விளம்பிட எழுதும் இப்புத்தகம் மன்றுளாடல் புரிந்தவன், அம்பலவன் எழுத்தாம்' என எழுதி அம்பலத்தின் வாயிற்படியில் வைக்கிருன். அப்பாடல் பொருளை அங்குக் கூடியிருந்தோர் வினவ, வாதவூரரோ, அம்பலவாணரைச் சுட்டிக் காட்டியவாறு மறைகிருர். சிவனேடு இரண்டறக் கலந்து விடுகிருர். பாலுடன் கலந்த நீராகி விடுகிருர்.'

புத்த சமயத் தலைவனை வென்றதோடு, பிராணைப் பழித்த பெளத்தர்கள் ஊமைகளான செய்தியும், ஈழநாட்டு மன்னன் ஊமை மகள் பேசத் தொடங்கியதும் வாதவூரரின் தெய்வீக ஆற்றலைப் புலப்படுத்துகின்றன.

## சந்தானக் குரவர்கள்

சைவர்கள் — சித்தாந்த சைவர்கள் - சந்தானக்குரவர்களாகவும் நால்வரைக் கூறுவர். குருசந்தானம் அல்லது குருபரம்பரையினையே இவ்வாறு கூறுகின்றனர். மெய்கண்டார், அருணந்தி

சிவம், மறை ஞானசம்பந்தர், உமாபதி சிவம் என்னும் நால்வரும் ஆசிரியர் மாணுக்கர் அடிப்படையில் ஒருவர் பின் ஒருவராக, சித்தாந்தக் கோட்பாட்டை நமக்குத் தந்தருளியவர்கள். இவர்கள் 'வாழ்க்கை' சமயக் குரவர்கள் வாழ்க்கை போன்று பல இடங்களி லும் சுற்றித் திரிந்து, மக்களைச் சிவானந்த உணர்வில் செலுத்து வதன்று. தம்பால் வந்தடைந்தவர்களைத் தூய்மை செய்து சிவா னுபவத்தில் நெறிப்படுத்துவதே.

## மெய்கண்டார் (கி. பி, 13ஆம் நூற்றுண்டு)

இப்பெருமான் பெருமையினை,

'பொய்கண்டார் காணுப்புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதன்தாள் மேவுநாள் எந்நாளோ'

எனப்பாடுவர் தாயுமானுர். இவர் பெற்றோர்கள் பெண்ணுகடத் தில் வாழ்ந்து வந்தவர்கள். இவர் தந்தை அச்சுதகளப்பாளர். இவர் குலகுரு அருணந்தி சிவாசாரியார். அச்சுத களப்பாள ருக்கு மணமாகியும் சில ஆண்டுகளாகக் குழந்தைப் பேறில்லாம லிருந்ததால் வருந்தித் தம் குலகுருவைக் கேட்க, அவர், திருமுறையை அருச்சித்துக் கயிறு சாத்திப் பார்த்தார். அப்போது,

'பேயடையாப்பிரிவெய்தும் பிள்ளையிஞேடு உள்ள நினை
வாயினவே வரம்பெறுவர், ஐயுறவேண்டா வொன்றும்
வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையாரவர் தம்மைத் தோயாவாம் தீவினையே
—1983

என்னும் சம்பந்தர் பாடல் காட்சியளித்தது. அப்பாடலை மீண்டும் மீண்டும் படிக்கும்போது அப்பாடலிலேயே பரிகாரம் கண்டனர். வெண்காடனை வழிபட்டு வரம் பெறலாம்; குழந்தைப்பேறு கிடைக்கும் என்ற உறுதி பிறந்தது.

திருவெண்காடு சென்று தீர்த்தமாடி, கோவில் கொண்டிருக் கும் வெண்காட்டு மகாதேவரையும் பிரமவித்தியா நாயகியையும் வழிபட, அச்சுதகளப்பாளர் மனைவியார் கருவுற்று ஆண் மக வொன்றைப் பெறுகிருர். அக்குழந்தைக்கு வெண்காட்டு மகா தேவர் பெயரையே—சுவேதவனப்பெருமாள் என்னும் பெயரையே இடுகின்றனர். குடும்பநிலை காரணத்தால், சுவேதனப் பெருமாள் தம் தாய் மாமன் இல்லத்தில் திருவெண்ணெய்நல்லூரில் வாழ்ந்து வருகிருர். அவ்வழியே வந்த சிவஞானியாராகிய 'பரஞ்சோதி முனிவர்' என்னும் குரவர், சுவேதவனப் பெருமாள், குழந்தையாக

இருக்கும்போதே, திருவெண்ணெய் நல்லூரில், அவர் தீவிர பக்குவத்தை உணர்ந்து தீக்கை அளிக்கிறார். 'மெய்கண்ட தேவர்' என்னும் திருப்பெயர்சூட்டி, சிவஞானபோதத்தை உப தேசிக்கிறார். பல பிறவிகளில் செய்த ஞான முயற்சியால் சம்பந்தர் போன்று ஞானக்குழந்தையாகவே பிறந்தமெய்கண்டார் உபதேச வாயிலாகப் பெற்ற -'சிவஞானபோதத்தைப்' பொல்லாப் பிள்ளையார் அருள் துணையாக ஒரு நூலாக்கித் தருகிறார். திருவெண்ணெய் நல்லூரில் ஐப்பசி சுவாதியில் சிவபதம் அடைகிறார். இவருக்கு 49 மாணாக்கர்கள் இருந்ததாகக் கூறுவர்.

## சிவஞானபோதம்

இது சிவாகமத்தின் ஞானபாதத்தை விளக்கும் தமிழ்நூல்; 12 சூத்திரங்களை உடையது. பொது, உண்மை என இரண்டு அதிகாரங்களையும் பிரமாண இயல், இலக்கண இயல், சாதன இயல், பயனியல் என நான்கு இயல்களையும், 39 அதிகரணங்களையும் எண்பத்திரண்டு வெண்பாக்களையும் கொண்டது. சித்தாந்த உண்மைகளைச் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பது.

## அருணந்திசிவம்

பாதிவிருத்தத்தால் இப்பார் விருத்தமாக உண்மை
சாதித்தார் பொன்னடியைத் தான்பணிவ தெந்நாளோ?

என அருணந்தி சிவத்தைப்பாடுவர் தாயுமானார்.

இவர் திருத்துறையூரில் ஆதிசைவராகத் தோன்றியவர். இளமையிலேயே ஆகமநூற்களை நன்கு கற்றுச் சகலாகமபண்டிதராகச் சிறப்புடன் வாழ்ந்தவர். மெய்கண்டாரின் குலகுருவாக விளங்கிய இவர், மெய்கண்டாரின் ஞான முதிர்ச்சியினை அறிந்து அவரிடம் 'தீக்கை' பெற்றதாகக் கூறுவர். இதனை விளக்க ஒரு நிகழ்ச்சி குறிப்பிடப் படுவதுண்டு.

ஒரு நாள் மெய்கண்டார் பல அன்பர்களுக்குச் சிவஞான போத உண்மைகளைக் கூறி வருவதைப் பார்த்ததும் அவர் இளங் குழந்தை தானே என்ற அலட்சியத்தோடு "ஆணவத்தின் சொரூபத்தை, விளக்க முடியுமா எனக் கேட்டாராம்; மெய்கண்டாரோ தாங்கள் நிற்கும் நிலையே அது எனக் கூறி, 'அவர் தம் ஆணவத்தை வெல்ல உதவினார்' என்பர்.

இவரும் பல அன்பர்களுக்குத் தீக்கையளித்து, சிவஞான போத உண்மைகளை விளக்கியவர். திருத்துறையூரில் புரட்டாசி பூரத்தில் சிவபதம் அடைந்தார் என்பர்.

## இவர் இயற்றிய நூல்

1. சிவஞானசித்தியார் 2. இருபாஇருபஃது

சித்தியார்-பரபக்கம், சுபக்கம் எனும்இரண்டு பிரிவுகளை உடையது. பரபக்கத்தில் "புறச்சமய" உண்மைகளின் பொருந்தாமையினை எடுத்துரைக்கிறார். சுபக்கத்தில் சிவஞானபோத சூத்திரங்கள் பன்னிரண்டன் அடிப்படையில் பல திருவிருத்தங்கள் பாடுகிறார்.

இருபா இருபஃது சித்தாந்த உண்மைகளை, வினாவும் விடையுமாக-வெண்பா அகவல் யாப்பில் இருபது பாக்களில் பாடிய நூல்.

## மறைஞான சம்பந்தர்

பெண்ணாகடத்தில் பிறந்த இவர், அருணந்திசிவாசாரியாரின் சிறந்த மாணாக்கர். அருணந்திசிவாசாரியாரிடம் பெற்ற சித்தாந்த உண்மைகளை உமாபதி சிவத்திற்கு உபதேசம் வாயிலாக வழங்கியவர். சிதம்பரத்தை அடுத்த திருக்காளஞ்சேரியிலே சில ஆண்டுகள் மௌனமாகவிருந்து சிவபதமடைந்தவர். இவர் ஆவணி உத்திரத்திலே சிவபதம் அடைந்தார் என்பர்.

"உமாபதி சிவம்" போன்ற மாணாக்கரைத் தந்தவர் என்பதற்கு வேறாக இவர் எழுதிய நூல் எதுவும் கிடைக்கவில்லை.

## உமாபதி சிவாச்சாரியார்

"குறைவிலருள் ஞானமுதல் கொற்றங்குடியார்தம்
நறைமலர்த்தாட்கு அன்புபெற்று நாமிருப்பதெந்நாளோ"

என்பர் தாயுமானார். இவர் தில்லை மூவாயிரவரில் ஒருவர். சிதம்பரத்தையடுத்த கொற்றவன் குடி என்னும் கிராமத்தில் வசித்துவந்ததால் 'கொற்றவன்குடி உமாபதிசிவம்' என்று இவரை அழைப்பர். வேத சிவாகமங்களிலும், தமிழ் வடமொழிகளிலும் புலமைபெற்று வாழ்ந்தவர்; சிவபத்தி,அடியார் பத்தியில் சிறந்தவர்.

இவர் அம்பலவாணரைப் பூசித்துத், திரும்பும்போது ஒரு நாள், சிவிகை, தீவர்த்தி, கொடி, பரிவாரம் முதலிய விருதுகளோடு வருவதைக் கண்ட மறைஞான சம்பந்தர், 'பட்ட கட்டையிற் பகற்குருடன் போகின்றான்' எனக்கூறியதைக் கேட்டதும், கீழிறங்கி அவரை வணங்கியவாறு பின் தொடர்கிறார். அவரையே தம் குருவாக ஏற்றுச் செல்கிறார். மறைஞானசம்பந்தர் ஓரில்லத்தில் நெசவுக்கு வைத்திருந்த கூழை வாங்கிப்பருக, அவர் முழங்கைவழியே ஒழுகிய எச்சிலைத் தாமுண்டு மகிழ்கிறார். தில்லைவாழ் அந்தணர்களோ பழித்துரைக்கின்றனர். பெருமானைப் பூசிக்கவொட்டாது தடுக்கின்றனர்.

இவரிடம் சிவபிரான் திருவருள் சிறப்புற்று விளங்கியதை இவர் வாழ்க்கை நிகழ்ச்சிகள் நன்கு காட்டும். இறைவனே 'பெற்ருன் சாம்பான்' என்பவருக்குத் தீக்கையளித்து முத்தி கொடுக்குமாறு இவருக்கு ஓலை எழுதி அனுப்பியதாகக் கூறுவர்.

'அடியார்க்கெளியன் சிற்றம்பலவன் கொற்றங்
குடியார்க்கெழுதிய கைச்சீட்டு—படியின்மிசைப்
பெற்ருன் சாம்பானுக்குப் பேதமற தீக்கை செய்து
முத்தி கொடுக்க முறை'

உமாபதி சிவமும் அவ்வாறே செய்கிருர். முள்ளிச்செடி ஒன்றற்கு முத்தி கொடுத்ததாகவும் கூறுவர்.

சிதம்பரம் திருக்கோவிலில் திருவிழாவின் போது கொடி ஏற்றமுடியாதிருந்தபோது தாமே 'கொடிக்கவி' பாடி கொடி ஏறச் செய்கிருர்.

இவர் பாடிய கோயிற் புராணம், அரங்கேற்றப்படாமல், பெட்டி ஒன்றில் வைக்கப்பட்டிருந்த போது அம்பலவாணரே, தில்லை வாழந்தணர்களைக் கொண்டு அரங்கேற்றச் செய்தார் என்பர்.

சித்திரை அத்தத்தில் இவர் சிவபதம் அடைகிருர். இவர் திருக்கோவில் கொற்றவன் குடியில் இன்றுமுள்ளது.

இவர் பாடிய நூல்களுள் சிறப்பாகக் கூறப்படுவன 'சித்தாந்த அட்டகம்' என வழங்கப்படும் எட்டு நூல்கள்.

1. சிவப்பிரகாசம் 2. திருவருட்பயன் 3. வினுவெண்பா
4. போற்றிப்பஃறெடை 5. கொடிக்கவி 6. நெஞ்சுவிடுதூது
7. உண்மைநெறிவிளக்கம் 8. சங்கற்பநிராகரணம்.

கோயிற் புராணம் போன்ற நூற்களையும் இவர் இயற்றி உள்ளார்.

# 9. சித்தாந்தக் கோட்பாடு

சமயக் கோட்பாட்டைத் தத்துவ விசாரம் என்பர். இதனைத் தெய்வ நாட்டம் எனக் கூறினாலும் ஒருவகையில் 'உண்மையை' ஆராய்வது எனலாம். இவ்வாரய்ச்சியும் மக்கள் வாழ்க்கையை ஆராய்ந்து உண்மை காண்பதே. இவ்வாறு வாழ்க்கையினைப் பல ஞானியர்களும் ஆராய்ந்து பலவாக விளக்கியுள்ளனர்.

சித்தாந்தக் கோட்பாட்டை விளக்கும் அருணந்தி சிவம்,

'சித்தாந்தத்தே சிவன்தன் திருக்கடைக்கண் சேர்த்திச்
செனனம் ஒன்றிலே சீவன் முத்தராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞானவாரி
மடுத்து ஆனந்தம் பொழிந்து வரும் பிறப்பை அறுத்து
முத்தாந்தப் பாத மலர்க்கீழ் வைப்பன்.'

எனச் சித்தியாரில் குறிப்பிடுவர். ''சிவனருள் எப்போதும் நம்மைச் சேர்ந்திருக்கிறது. எடுத்த பிறப்பிலேயே நாம் சீவன் முத்தராகிவிட முடியும். இறைவனே நம்மலத்தைக் கழுவி ஞானத்தைத் தந்து இன்பத்தில் திளைக்கச் செய்வான். அதன் விளைவாகப் பிறப்பு அகலும். இறைவன் திருவடியில், முத்தி பெற்று நிலையாக வாழலாம்'' எனக் குறிப்பிடுகிறார். இப்பாட்டில் சித்தாந்தக் கோட்பாடு தெளிவாக விளக்கப்படுகிறது எனலாம்.

இப்பாட்டில் சொல்லப்பட்டுள்ள கருத்துக்களைச் சிந்திப்போம்.

1. சிவன் (இறைவன்)

சிவன் உயிர்களிடம் பேரருள் உடையவன். சிவன் 'கடைக் கண்' இதனையே உணர்த்துகிறது. அவ்வருளால், ஆன்மாக்கள் முத்தியடைய அனைத்தையும் செய்தவாறுள்ளான்.

2. சீவன் (உயிர்)

மலத்தோடு கூடியுள்ளது; எனவே பிறப்புக்கள் எடுத்த வாறுள்ளது. மலம் கழுவப்பெற்ற நிலையில் 'ஞானம்' கைகூடு கிறது. அதனால் எடுத்த பிறப்பிலேயே சீவன் முத்தராகிறது; எடுத்த பிறப்பு நீங்கியதும் திருவடிக்கீழ் நிலையான இன்பத்தில் வாழும்.

3. மலம்

ஆன்மாவைச் சூழ்ந்து கொண்டிருக்கிறது. பிறப்புக்குக் காரணமாகிறது. ஞானத்தைத் தடுத்து நிற்கிறது.

இவ்வுண்மையினையே சித்தாந்த நூற்கள் விளக்க முயல் கின்றன. ஞானியர்கள் அனுபவமும் இதனையே உணர்த்துகிறது என்பர். பொதுவாக நம் வாழ்க்கையினை ஆராய்ந்தாலும், அதனை முப்பொருள் உண்மையாக, 'சிவன், சீவன், மலம், -பதி, பசு, பாசம்' என விளக்குவதே சைவ சித்தாந்தம்.

பசு

'நமது வாழ்க்கை' என்னும்போது நாம் யார்? என்னும் வினு எழுகிறது. 'நாம்' என்று நம் உடலைச் சுட்டுவதில்லை, நம் மனத் தையும் சுட்டுவதில்லை. இவ்விரண்டனையும் இயக்குகின்ற கருத்தா வாகிய உயிரையே சுட்டுவர். 'வாழ்க்கை' என்பது உடலாலும் மனத்தாலும் இவ்வுலகோடு தொடர்பு கொள்ளும்போது உயிர் பெறும் அனுபவமே என்பர்.

1. ஒருவர் அனுபவமும் பிறிதொருவர் அனுபவமும் வேறு வேறுக இருப்பதால் உயிர்கள் பல என்பர்.
2. வேறுபட்ட அனுபவங்களைப் பெறும் நிலையில் உயிர்கள் பல நிலையின என்றும் கூறுவர்.
3. படைக்கப்பட்ட பொருள்கள் சிலகாலம் நின்று மாயும். உயிர் கள் என்றும் மாயா. எனவே அவை படைக்கப்பட்டனவல்ல எனவும் விளக்குவர்.

உயிர்கள் பல நிலையின எனக் கூறும்போது உயிர்களைத் தம் நிலையில் விளக்குவதாகக் கூற முடியாது. உயிர்கள் உலகோடு தொடர்புகொண்டு பெறும் அனுபவ அடிப்படையிலேயே கூற வேண்டும். இத்தொடர்பினையே சித்தாந்த நூற்கள் 'பாசத் தொடர்பு' எனக்கூறும். பாசத் தொடர்போடிருக்கும் உயிர்களையே 'பசு' என்பர்.

## பாசம்

உயிர்களைப் பிணித்திருப்பது என்பது பொருள். இதனைச் சைவர்கள் மூன்றாகப் பாகுபடுத்தி விளக்குவர்.

1. ஆணவம் : உயிர்களுக்கு இறைவனைக் காட்டாது மறைக்கும் ஒன்று.
2. கன்மம் : ஒருவன் செய்யும் நல்வினை தீவினைகளும் அவற்றின் பயனும்.
3. மாயை : நல்வினை தீவினை செய்தற்குக் கருவியாகவுள்ள உடலும் உலகும்.

இவ்வாறு பாகுபடுத்துவதும், 'ஆன்ம அனுபவத்தை, வாழ்க்கையை, ஆராய்ந்து கூறுவதே.

இம்மூன்று மலங்களில் உயிர்களோடு அநாதியாகவே, தொடக்க காலத்திலிருந்தே பிணிக்கும் மலம் 'ஆணவம்' எனக் கூறி அதனைச் 'சகசமலம்' என்பர். கன்மமும் மாயையும் இடையே உயிர்களிடம் வந்து சேர்ந்தவை எனக்கூறி அவற்றை 'ஆகந்துகமலம்' என்பர். இவ்விரண்டும் உயிர்கள் ஆணவப் பிடிப்பிலிருந்து விடுபடுவதற்கும் ஓரளவு உதவுவன என்பர். ஒருவன் வாழ்க்கையும் 'ஆணவத்திலிருந்து' விடுபடுவதையே நோக்கமாகக் கொண்டிருக்கவேண்டும் என்பர். இதன் பொருட்டே பிறவி அமைகிறது என்பர்.

## பிறவி

பிறப்பினை உடம்பும் அது வாழ்வதற்கேற்ற சூழலும் உயிருக்குக் கிடைப்பதென்றே விளக்குவர். உயிருக்குக் கிடைத்துள்ள உடல் உலகுக்கு, முதற்காரணமாக—material Cause—அமைவதே 'மாயை' என்பர். எனவே ஆணவத்தைப் போக்க, மாயையின் தொடர்பு ஏற்படுவதாகக் கூறுவர். உயிர்கள் பெற்றுள்ள பல்வேறு உடல் தகுதிகளையும் பல்வேறு சூழ்நிலைகளையும் எவ்வாறு விளக்குவது? என்னும் வினா எழுகின்றபோது அவை உயிர்களின் கன்மங்களுக்கு ஏற்ப அமையும் என்பர்.

## பதி

உடல், உலகுகளுக்கு முதற்காரணமாக மாயையினைக் கூறினாலும் நிமித்த காரணமாக இறைவனையே கூறுவர். இறைவன்,

உயிர்கள் மீது கொண்ட அருளால் நமக்குப் பிறப்பைத் தந்தான். தன்னிடத்தில், வேண்டும் போது பயன்படுத்தும் பரிக்கிரக சத்தியாக விருந்த மாயையினை, உயிர் வாழ்க்கைக்கு ஏற்ற உடல் உலகுகளாக அமைத்துத் தந்தான் என்பர். இறைவன் அருளால் நாம் பெற்றது பிறப்பு; இறைவன் செயலாகக் கூறும் போது அது படைப்பு.

ஆணவம் இறைவன் இவற்றின் சங்கமமே
உயிர் + + + அருள்
கன்மம் மாயை பிறப்பு

எனவே நம் வாழ்க்கையினை ஆராயும் போது, நாம் எடுத்துள்ள பிறப்பிலேயே, இறைவன், உயிர், மலம்; அல்லது பதி, பசு, பாசம் இம்மூன்றன் கூட்டுறவினைக் காண முடிகிறதென்பர். உயிர் தன்னோடு சகசமாகவே கலந்து நிற்கும். ஆணவ மலத்திலிருந்து விடுபடுவதே ஒருவன் நோக்கம். அந்நோக்கத்தை நிறைவேற்றவே பிறவி கிடைத்துள்ளது. அப்பிறவியும் இறைவனருளால் நமக்குக் கிடைத்தது என்பர். இறைவனருளால் பெற்ற பிறவியும் கருவியாற் செய்யும் செயல்களும், ஆணவத்தைக் கெடுத்து, இறைவனோடு நாம் கலந்து வாழும் பெரு வாழ்வுக்குத் துணையாக அமைய வேண்டும்.

## அருள்

அன்றாடம் நாம் வாழும் வாழ்க்கையினைச் சிந்திக்கும்போது இறைவனை மறந்து, ஆணவம் மேலோங்கி நிற்கச் செயல்கள் செய்து வாழ்கிறோம். இவ்வாழ்க்கையில் இறைவன் தொடர்புண்டா? என்ற வினா எழுகிறது. இவ்வாழ்க்கையிலும் இறைவன் தொடர்புண்டு என்பர். இறைவன் அருள் தொடர்பு படைப்பில் தொடங்கி நாம் இறுதி இலட்சியத்தை அடைவது வரையிலும் இடையின்றி உள்ளது என்பர். அருள் இரு நிலைகளில் நம்மோடு தொடர்பு கொள்கிறதென்றும், ஆணவம் முனைப்போடிருப்பது வரையிலும் அருள் மறைந்து நின்று, திரோதான சத்தியாக, நம்மோடு தொடர்பு கொள்கிறதென்றும், ஆணவம் நெகிழ்ச்சியடைந்த போது அதே அருள் வெளிப்பட்டு, சித்சத்தியாக நின்று செயல்படுகிறதென்றும் கூறுவர். நம்மோடு இறைவன் கொண்டுள்ள தொடர்பு இவ்வருள் தொடர்பே.

இறைவனருள், திரோதானமாகவிருந்து சித்சத்தியாக மாறும் நிலையினைச் 'சத்திநிபாதம்' என்பர். இஃது ஓர் அகவளர்ச்சி. இவ்வளர்ச்சி ஏற்படும்போது மலத்தொடர்பிலும் ஒரு மாற்றம் ஏற்படுகிறது.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | மாயை | கன்மம் | ஆணவம் | அருள் |
| | அசுத்தம் | நல்வினை தீவினைகள் | முனைப்பு | திரோதானம் |
| 2. | மாயை | கன்மம் | ஆணவம் | அருள் |
| | சுத்தம் | இருவினை ஒப்பு | மலபரிபாகம் | சித்சத்தி |

இவ்வாறே அத்தொடர்பினை விளக்குவர். இங்கு மலபரிபாகம், இருவினை ஒப்பு போன்றவற்றை விளக்க வேண்டும்.

## மலபரிபாகம்

மலம் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது ஆணவம் என்பதால் அதனையே இங்கு மலம் என்கிறார். பரிபாகம் என்பது முதிர்ச்சி; முதிர்ந்து சத்தி குன்றிப்போதல் என்பது பொருள். இவ்வாணவமே, இறைவனிடத்தில் பரந்து நிற்க வேண்டிய உயிரை, அணுவாக்கிச் சிறுமைப்படுத்துவது; இறைவனுக்கு அன்னிய மாணவன் என்ற செருக்கை வளர்ப்பது. தெய்வசாதனையினால், இதன் முனைப்பு நெகிழ்வதையே மலபரிபாகம் என்பர்.

## இருவினைஒப்பு

ஆணவத்தின் முனைப்பும் நெகிழ்ச்சியும் வெளிப்படுவது வினை வாயிலாக என்பர். விருப்பு வெறுப்புக்களுக்குட்பட்டு நல்வினை தீவினை செய்யும் போது, அவ்வினைகள் அவற்றின் பயனை அனுபவிக்கச் செய்து, சிவனைச் சென்றடையாமல் தடுக்கின்றன. சாதனையினால் தீவினையை விடுத்து, நல்வினையில் நாட்டம் செல்லும். படிப்படியாக ஏற்படும் அகவளர்ச்சி, நல்வினைத் தீவினைப் பயன்களை ஒப்ப நோக்கும் சம தரிசனத்தைத் தருகிறது. இதனையே 'இருவினை ஒப்பு' எனல் வேண்டும். மலபரிபாகம், இருவினை ஒப்பு இரண்டும் ஒன்றன்பின் ஒன்றாக ஏற்படுவனவல்ல. படிப்படியாக ஏற்படும் அகவளர்ச்சியின் இருவகைத் தோற்றங்களே; இவ்வக வளர்ச்சியின்போது நிகழ்வனவே.

## சத்திநிபாதம்

அருள்வீழ்ச்சி என இதற்குப் பொருள் கூறுவர். இதுவும் ஓர் அக அனுபவமே. ஆணவம் வலி ஒடுங்கும்போது, அருள் நேராக நின்று நம்மை இயக்கத் தொடங்குகிறது என்பது பொருள். அந்நிலையில் 'நம் செயல்' என்ற ஒன்றில்லை. எல்லாம் சிவன் செயலாகிறது.

இங்கு நம் உடலோடு வாழ்ந்தாலும் நம் செயல்கள், சுத்த மாயா காரியங்களின் செயல்களாகின்றன. நம் கரணங்கள்—பசுகரணங்கள், பதி—கரணங்களாகின்றன என்பர்.

இவ்வக வளர்ச்சியின் முடிவில், ஆணவம், கன்மம், மாயை, இவற்றிலிருந்து எவ்வாறு விடுபடுகிறோம் என்பதையும் விளக்குவர். மாயையினிடத்தில் சிவசத்தியும், ஆணவத்தினிடத்தில் சிவஞானமும் கன்மத்தினிடத்தில் சிவகருமமும் அமைய வாழ்க்கை, சிவானுபவமாக அமைகிறது என்பர்.

## ஆன்ம இயல்பு

இங்கு ஆன்ம இயல்பு பற்றிச் சித்தாந்தம் கூறுவதையும் குறிப்பிடவேண்டும். ஆன்மா சார்ந்ததன் வண்ணம் வாழ்வது; ஆன்மாவுக்கு அறிவு, இச்சை, செயல்கள் என்ற மூன்று சக்திகள் உண்டு; இம்மூன்று சக்திகளும் முறையாகச் செயல்படாத வாழ்க்கையே தொடக்கத்தில் இருந்தது. அறிவை ஆணவம் மறைக்க, இச்சைகளை மாயை தூண்ட, செயல்கள் பிறப்புக்குக் காரணமாக அமைய வாழ்வதை விடுத்து, மலபரிபாகத்தால் அறிவு சிவஞானமாக மலர, சத்திநிபாதத்தால் மாயையின் மயக்க மகல, இருவினையொப்பால், பேரின்பத்துக்குக் காரணமான சிவத் தொண்டில் திளைக்க வாழ்வதே வாழ்வு, சைவ வாழ்வு. அவ்வாழ்வின் முடிவில் எய்துவதே சிவப்பேறு.

ஆணவம் → சிவஞானம்
மாயை → சத்திநிபாதம் → சிவயோகம் –> சிவபோகம்
கருமம் → சிவகருமம்

இவ்வாறு சிவப்பேற்றை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் ஆன்ம யாத்திரையில் பிறிதோர் உண்மையினையும் குறிப்பிட வேண்டும், இறைவன் நிமித்தக்காரணனாகவும் மாயை முதற் காரணமாகவும் அமைய நாம் பிறவி எடுக்கிறோம் என்பர். இவ்வாறு குறிப்பிடும்போது பிறப்போடு கூடாத நிலை, பிறப்போடு கூடிய நிலை என இருநிலைகளைக் காண்கிறோம். மேலும் பிறப்பை வென்று பெருவாழ்வு வாழவேண்டும் என்னும்போது நம் ஆன்ம யாத்திரையில் மூன்று நிலைகளைக் காண்கிறோம் எனல் வேண்டும்.

| | | |
|---|---|---|
| 1. | பிறப்பொடு கூடுவதற்கு முன்னுள்ள நிலை | கேவலம் |
| 2. | பிறப்போடு கூடிய நிலை | சகலம் |
| 3. | பிறப்பை வென்ற நிலை | சுத்தம் |

என்பர். பிறப்போடு கூடுதற்கு முன்னுள்ள நிலையில் நாம் பிறப்பற்றிருந்தோம் என்ற பெருமையில்லை; நாம் முற்றாக ஆணவத்தின் பிடியிலிருந்தோம், இருளிலிருந்தோம் என்ற சிறுமையே உண்டு பிறப்பை வென்ற சுத்த நிலையே நமக்குப் பெருமை தருவது. அங்கு இறைவனருகில் இருக்கிறோம். சார்ந்ததன் வண்ணம்,

வாழும் உயிர் கேவலத்தில் ஆணவத்தைச் சேர்ந்து இருளாக விருந்தது; சுத்தத்தில் சிவத்தைச் சேர்ந்து ஒளியாக விளங்கு கிறது.

சகல நிலையில்தான் உலக வாழ்க்கையே தொடங்கப் பெறு கிறது. ஆணவத்தை அகற்ற மாயை கன்மங்களின் தொடர்பு வந்து சேர்கிறது.

'கேவல நிலை' (அனாதிகேவலம்) என்ற ஒன்று உண்மையில் ஆன்மயாத்திரையில் ஒரு மைல் கல்லாகக் கொள்ளத்தக்கதன்று; இறைவனருள் நமக்குக் கிடைக்காது போகுமானால் நாம் எந்நிலை யில் இருந்திருப்போம் என்ற கேள்விக்கு விடைகாண முயன்ற முயற்சியே அது. வாதத்திற்காக ஏற்றுப் பேசும் ஒரு கருத்தே. மேலும் கேவலஞானம்—கைவல்யஞானம்—[1] என்ற ஒன்றைப் பிறர் பேசும்போது, கேவலத்தில், தனிமையில் ஞானமில்லை, இருளே யுண்டு, இறைவன் அருளாலேயே ஞான வளர்ச்சி பெறுகிறோம் என்பதை வற்புறுத்தவும் கேவல நிலையை இவ்வாறு விளக்கி யிருக்கலாம். 'கேவலம்' ஒரு எல்லை, சிவப்பேறு மறுஎல்லை என்ற எண்ணத்தையும் வற்புறுத்துவர்.

ஆணவத்தோடு அத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோடு அத்துவிதமாகும் நாள் எந்நாளோ.

என்பர் தாயுமானார். ஆணவத்தோடு அத்துவிதமான நிலை கேவல நிலை; தாணுவினோடு அத்துவிதமான நிலை முத்திநிலை.

## மூவகைஉயிர்

ஆன்ம வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டு உயிர்களை மூன்றுவகையாகப் பாகுபடுத்துவதுமுண்டு. அவ்வாறு பேசும் போதும் சகலரிலிருந்து வளர்ச்சி அடைந்தவர்களையே குறிப்பிடுவர்.

1. சகலர்...மும்மலங்களும் உடையவர்
2. பிரளயாகலர்...ஆணவம், கன்மம் இரண்டு மலங்களுடை யவர்
3. விஞ்ஞானகலர்...ஆணவம் ஒன்றே உடையவர்; ஏனைய இரண்டு மலங்களையும் வென்றவர்.

---

1. ஆன்மா ஞானசொரூபமாகவுள்ள நிலையைக் கேவல சைதன்யம் எனக்கூறும் சைவர்களும் உண்டு.

இவ்வாறு கூறினும், விஞ்ஞானகலர், ஆணவத்தில் மயங்கிக்கிடவார் என்றும், பிரளயாகலர் சிறிது மயக்கமுடையார் என்றும், சகலர் மிகுந்த மயக்கமுடையார் என்றும் விளக்குவர். (கேவல நிலையினர் ஆணவத்தில் முற்றும் மயங்கிக் கிடப்பவர் ஆவர்.)

## பதி

இறைவனை முன்வைத்து நம் வாழ்க்கையை நினைத்துப் பார்ப்போம். இறைவன் அருளாளன். நாம் ஆணவப் பிடிப்பிலிருந்து விடுபடவே அவன் ஐந்தொழில்கள் செய்கிறன் என்பர் இவை நாம் மலத்திலிருந்து விடுபட்டு அவனைச் சென்றடைய அவன் செய்யும் அருட்செயல்களே.

1. படைத்தல் : ஆன்மாக்களுக்குத் தனுகரண—புவனபோகத்தைத் தருதல் என்பர். உயிர்களுக்கு உடலையும், அனுபவத்திற்கேற்ற சூழலையும் தருதல் என்பது பொருள்.
2. காத்தல் : அனுபவத்தில் சிலகாலம் நிற்கச் செய்தல் எனலாம்.
3. அழித்தல் : பருவுடம்பிலிருந்து உயிரைப் பிரித்தல் என்பர்.
4. மறைத்தல் : உயிர் அனுபவத்தின்போது தான் மறைந்து நிற்றல்.
5. அருளல் : வீடருளல்.

இறைவன் ஐந்தொழில்களும் ஆன்மப் பக்குவத்தையே ஆன்மயாத்திரை, அல்லது கயிலையாத்திரையினையே பிறிதொரு வகையில் விளக்குகின்றன எனலாம், இவ்வான்ம அனுபவங்களின்போதெல்லாம், இறைவனும் நம் வாழ்க்கையோடு கூடியே நிற்கிறன். அவ்வாறு நிற்கும்போது ஒன்றுகவும், வேறுகவும், உடனுகவும் நிற்கிறன் என்பர். வேருக நின்று தன்பால் ஈர்க்கின்றன்; உடனுக நின்று நம்மைப் பண்படுத்துகிறன்; ஒன்றுக நின்று இன்புறுத்துகிறன் எனலாம். இவ்வாறெல்லாம் நின்று இறைவன் நம்மை உய்யக்கொள்கிறன் என்னும்போது, வாழ்க்கை அனுபவத்தை ஒட்டியே 'இறை—இயல்பு' விளக்கப்படுவதை விளங்கிக் கொள்ளமுடிகிறது. கேவல நிலையில் வேறுகவும்; சகல நிலையில் உடனுகவும் சுத்த நிலையில் ஒன்றுகவும் உள்ளான் எனவும் கூற முடியும்.

நம் அனுபவ நிலையில் இறை இயல்பைப் பிறிதொரு வகையாகவும் விளக்குவர். அவ்வாறு விளக்கும்போது பேதம் பேதாபேதம் என்னும் உறவு நிலைகளில் விளக்குவர்.

பேதம் : இறைவன் உயிருக்கு வேருக நிற்றல். காட்சி அனுபவம் ஒன்றற்கு கண்ணொளியும் விளக்கு ஒளியும் வேறு வேருக நின்றே துணையாவது போல், உயிரும்—இறைவனும் வேறு வேருக நின்றே—ஓர் அனுபவத்தைப் பெறுதல். வேறு வேருயினும் அனுபவத்தில் 'இணைப்பு' இருக்கவே செய்கிறது.

பேதாபேதம் : ஒரு வகையில் வேருகவும் பிறிதொரு வகையில் கலந்தும் நிற்றல். ஒரு காட்சி அனுபவத்தில், உயிரும் கண்ணும் கலந்து நிற்றல், ஒரு வகையில் இரண்டாகவும், ஒரு வகையில் ஒன்ருகவும் உணரப்படுதலை உவமையாகக் கூறுவர்.

அபேதம் : வேறுபாடின்றி ஒன்ருகவிருத்தல். வாழ்க்கை அனுபவம் ஒன்றில், உயிரும் உடலும் ஒன்றிக் கலந்து நிற்பது போல், இறைவனும் உயிரும் ஒன்றி நிற்றலை அபேத உறவு என்பர். இதனையே, அத்துவித அனுபவம் என்றும் கூறுவர்.

இத்தகைய அனுபவங்களுக்கெல்லாம், இறையருளே காரணம் என்பர். மேலும் பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கு இறைவன் உயிருக்குயிராக ஒன்ருக நின்றுணர்த்துகிருன். சிறிது பக்குவம் குறைந்தவர்களுக்கு உடனுக முன்னின்றுணர்த்துகிருன். மேலும் பக்குவம் குறைந்தவர்களுக்குப் படர்க்கையிடமாக, வேருக நின்று உணர்த்துகிருன் என்பர்.

## சாதனம்

உயிர்களை முன் வைத்து அகவளர்ச்சியினைப் பேசுவதே சாதனம். இறைவன் ஐந்தொழில் நோக்கிற்கிசைய நம் வாழ்க்கையை அமைத்துக் கொள்வதென்றே கூறவேண்டும். இங்கு இறையருள் பற்றிய சிந்தனை ஒருவருக்குப் பிறக்கிறது. சாதனம் என்னும்போது சில புறச் செயல்களை நாம் கருதினுலும், உண்மையில் அருளுணர்வோடு வாழத் தலைப்படுதலே முக்கியமானது. ஆணவம் செலுத்த, உடற்கருவிகளைக் கொண்டு செயல்செய்வதை விடுத்து, அருள் செலுத்த (உடற் கருவிகளைக் கொண்டு) செயல் செய்ய வேண்டும்.

இங்கு அருளால் பெற்ற பிறவியும், கருவியாற் செய்யும் செயல்களும் ஆணவத்தைக் கெடுத்து இறைவனோடு வாழத் துணை செய்ய வேண்டும். நம்மோடு கலந்து நிற்கும் இறை-மலங்களோடு எவ்வாறு தொடர்பு வைத்துக்கொள்வதென்பதே சமய வாழ்க்கை

இவ்வாழ்க்கை மும்மலங்களும் நம்மை விட்டு விலகும் பாங்கில் அமைய வேண்டும். கன்மங்கள்—மாயை ஆணவம்—உலகியல் வாழ்க்கை. மாயை—அருள்—சாதன—வாழ்க்கை இவ்வாறு வாழும் போது மாயை கன்மங்களைக் கொண்டே ஆட்சி செலுத்திய ஆணவம் துணையின்றித் தேய்கிறது. மாயாகன்மங்களும் பந்தமாதல் இல்லை. தொண்டாகவும், தொண்டுக்கு கருவியாகவும் மலர்கின்றன.

ஒருவன் முனைப்போடு ஒரு செயலைச் செய்யும் காலத்திலும், அருள், சிந்தனையே, 'நல்வினை செய்யக் காரணம்'. இதனைப் பசு—நல்வினை, எனப் பெரியோர்கள் கூறினும் இது செய்யத் தக்க ஒன்றே. தன் முனைப்பு மாறி அருள் - உணர்வில் நின்று செய்யும் போதே அதே நல்வினை, 'பதி புண்ணியம்' என்ற முத்திரையைப் பெறுகிறது. சாத்திர மொழியில் இவ்வருள் உணர்வையே சத்திநிபாதம் என்பர்; பதிபோதம், சிவபோதம், என்பர். சாதனம் மேற்கொள்வோன் குருவிடம் தீக்கை பெற வேண்டும்.

சாதனத்தின் படிநிலைகளாகக் கூறப்படும் சரியை, கிரியை, யோக, ஞானங்கள், ஒருவன் பதிபோத வளர்ச்சியைக் காட்டுவனவே. இச்சாதனம், மாயை கன்மங்கள் சிவார்ப்பணம் ஆதலைக் காட்டுவதுடன், ஆன்மா, ஆணவப் பிடிப்பிலிருந்து விடுபட்டு இறைவனோடு கலந்து விடுதலையும் காட்டுகிறது.

| மாயை | கன்மம் | அருள் (சத்திநிபாதம்) | சிவப்பேறு | உவமை |
|---|---|---|---|---|
| | சரியை | மந்தம் | சாலோகம் | அரும்பு |
| சுத்தம் | கிரியை | மந்தம் | சாமீபம் | மலர் |
| | யோகம் | தீவிரம் | சாரூபம் | காய் |
| பதிகரணம் | ஞானம் | தீவிரதாம் | சாயுச்சியம் | கனி |

இச்சாதனத்தையே, சிவநெறி, அருள்நெறி, பக்திநெறி என்பர். மூன்று மலங்களிலிருந்தும் விடுபட்டு, உயிர்கள் சிவனைச் சேர்தல் சாதனையாலேயே என்பர்.

## ஞானம்

ஆன்ம வளர்ச்சியினை ஆன்மா பெறும் ஞானமாகவும் கூறுவர். இதனை மூன்று நிலைகளில் விளக்குவர்.

1. பாசஞானம் 2. பதிஞானம் 3. பசுஞானம்

1. *பாசஞானம்*

பாசத்தின் துணை கொண்டு, அதற்குட்பட்ட உலகியல்பை அறிதல் என்பர். மாயாகாரியமாகிய கருவிகளைக் கொண்டு அறியும்

தாலும் இறையருளும் துணை நிற்பதே. பாச உணர்வே முனைத்து நிற்கப் பெறும் அறிவு என்பதாலேயே பாசஞானம் என்கின்றனர். உலகியலறிவின் வாயிலாக ஆன்மாவின் கண் நிகழும் ஏகதேச ஞானம் என்பர்.

2. பதிஞானம்

பக்குவம் பெற்ற உயிர்கள், பாசத்தைக் கருவியாகக் கொள்ளாது தன் முனைப்பற்று, பதியையே—அருளையே—கருவியாகக் கொண்டு பெறும் அறிவு பதிஞானம். பதியைக் கருவியாகக் கொள்ளும்போது அனைத்தும் அதற்குட்பட்டு நிகழ்வதால், பதியையும் அறிகிறோம்; பசு, பாசங்களையும் அறிகிறோம் என்பர்.

3. பசுஞானம்

ஆன்மாக்கள் மாயை கருவியாக அல்லது அருள் கருவியாக ஒன்றனை அறிதலையே பொதுவாகப் பேசினும் பிறிதோர் நிலையும் ஆன்மாக்களுக்கு உண்டு என்பர். பாசத்தின் துணையை விட்டதும் ஆன்மாக்கள் பதியே துணை என்று பற்றாது தன்னை அறிந்த அளவில் நின்று விடும் நிலை ஒன்றுண்டு என்பர். இந்நிலை தற்போத முனைப்பால் ஆன்மாவின் கண் நிகழும் அறிவாதலால் இதனைப் பசுஞானம் என்பர். இது வேதாந்தக் கோட்பாட்டினர் கூறும் 'ஆன்ம போதத்தைத் தாழ்ந்த நிலையினது' என விளக்குவதாகவே தோன்றுகிறது.

இவ்வாறு மூன்று படிகளில் விளக்காது, பாச பசுஞானங்களை 'அபரஞானம்' என்றும் பதிஞானத்தைப் 'பரஞானம்' என்றும் கூறுவதுண்டு. பரஞானம் அபரஞானம் என விளக்குதல் இந்து சமயத்தின் பல பிரிவினரும் விளக்கும் ஒன்றே. இருப்பினும் முப்பொருள் உண்மையினை விளக்க உதவுகிறது என்ற வகையில், பாசஞானம், பசுஞானம், பதிஞானம் என விளக்கலே மரபாக உள்ளது.

## முப்பொருள்

நல்வாழ்க்கையோடு கலந்து நின்று அனுபவமாக அமையும் நிலையிலேயே முப்பொருள் உண்மையை விளக்குவதால் முப்பொருள் பற்றிய விளக்கங்கள் ஒன்றோடொன்று தொடர்புடையனவாகவுள்ளன. அறிவிக்காமலும் அறியும் சூக்குமசித்து பதி; அறிவித்தாலறியும் தூல சித்து பசு; அறிவித்தாலுமறியாத சடம் பாசம் என்பர். மேலும் பதி, அனாதி முத்த சித்துரு; பசு அனாதி பெத்த சித்துரு; பாசம் அனாதி சடம் என்பர்.

இம்மூன்று பொருளும் ஒன்றேடொன்று தொடர்பு பட்டிருப்பதனை, உவமை வாயிலாக விளக்கும்போது, பதி—கடல்; பசு—நீர்; பாசம்—உப்பு என்பர். பலவாக விளக்கும்போதும் இம் மூன்று பொருள்களும் நிலையானவை என்பதையே சைவ சித்தாந்தம் வற்புறுத்த விரும்புகிறது. மலம் (ஆணவம்) உயிரைச் சார்ந்தும், உயிர் இறைவனைச் சார்ந்தும் நிற்கும் என்பர்.

சித்தாந்தம் முப்பொருள் உண்மையினைப் பொருள் நிலையில் கண்டு விளக்குகிறது என்பதை விடவும் சாதாரண ஒருவனிடமிருந்து பெரிய ஞானியர் வாழ்க்கை வரையிலும் விரவியிருக்கும் வாழ்க்கைக் கூறுகளையே விளக்குகிறது எனல் வேண்டும்.

தாயுமானவர் பாடல்கள் இரண்டு, சித்தாந்தக் கோட்பாட்டை நன்கு விளக்குமாறுள்ளன.

1. காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற கண்ணிலாக் குழவியைப் போல்
கட்டுண்டு இருந்தவெமை வெளியில்விட்டு அல்லலாங் காப்பிட்டு அதற்கிசைந்த
பேரிட்டு மெய்யென்று பேசு பாம் பொய்யுடல் பெலக்க விளையமுதூட்டிப்
பெரிய புவனத்திடை போக்கு வரவுறுகின்ற பெரிய விளை யாட்டமைத்திட்டு
ஏரிட்ட தன் சுருதி மொழி தப்பில் நமனை விட்டு இடருற உருக்கி இடர் தீர்த்து
இரவு பகலில்லாத பேரின்ப வீட்டினில் இசைந்து துயில் கொண்மின் என்று
ஓரிட்ட உலகன்னை வடிவான எந்தையே சித்தாந்த முத்தி முதலே
சிரிகிரி விளங்கவரு தட்சிணா மூர்த்தியே சின்மயானந்த குருவே—6

2. உன்னிலையும் என்னிலையும் ஒரு நிலை என கிடந்து உளறிடும் அவத்தையாகி
உருவுதான் காட்டாத ஆணவமும் ஒளிகண்டு ஒளிக் கின்ற இருள் என்னவே
தன்னிலைமை காட்டா தொருங்க இருவினையினுல் தாவு சுகதுக்கவேலை
தட்டழிய, முற்றுமில்லா மாயையதனுல் தடித்து அகில பேதமான

முன்னிலை ஒழிந்திட அகண்டிதாகாரமாய் மூதறிவு மேலுதிப்ப
முன்பின்னொடு கீழ்மேல் நடுபக்கம் என்னுமல் முற்று
மானந்த நிறைவே
என்னிலைமையாய் நிற்க இயல்புகூர் அருள்வடிவம் எந்நாளும்
வாழிவாழி
இகபரம் இரண்டினும் உயிரினுக்குயிராகி எங்கும் நிறை
கின்ற பொருளே. —10